மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபை வெளியீடு. ௨.

# உதயன சரிதம்.



APPROVED BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE.
*(Vide Fort St. George Gazette, Part I B,*
*No. 18. Dated 8th May 1928.)*

ஆசிரியர்,
பண்டிதமணி: மு. கதிரேசச்செட்டியார்.

இதே பதிப்பு உதயண சரிதத்தில் இருக்கிறது.
இது மு. கதிரேசன் செட்டியாருக்கு.

உ

கணபதி துணை.

# உதயன சரிதம்.

---

மொழி பெயர்ப்பாசிரியர்
பண்டிதமணி. மு. கதிரேசச்செட்டியார்
**Lecturer in Tamil, Annamalai University.**



சன்மார்க்க சபை
மேலைச்சிவபுரி.






மூன்றாம் பதிப்பு]  **1938.**  [விலை அணா **12.**



PANDITHAMANI,

M. KATHIRESA CHETTIAR.

*Lecturer in Tamil, Annamalai University.*



PANDITHAMANI,

M. KATHIRESA CHETTIAR.

*Lecturer in Tamil, Annamalai University.*

# அபிப்பிராய பத்திரங்கள்.

சென்னை மகாமகோபாத்தியாய பிரமஸ்ரீ
வே. சாமிநாதையரவர்கள்.

மகிபாலன்பட்டி வித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ மு. கதிரேசன் செட்டியாரவர்க ளியற்றிய 'உதயன சரிதம்' என்னும் வசன நூலை முற்றும் படித்துப் பார்த்து இன்புற்றேன்.

வடமொழியில் மிக விரிவாகப் பரந்து கிடக்கும் இச்சரிதத்தை யாவரும் எளிதிலுணரும்படி சுருக்க மாகத் தெள்ளிய இனிய நன்னடையிற் பலவகை யான சுவைகளை அங்கங்கே அமைத்துப் பழைய தமிழ்ச் செய்யுட்களிலும், பண்டை உரைகளிலும், காணப்படும் இனிய வாக்கியங்களை உரிய இடங்களிற் சேர்த்துத் தமிழர்க்கு ஒரு நல்விருந்தாக இவர்கள் இயற்றியிருத்தல் மிகப் பாராட்டற்பாலது. இதில், இடையிடையே வாய்த்த இடங்களில் உலகத்தாரை நோக்கிப் புலப்படுத்தும் நீதிவாக்கியங்களும், ஒவ்வொரு பகுதியின் இறுதியிற் கதையின் சாரத்தைச் சுருக்கித் தெரிவித்திருக்கும் வெண்பாக்களும் உரிய இடங்களிற் சிவபெருமானுடைய திருவருளின் பெருமையைப் புலப்படுத்திய பகுதிகளும் அறிந்து இன்புறற்பாலன,

செய்யுள் நடையாகவே நூல்களியற்றும் ஆற்ற லிருந்தும் வசன நடையாக இச்சரிதத்தை இவர்கள் இயற்றியதற்குக் காரணம் எல்லோரிடத்துமுள்ள அன் பின் மிகுதியென்றே சொல்லவேண்டும்.

கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்த இவர்கள் இது போன்ற இன்னும் பற்பலவாகிய சொற்பணிகளைச் செய்து கொண்டு பல காலம் மிக்க புகழுடன் இந்நிலவுல கில் வாழ்ந்து விளங்கும்படி செய்வித்தருளும் வண்ணம் இறைவன் திருவடிகளைச் சிந்திக்கின்றேன்.

"இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்"

என்னும் பெரியோர் திருவாக்கிற்கிலக்காக இவ்வரிய காரியத்தைச் செய்து நிறைவேற்றும்படி தேர்ந் தெடுத்து இவர்களைத் தூண்டிய மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபைத் தலைவர்களுடைய தமிழபிமானமும் வண்மையும் மிகப் பாராட்டற்பாலன.

தியாகராஜ விலாசம்.
திருவட்டீசுவரன் பேட்டை.
28—3—24.

இங்ஙனம்,

வே. சாமிநாதையர்.

௳

சென்னை நியாய கலாசாலைப் போராசிரியரும்,
கல்கற்று தாகூர்ச் சட்ட விரிவுரைகாரருமாகிய
Advocate, திருவாளர்,
கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் M. A., M. L.

---

தங்கள் அருமைச் சிறுநூல் கைவரப்பெற்று மகிழ்ந்தேன். அது, தமிழ்ப் பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய பெருங்கதைக்குத் தோற்றுவாயாக அமைந்துள்ளது. ஆதலால், தமிழ் கற்பார்க்குப் பெருநூலின் நயத்தை எளிதில் நன்கு விளக்குஞ் சீர்மை மிக்கது. வடமொழிச் சொற்றொடர்களைத் தூய செந்தமிழ் நலங்கனியும் வண்ணம் மொழி பெயர்த்துள்ள தங்கள் புலமைத்திறன் கற்போருள்ளத்தைக் கவரவல்லது. மொழிபெயர்ப்பா னமைந்த உரைநடை நூல்களுள் இந்நூல் தலை நின்று விளங்குந் தகுதி யுடையது.

அரசாங்கப் பெருமை, அமைச்சர் திறமைப் பாலது என்பதையும், கற்பின் சீர்மை மாசுபடாது போற்றற்குரியது என்பதையும், அருளொழுக்கம் அளவில் சிறப்புடைய தென்பதையும், அனைய பிற வுண்மைகளையும் நிலைநாட்டு முகத்தான் அறிவுக்கு நல்லுணவு தரவல்ல "உதயனன் கதை" போன்ற நூல்களை கலாசாலை மாணவர்க்குப் பெரிதும் பயன் படுதற்குரிய பாடங்களாக நியமிக்கற்பாலன.

சென்னை.
26—3—1924.

இங்ஙனம்,
K. சுப்பிரமணியன்.

---

## இராமநாதபுரம் ஸேது ஸமஸ்தான வித்துவான்
## மகா-௱-௱ஸ்ரீ உப. வே.
## ரா. இராகவையங்காரவர்கள்.

---

மகிபாலன்பட்டி வித்துவான் கதிரேசன் செட்டியார் தமிழிற் சிறந்த புலமைவாய்ந்தவர்; வடமொழியுணர்ச்சி மிக்கவர்; அரிய பெரிய நூனயங்களைத் தம் மதிநுட்பத்தா னன்காராய்ந்து தெளிந்து கல்விக் கழகத்துப் பலரும் வியக்க எடுத்து வழங்குஞ் சொல்வன்மையினிதுடையர்; நகரவணிக நன்மக்களுநர்கள் பலவற்றுட் டமிழ்க்கல்வி வளர்தற்குக் காரணமான கழகங்கள், கல்லூரிகள் நிலைபெறுவித்தற்கட் டம்மினத்தாரைத் தூண்டியவர்; ஆங்காங்குள்ள புலவர் பெரியாரை அழைப்பித்துத் தங்குல தனவான்களைக் கொண்டு உபகாரம் புரிவித்து மகிழ்விப்பவர்; தம்மினத்தார் அறிவினும் ஒழுக்கத்தினும் திருந்திப் புகழ் எய்தி வாழ்தற்பொருட்டுத் தம் மனமொழி மெய்யொத்து முயல்கிற்பவர். செல்வப் பொருளே யீட்டும் வணிக்குலம் இவரைப் பெற்றுக் கல்விப் பொருளையும் ஈட்ட முயல்வது காண்டற்கினியது.

இவர் தமிழிற் சிறந்த வசனநடையாற் பொலிவு பெற்ற கத்திய நூல்களில்லாத குறையைத் தீர்க்கக் கருதி "சுலோசனை" "உதயன சரிதம்" என இரண்டு நூல்களை வடமொழியினின்று மொழி பெயர்த்துதவி யுள்ளனர். நிரம்பிய கல்வியுடைய இப்

பெருந்தகையாளரால் இயற்றியளிக்கப்பட்ட இந்நூல்கள் செவ்விய விழுமிய தீந்தமிழ்மொழிகள் மலிந்து குறித்த பொருளை யினிது விளக்கிச் செறலாற் கற்பார்க்குக் கழிபெருவகை பயக்கும் பெருவிருந்தாதலொருதலை.

இந்நல்லறிவாளர் தம்மினத்தவர்க்கும் புலவர்க்கும் பிறர்க்கும் இங்ஙனமே பல்லூழிநாளும் பயனுற நின்று வாழும்வண்ணம் இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேம்.

இங்ஙனம்,

இராமநாதபுரம், 14—4—24. ரா. இராகவையங்கார், சேதுஸமஸ்தான வித்துவான்.



ஸ்ரீ

உ

## செந்தமிழ், தொகுதி உஉ. பகுதி ரு.

..............................கதை படிக்கத் தொடங்கும் சிறுவர்களும் மனங் கொள்ளற் கேற்றவாறு வாக்கியங் களைச் சிறுதொடராக வமைத்தும், செய்யுளிலும் சிறிது பயிலுமாறு இடையிடையே சில வெண்பாக்களியற்றிச் சேர்த்தும் இருப்பது பாராட்டத்தக்கது. செட்டியா ரவர்கள் கல்வித்திறமையை நோக்குங்கால் இது மிகச் சிறியகாரியமாயிருப்பினும் சிறுவர்களுக்கெல்லாம் கல்வி யறிவளிக்கும் சிறப்பினை நோக்குங்கால் பெரிய காரியமே யாம்.

........................

---

## மதுரை ஹைகோர்ட்டு வக்கீல் திருவாளர் **S. S**, பாரதியாரவர்கள் M. A., B. L.

........................ இந்நூலின் உரைநடை இனிமை யோடு எளிதில் தெளிவுறுதலும் ஆசிரியர் கருத்தை யினிது வெளிப்படுத்துகின்றது. படிக்குங்கால் மொழி பெயர்ப்பு நூலென்னும் உணர்வெழவிடாது படிப் பவர்மனத்தை யொழுகு தெள்ளினிமையாற் களிப்பிக் குஞ் செவ்வி பாராட்டற்பாலது. அமைச்சு நல்லற மாதி நலம்பல பொதுளிச்சிறக்குமிந்நூலில் எம்மனோர் மனத்தை முழுதுங் கவர்வது கற்புயர் காதலாகும்.

..............

---

உ

கணபதி துணை.

# முன்னுரை.

* "உதயன சரிதம்" என்னும் இது வற்சநாட்டிலே கௌசாம்பி நகரத்திலே, பாண்டவ குலத்திலே, சகச்சிராணீகன் என்னும் வேந்தற்கு மிருகாவதிபாற் றோன்றிய உதயனனது வரலாற்றை விரித்தும் அவன் புதல்வன் நரவாகனதத்தன் வரலாற்றைச் சுருக்கியுங் கூறுவதாகும்.

இதன் சுருக்கம் வருமாறு:—"திலோத்தமை சாபத்தாற் சகச்சிராணீகன் மிருகாவதியைப் பதினான்கு யாண்டு பிரிந்திருக்க நேர்ந்துழி, மிருகாவதி இமயமலைச் சாரலிற் சமதக்கினி முனிவர் ஆச்சிரமத்திற்றங்கி அருமருந்தன்ன உதயனனென்னும் புதல்வனை யீன்றாள். முனிவரால் உதயனன் கல்விப் பயிற்சி செய்யப்பெற்று

* "உதயனன்" என்பது பிராகிருதத்தில் உதயணன் என்று வரும். தமிழிலுள்ள பெருங்கதை முதலியவற்றுள், பிராகிருதத்துள்ள வண்ணமே "உதயணன்" என்று கூறப் பட்டுள்ளது. இச்சரிதம் வடமொழியினின்று மொழிபெயர்க்கப் படுதலின், வடமொழியிலுள்ளபடியே "உதயனன்" என்று ஈண்டு வழங்கப்பட்டுள்ளது.

எல்லாக் கலைகளிலும் சிறந்து விளங்கினான். சாபந்தீர்ந்துழி அக்காட்டில் உதயனன் வள்ளன்மை காரணமாக "இன்னிசை" யென்னும் யாழைப் பெற்றுத் தந்தையுணர்ந்துவந் தழைப்பத் தாயோடு தன் நகரமெய்தி மகிழ்ந்தான். இவ்வுதயனன் காளைப் பருவமுற்றுழி, இவன் எழில் குணஞ் செயல்களைக் கேள்வியுற்று, உச்சயினி நகரத்தரசன் சண்டமகாசேனன் என்பான், தன் அருமை மகள் வாசவதத்தையை இவற்கு மணஞ் செய்து கொடுக்கத் துணிந்து, தன்மகட்கு யாழ்பயிற்று தலைத் தலைக்கீடாகக்கொண்டு தூதன் முகமாக உதயனனை யழைப்ப, வரவுடன்படாமை கண்டு பொறியானை யொன்று நிருமித்துக் காட்டிற் றிரியச் செய்தான். அதனை யுண்மையெனக்கேட்டு வேட்டை விருப்பத்தாற் போந்த உதயனன் வஞ்சத்தாற் கொணரப்பட்டுச் சிறைக்கண் யாழ்பயிற்றும் வினைஞனாயினான். பின், அமைச்சர்களுட் சிறந்த யௌகந்தராயணன் செய்த அரிய சூழ்ச்சிச் செயல்களால், உதயனன் நள்ளிரவில், தன் மாட்டுக் காதற்கிழமை பூண்டுள்ள வாசவதத்தையை அழைத்துக்கொண்டு இடையூற்றைக் கடந்து தன் நகரம் புக்கு அவளை மணஞ்செய்து கொண்டான். இவ்வாழ்க்கை நிகழ்வுழி, இவன் அரசியற்செல்வத்தைப் பெருக்கக் கருதிய யௌகந்தராயணன், மகதராசன் மகள் பதுமாவதியை உதயனன் மணஞ்செய்து கோடற்குச் சூழ்ந்து, இலாவாணகம் என்னும் இன்ப நிலத்தில் வேந்தனை யிருத்தி, வாசவதத்தையை "எரிவாய்ப்பட்டிறந்தாள்" என்னுஞ் செய்தியை வெளிப்படுத்திப்

பிரித்துத் தனித்துறையுங் காலத்தும், கற்பின் சான்ருூம் வண்ணம் அவளைப் பதுமாவதி பக்கல் சேர்த்தான். வாசவதத்தையின் பிரிவால் வருந்திய உதயனனைத் தேற்றி, மகதராசன்மகள் பதுமாவதியைமணக்க உடன் படுத்தி, அவண் மன்றலையும் முடிப்பித்தான். மணக் காலத்தில் பதுமாவதியின்பால் வாடுதலில்லாத மலர் மாலையையும் அழகிய திலகத்தையும் உதயனன் கண்டு, அவற்ருலேன பதுமாவதியுடன் தன் நகரிற் போந்து ஒரு புறத்திருந்த வாசவதத்தையைக் கண்டு இன்புற்ருன். பின், இடையர்களாற் காட்டில், வைப்பு நிதியும், தன் முன்ஞேரின் அரியணையும் பெற்றுச் சிவவழிபாடு புரிந்து, திசைவென்றி குறித்துப் புறப்பட்டு, அமைச் சன் மாமன்மார் முதலியோர் உதவியால் நாற்றிசைக் கண்ணுள்ளாரையும் வென்று புகழோங்கப் பெற்ருன். பின்னர், புதல்வர்ப்பேறு குறித்து நாரதமுனிவர் உப தேசத்தாற் சிவபிரானை வழிபட்டு அப்பெருமான் திரு வருளால் நரவாகனதத்தன் என்னும் மகனைப் பெற்று இன்புற்ருன். இதன்பின் தக்கசிலை நாட்டின் தலைவஞ கிய கலிங்கதத்தன் மகள் கலிங்கசேனை யென்பாள் நள கூபரன் மனைவியாகிய சோமப்பிரபையோடு நட்புமேற் கொண்டு அவளால் உதயனன் பெருமையைக் கேட்டு அவனை மணஞ்செய்துகொள்ள விரும்பிக் கௌசாம்பி நகரம் எய்திஞள். அவள் எழில்நலங்கண்டு காமுற்று உதயனனும் மன்றல்கொள எண்ணிஞன். இதனை யுணர்ந்த அமைச்சர்தலைவஞகிய யௌகந்தராயணன் இவ்வதுவையால் வாசவதத்தை முதலியோர்க்கு ஏதம்

விளையுமென்றெண்ணிப் பலவகைச் சூழ்ச்சிகளால் உதயனன் மனத்தை வேறுபடுத்தி அம்மன்றலைத் தடைப்படுத்தினான். அதன்பின் கலிங்கசேனை உதயனன் வேடந்தாங்கித் தன்னையடைந்த மதனவேகன் என்னும் வித்தியாதரனோடு கூடி இரதியின் கூறாகிய மதனமஞ்சுகையைப் பெற்றாள். அப்பெண்மணி உருவம் பருவம் குணமுதலிய எல்லாவற்றானும் நரவாகனதத்தன் இல்லக் கிழத்தியாதற்குத் தகுதியுடையாளென்று கண்டு அவளை அவற்கு மணஞ்செய்வித்தனர். மணந்து இன்புற்றிருக்குங்கால் மதனமஞ்சுகையை மானசவேகன் என்னும் வித்தியாதரன் கரவிற் கவர்ந்து சென்றான். அவன் தங்கையாகிய வேகவதியால் அவ்வுண்மையையுணர்ந்த நரவாகனதத்தன் அவளுதவியால் மீண்டும் மதனமஞ்சுகையைப் பெற்று இன்புற்றான். பின்னர்ப் பரமசிவன்றிருவருள் வலத்தால் வித்தியாதரருலகஞ் சென்று பலவித்தியாதரமகளிரை மணந்து பகைவரெல்லோரையும் வென்று இடபகிரியில் அகம்பனன் என்னும் வித்தியாதர இராச இருடியால் மகாபிடேகம் பெற்று எல்லா வித்தியாதரர்களுக்கும் சக்கரவர்த்தியாக விளங்கினான்" என்பதே.

இச்சரிதத்திற் சிறப்பாகக் கருதி இன்புறற்பாலது அமைச்சிலக்கணம் முழுதும் அமையப்பெற்ற பேரறிஞனாகிய யௌகந்தராயணனது சூழ்ச்சித்திறனேயாகும். இவன் தன்றலைவன் அரசியல் விரிவுறச்செய்த அரிய செயல்கள் மிகப்பாராட்டற்பாலன. எரிவாய்ப்பட்டிறந்தாளென்று வெளிப்படுத்திப் பிரிக்கப்பட்ட வாசவதத்

தையைப் பின் அரசற்கு மனைவியாம் நிலையிலுள்ள பதுமாவதியின் பக்கல் இயைத்தது, அவ் வாசவதத்தை யின் அரிய கற்பொழுக்கத்திற் பின் வேந்தன் ஐயுறுமை கருதியேயாம். இந்நிகழ்ச்சி மிக இன்புறற்பாலது. இதன்கண், அரசர்க்கு வேட்டையாடன் முதலியவற் றால் வருந்தீங்கும், அறிவிற்சிறந்த அமைச்சர் சொல்வழி நிற்றலால்வரும் நலன்களும், சிறந்த அமைச்சனின் நுண்ணிய மதிநுட்பமும், அறம்வழாஅ நிலையும், அரிய சூழ்ச்சி முதலிய செயல்களும், இடுக்கட்காலத்தும் மக ளிர் கற்பு மாசுபடலாகாதென்பதும், ஒருவற்கமைந்த இருமனைவியரின் அன்பு கெழீஇய ஒற்றுமையும், மக ளிர்க்கு வேண்டும் உயர்குணங்களும், அரசியல் விரிவ தற்குச் செயற்பாலன இன்னவென்பதும், சிவ வழி பாட்டின் பயனும், கல்வி வீரம் முதலிய பெருமிதங்கள் அரசர்க்கின்றியமையாதன வென்பதும், பிறவும் புலப்படுவனவாம்.

இத்தகைய நலம் பல கனிந்து திகழும் இச்சரிதம் வடமொழிக்கட் பலபுலவர்களாலும் காவிய முதலிய வடி விற் கூறப்பட்டுள்ளது; சோமதேவர் என்னும் கவியாற் செய்யப்பட்ட கதாசரிற்சாகரம் என்னும் கிரந்தத்தி லும், அவர்க்குப் பிரமாணமாக முன்னுள்ள குணாட்டிய ராற் செய்யப்பட்ட பிருகற்கதையிலும் விரித்துரைக்கப் பட்டுள்ளது. காளிதாசற்கு முற்பட்ட 'பாசன்" என் னும் நாடககவி யியற்றிய "சொப்பன வாசவதத்தம்", "பிரதிஞ்ஞா யௌகந்தராயணம்" என்னும் நாடகங்கள் இச் சரிதப்பகுதிகளையே நுதலுவன. தமிழிற் பண்

டைக் காப்பியமாகிய "பெருங்கதை" என்பதனுள்ளும் இச் சரிதமே சில வேறுபாட்டுடன் கூறப்பட்டுள்ளது. அத் தமிழ்ப் பெருங்கதை, கிடைத்தற்கரிய பண்டைநூல்களைச் செப்பனிட்டுப் பல்லாண்டுகளாக வெளிப்படுத்தித் தமிழ்த் தெய்வத்தை யலங்கரித்துவரும் பெரியோராகிய மகா மகோபாத்தியாய டாக்டர் ஸ்ரீ வே. சாமிநாதையரவர்களால், பற்பல ஆராய்ச்சிகளுடன் அச்சிடப்பட்டு வெளிப்படுத்தப் பட்டுள்ளது. அதன்கண் இச்சரித இனிமையைத் தமிழ்ச் செய்யுளாகிய அமுதத்திற்கண்டு சுவைத் தின்புற்றுக் கதை நிகழ்ச்சியின் ஒழுங்கையும் உணர்ந்து கொள்ளலாம்.

பல்லாண்டுகளின் முன்னர் மதுரையினின்று திங்கடோறும் வெளிப்போந்த "ஸஹ்ருதயா" என்னும் வடமொழிப் பத்திரிகையில், வடமொழிப் புலமை மிக்க பண்டித ஸ்ரீ வே. அனந்தாசாரியாரவர்களால் இனிமை மிக்க வடமொழி வசனவடிவில் எழுதப்பட்டு வெளிவந்த இச்சரிதம், புதுக்கோட்டை ஸமஸ்தானத்தைச் சார்ந்த மேலைச்சிவபுரிக் கண்ணுள்ள சன்மார்க்க சபையாரின் விருப்பத்தின்படி தமிழில் மொழி பெயர்த் தெழுதப்பட்டது.

இதன் முதற்பதிப்பு 1924-ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1925-ஆம் ஆண்டிலும் பதிப்பிக்கப்பெற்று வெளியாயின இஃது அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டுச் சென்னை மாகாணத்திலும் சிலோனிலும் உள்ள பற்பல உயர்தரக் கலாசாலைகளில் பாட

புத்தகமாக வைக்கப்பெற்றுள்ளது. பிரதிகள் முற்றும் செலவாயினமையால் இப்பொழுது மூன்ரும்பதிப்பாகப் பதிப்பிக்கலாயிற்று. பயிலும் மாணவர்க்குப் பெரிதும் பயன்படும் வண்ணம் முன்னைப் பதிப்புக்களில்லாத பெயர் விளக்கமும் அருஞ்பதக் குறிப்பும் பல அன்பர்களின் வேண்டுகோட்படி இப் பதிப்பிற் சேர்க்கப் பட்டுள்ளன.

இன்னோரன்ன நற்செயல்களில் ஊக்கித் தமிழுலகுக்குப் பயன் விளைவித்து வரும் இச் சன்மார்க்க சபையின் உதவி மிகப் பாராட்டற்பாலது. இச் சபை பற்பல மாணவர்க்குத் தமிழ்க் கல்வி பயிற்றியும், பல பண்டிதமணிகளின் அரிய சொற்பொழிவுகளால் உலகத்தவரை நன்னெறிப் படுத்தியும், உதவிவருவதோடு வடமொழிகளிலுள்ள அரிய நூல்களைத் தமிழில் வெளிப்படுத்தி அதனாலும் தமிழ்மக்கள் இன்புறுதற்குரிய செயலின் முற்பட்டிருப்பது போற்றற்பாலதே.

மகிபாலன்பட்டி<br>வெகுதானிய௵<br>வைகாசி௴ ௨௳

அன்பன்,

மு. கதிரேசன்.



# பெயர் விளக்கம்.

அகம்பணன்:—மந்தராதேவ னென்னும் வித்தியாதரனுடைய தந்தையான இராஜ ரிஷி; தன் புதல்வி மந்தாரதேவியை நரவாகனதத்தனுக்கு மணஞ்செய்து கொடுத்து அவனுக்கு இடபகிரியில் முடி சூட்டுக் கொண்டாட்டம் நிறைவேற்றும்படி வித்தியாதரர்களுக்குக் கட்டளை யிட்டவன்.

அங்காரகன்:—அங்காரவதியின் தந்தை; அசுரர் தலைவன்; தவ வன்மையால் வச்சிரப்படையாலும் பிளக்க வொண்ணாத யாக்கையைப் பெற்றவன்; அரச கன்னியர் பலரைப் பணி செய்தற் பொருட்டு வஞ்சித்துக் கொணர்ந்தவன்; தன் புதல்வி அங்காரவதியினிடத்துக் காதல் கொண்ட சண்டமகாசேனனால் சிவபிரானை வழிபடுங்காற் கொல்லப்பட்டவன்.

அங்காரவதி.—சண்டமகாசேனன் மனைவி; அவனிடத்துக் கொண்ட காதலால் தன் தந்தை அங்காரகனைக் கொலைசெய்தற்கு அம்மன்னன் வழிநின்றவள்; இந்திரனருளால் வாசவதத்தையை ஈன்றவள்.

அசிநாவதி:—நரவாகனதத்தனால் இருசியமுக மலையில் மணக்கப் பெற்றவள்; தநவதியின் மகள்; இவளைச் சார்ந்தவர்களின் துணையாலேதான் நரவாகன தத்தன் வித்தியாதர சக்கரவர்த்தியானான்.

அத்தினபுரம்:—சதானீகனுக்கு முன்னுள்ள பாண்டவகுல மன்னரிருந்து அரசு செய்த நகர்; கங்கைக் கரையிலுள்ளது.

அபிமன்யு:—உதயனன் மரபில் வந்த முன்னோன்; அருச்சுனனுக்குச் சுபத்திரை வயிற்றிற் பிறந்தவன்; பரிட்சித்துவின் தந்தை; பரிட்சித்து உத்தரை வயிற்றிற் கருவாயிருந்தகாலையில் பாரதப் போரில் சயந்தரனாற் கொல்லப்பட்டவன்.

அயோத்தி:—உதயனன் தாயாகிய மிருகாவதி பிறந்த ஊர்; இருதவன்மனின் தலை நகரம்.

அரிசிகன்:—உருமண்வானின் புதல்வன்; நரவாகனதத்தனுடைய படைத்தலைவன்.

ஆசாடகன்:—வாசவதத்தையின் யானைப் பாகன்.

ஆசாடபுரம்:—மதனமஞ்சுகையைக் கவர்ந்து சென்ற மானசவேகன் என்னும் வித்தியாதரனின் நகரம்.

ஆவந்திகை:—வாசவதத்தை பார்ப்பனியாக வேடம் பூண்டு பதுமாவதியின் மருங்கு வசிக்கும்போது கொண்ட பெயர்.

இடபகிரி:—நரவாகனதத்தனுக்கு முடிசூட்டுவிழா நடைபெற்ற இடம்.

இத்தியகன்:—உதயனனுடைய வாயில் காவலரில் ஒருவன்.

இரத்தினப்பிரபை:—நரவாகனதத்தன் மனைவியருள் ஒருத்தி.

இருசியமூகம்:—ஆசாடபுரத்தினின்றும் நரவாகனதத்தனையும் மதனமஞ்சுகையையும் வேகவதி சேர்த்த இடம்.

இலாவாணகம்:—உதயனனுக்குரிய நகரங்களுள் ஒன்று; பலவகை வளங்களால் இன்பம் பயக்கும் பூம்

பொழில்களையுடையது; மகத தேயத்திற்கு அணித்தாயது.

இன்னிசை:—உதயனனுடைய யாழ்; கோடபதி யெனவும் பெயர் பெறும்; வசுநேமி யென்னும் பாம்பால் உதயனனுக்கு அளிக்கப்பட்டது; அவன் வாசவதத்தையின் அன்பைப் பெறுதற்கு எது வாக இருந்தது.

உச்சயினி:—வாசவதத்தையின் தந்தையாகிய சண்டமகாசேன னின் தலைநகரம்; அவந்திநாட்டிலுள்ளது.

உதயனன்:—இவன் இச்சரிதத் தலைவன்; பாண்டவர் குலத் துப் பிறந்தவன்; சகச்சிரானீகன் புதல்வன்; சமதக்கினி முனிவனால் உபநயனம் செய்யப் பெற்று எல்லாக் கலைகளையுங் கற்றுணர்ந்த வன்; வள்ளன்மை மிக்கவன்; வசுநேமி என் னும் பாம்பினால் இன்னிசை யென்னும் யாழி னைப் பெற்றவன்; சண்டமகாசேனனால் வஞ் சிக்கப்பட்டுச் சிறைபுகுந்தபொழுது யௌகந்த ராயண னென்னும் தன் முதலமைச்சன் சூழ்ச்சித்திறனால் அவ்வரசன் புதல்வி வாசவ தத்தையோடு வெளிப்போந்து அவளை மணந்த வன்; மகததேசத்து அரசனைத் தனக்கு நட் பாக்க வேண்டி அமைச்சர் செய்த சூழ்ச்சியால் அவன் புதல்வி பதுமாவதியையும் மணந்து கொண்டவன்; தன் முன்னோர் தம் பொருட் குழுவையும், அரியணையையும் நல்லூழாற் பெற்றவன்; அமைச்சரின் உபாயத்திறனும், மாமன்மாரிருவர் தோள்வலியும் துணையாகக் கொண்டு திக்குவிசயஞ் செய்து தன் முன்

ஞோர் வீற்றிருந்த அரியணைக்கணிருந்து அரசாண்டவன்; காமவேளின் கூறுன நரவாகனதத்தனை ஈன்றவன்; தன்னை விரும்பிவந்த கலிங்கசேனையின் மணத்தால் தீங்குநிகழுமென்று அமைச்சரால் உணர்ந்து அவள் மீது வைத்த காதலை யறவே யொழித்தவன்; சூரியோதய காலத்துப் பிறந்ததுபற்றி "உதயனன்" என்னும் இப்பெயரைப் பெற்றுனென்பர்.

உருமண்ணுவா:—உதயனனுடைய அமைச்சருள் ஒருவன்; சுப்பிரதீகன் என்னும் படைத்தலைவனின் புதல்வன்; யௌகந்தராயணனையொப்ப நுண்ணறிவும் போர்த்திறமையும் மிக்கவன்; சண்டமகாசேனனுல் வஞ்சிக்கப்பட்ட உதயனனைச் சிறைமீட்க யௌகந்தராயணன் சென்றபொழுது கௌசாம்பிநகரைக்காத்தவன்.

கருப்பூரவதி:—நரவாகனதத்தனுடைய மனைவியருள் ஒருத்தி.

கலிங்கசேனை:—கலிங்கதத்தனுடைய மகள்; உதயனனைக் காதலித்து அவனை மணக்க எண்ணியிருக்கும்பொழுது அவ்வுதயனன் வேடம் பூண்டு வந்த மதனவேகனென்னும் விஞ்சையனுல் மணக்கப் பெற்றவள்.

கலிங்கதத்தன்:—தக்கசிலை நகருக்குத் தலைவன்; கலிங்கசேனையின் தந்தை.

காசிநகர்:—உதயனனுக்குப் பகைவனுன பிரமதத்தனுடைய தலைநகரம்.

காஞ்சனமாலை:—வாசவதத்தையின் உயிர்த்தோழி.

கார்மநபேசுவரன்:—உதயனன் திக்குவிசயஞ்செய்த பொழுது அவனைக் குடைநிழல் பெருத தலையால் வணங்கி இறைப்பொருள் கொடுத்தவன்.

கிருதவன்மன்:—அயோத்தி அரசன்; மிருகாவதியின் தந்தை.

குதகன்:—பகைவனுன பிரமதத்தனது செயலையறிதற் பொருட்டுக் காசிநகரைக் குறித்து யௌகந்த ராயணனுல் அனுப்பப்பட்ட ஒற்றர்களில் ஒருவன்; இவன் ஆசிரிய வேடம் பூண்டு முக்காலமு முணர்ந்தவனுக நடித்து அப்பிரம தத்தனுடைய மறைபொருள்களை யௌகந்த ராயணனுக்கு ஒற்றர்முகமாக அறிவித்து வந்தவன்.

கோபாலகன்:—சண்டமகாசேனன் புதல்வரில் ஒருவன்; தந்தையின் கட்டளையின்படி தங்கையாகிய வாசவதத்தைக்குப் பாணிக்கிரகண விழாவை நிறைவேற்றிவைத்தவன்; உதயனன் ஆக்கங் கருதி அவன் பதுமாவதியை மணப்பதற்கு உதவி செய்தவன்; அவனுல் விதேகநாட் டிற்கு அரசனுக்கப்பட்டவன்.

கோமுகன்:—இத்தியகன் புதல்வன்; நரவாகனதத்தன் வாயில் காவலரில் ஒருவன்.

கௌசாம்பி:—வற்ச நாட்டின் தலைநகரம்; உதயனன் பாட்ட னுகிய சதானீகனுல் தலைநகரமாகச் செய்யப் பட்டது; யமுனையின் கரையிலுள்ளது; ஆகி

யிற் குசாம்பன் என்னும் அரசனால் உண்டாக்கப் பட்டதனால் இப்பெயர் பெற்றதென்பர்.

சகச்சிரானிகன்:—உதயனன் தந்தை; விட்புலஞ்சென்று இந்திரனால் உபசரிக்கப் பெற்றவன்; திலோத்தமையெனுந் தெய்வமாதினால் தன் மனைவியைப் பதினான்கு யாண்டுகள் பிரிந்திருக்கும் சாபத்தைப் பெற்றவன்; கருவுற்றிருந்த தன் மனையாள் தன்னின் நீங்கிச் சமதக்கினி முனிவன் ஆச்சிரமத்தில் பதினான்கு யாண்டு நிறைவேறப்பட்ட புதல்வனோடு இருக்கின்றாளென்ற செய்தியைக் கேட்டு அங்குச்சென்று அவர்களோடும் அரண்மனையை யடைந்து அப்புதல்வன்மாட்டு அரசியற் சுமையை வைத்து விட்டு மனைவியுடன் தவஞ்செய்யச்சென்றவன்.

சண்டமகாசேனன்:—அவந்தி நாட்டு அரசன்; வாசவதத்தையின் தந்தை; "மகாசேனன்" என்னும் இயற்பெயர் பெற்றவன்; சண்டிகைபால் வரம் பெறற் பொருட்டுத் தலையறுத்தலாகிய சண்ட கன்மத்தைச் செய்தலால் இப் புகழ்ப்பெயரடைந்தான்; அத்தேவியின் திருவருளால் வாட்படை பெற்றான்; தன்பால் காதற்கிழமை பூண்ட அங்காரவதியின் துணைகொண்டு அவள் தந்தையாகிய அங்காரகனைக் கொன்று அவளை மணந்தவன்; தன் புதல்வி வாசவதத்தையை மணஞ்செய்விக்க எண்ணி உதயனனை வஞ்சத்தாற் பிடித்துச் சிறைவைக்கச் செய்தவன்.

சதானிகன்:—உதயனனுடைய பாட்டன்; தன் முன்னோர் வாழ்ந்து வந்த அத்தினபுரத்தை விட்டுக்

கௌசாம்பியையடைந்து வாழ்ந்தவன்; தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நிகழ்ந்த போரில் துணைசெய்தற் பொருட்டு இந்திரன் வேண்டச் சென்று அசுரர்களோடு போருஞற்றி அவர்களாற் கொல்லப்பட்டவன்.

சமதக்கினி:—உதயாசலத்தில் வசித்த முனிவரிற்றலைவன்; கருடனாற் கவரப்பட்டுத் தன்னிருக்கை புகுந்த மிருகாவதியை எதிர்காலச் செய்திகூறித் தேற்றி ஆதரித்தவன்; அவள் புதல்வனாகிய உதயனனுக்கு உபநயனஞ்செய்து எல்லாக் கலைகளையுங் கற்பித்தவன்.

சயசேனன்:—சண்டமகாசேனன் தந்தை.

சனமேசயன்:—உதயனன் முன்னோர்களில் ஒருவன்; பரிட்சித்துவின் புதல்வன்; சதானீகனுக்குந் தந்தை.

சாந்திகரன்:—உதயனனுடைய புரோகிதன்.

சாந்திசோமன்:—பிங்கலிகையின் புதல்வரில் ஒருவன்; நரவாகனதத்தனுடைய புரோகிதன்.

சிங்கவன்மன்:—மகததேசத்து அரசனுடைய புதல்வன்; பதுமாவதியின் சகோதரன்; உதயனனால் சேதிநாட்டுக்கு அரசனாக்கப்பட்டவன்.

சிராவத்தி:—பிரசேனசித்தின் நகரம்.

சுப்பிரதீகன்:—சகச்சிரானீகனுடைய படைத்தலைவன்; உருமண்வானின் தந்தை.

சுரபிதத்தை:—இந்திரன் சாபத்தாற் கலிங்கசேனையாகப் பிறந்த ஒரு தேவமாது.

சேதிநாடு:—உதயனனால் பதுமாவதியின் சகோதரன் சிங்கவன்மனுக்குக்கொடுக்கப்பட்டது.

சோமப்பிரபை:—மாயாசுரனுடைய மகள்; கலிங்கசேனையின் தோழி; அக்கலிங்கசேனை உதயனன்பால் காதற்கிழமைபூணும்படி அவன் பெருமைகளை யெடுத்துக்கூறியவள்.

சௌண்டிலியமுனிவன்:—உதயனன் பாட்டனாகிய சதானீகனுடையநண்பன்; அம்மன்னன் புதல்வர்ப் பேறுகுறித்து இரக்க புத்திரகாமேட்டியென்னும் வேள்வியியற்றினன்.

தக்கசிலை:—கலிங்கதத்தனது தலைநகர்.

தபந்தகன்:—வசந்தகனுடைய புதல்வன்; நரவாகனதத்தனின் விளையாட்டுத் தோழன்.

தம்பகன்:—நரவாகனதத்தனுக்கு வித்தியாதரரால் தீங்குநேரா வண்ணங் காப்பதன் பொருட்டுச் சிவபிரானால் அனுப்பப்பட்டவன்.

தநவதி:—இருசியமூகம் என்னும் மலைக்கண் வசித்த வித்தியாதரப் பெண்; தன் புதல்வியை நரவாகனதத்தனுக்குக்கொடுத்தவள்.

தாரர்தத்தை:—கலிங்கதத்தனின் மனைவி.

தாளபடன்:—சண்டமகாசேனனின் வாயில் காவலரில் ஒருவன்; வாசவதத்தையை வஞ்சித்துக் கவர்ந்து சென்ற உதயனனைத்தடுக்க அவனால் கொல்லப்பெற்றவன்.

திலோத்தமை:—நாடகத் தெய்வமகளிருள் ஒருத்தி; சகச்சிராணீகனைச் சபித்தவள்.

நடைமலை:—சண்டமகாசேனனது பட்டத்து யானை.

நரவாகனதத்தன்:—உதயனனுக்குக் காமவேளின் கூறாக வாசவதத்தையின்பால் அவதரித்தவன்; விஞ்சையரால் இடையூறு நேராவண்ணம் சிவபிரான் கட்டளையால் தம்பகன் என்னும் கணத்தலைவனால் பாதுகாக்கப் பெற்றவன்; கலிங்கசேனையின் புதல்வி மதனமஞ்சுகையையும் இரத்தினப்பிரபை முதலிய மாதர் பலரையும் மணந்தவன்; தவவன்மையால் சிவபிரானிடத்து நினைத்த அளவில் எல்லாவிச்சைகளும் விளங்கித் தோன்றுவதான வரமும், விமானமும் பெற்றவன்; வித்தியாதரர்களுக்குச் சக்கரவர்த்தியானவன்.

நளகூபரன்:—சோமப் பிரபையின் கணவன்.

நன்மசசிவன்:—சகச்சிரானீகனுடைய விளையாட்டுத் தொழிற்கும், அந்தரங்கக் காரியங்கட்கும் உரிய நண்பன்; வசந்தகனுடைய தந்தை; இவனுக்கு இப்பெயர் தொழில்பற்றிய பெயர்போலும்.

பத்திராவதி:—வாசவதத்தையினது பெண் யானை; இதன் மீது தான் அவளை ஏற்றிக்கொண்டு உதயனன் உச்சயினியிலிருந்து சென்றனன்; செல்லுங்கால் குடிநீரின் குற்றத்தாலிறந்தது; மாயாவதியென்னும் வித்தியாதரப்பெண் சாபவயத்தால் இப் பெண்யானையாயினள்.

பதுமாவதி:—மகத தேசத்து அரசனின் புதல்வி; உதயனனுடைய இரண்டாம் மனைவி; சுவைபடப்

பேசும் திறமை மிக்கவள்; சபத்தினியாகிய வாசவதத்தையின்பால் மிக்க அன்புள்ளவள்.

பரிட்சித்து:— உதயனன் மரபில் முன்னோன்; அபிமன்யுவின் புதல்வன்; சனமேசயன் தந்தை.

பாலகன்:—சண்டமகாசேனன் புதல்வரில் ஒருவன்; தன் உடன்பிறந்தாளாகிய வாசவதத்தையை உதயனன் கவர்ந்துசெல்லுங்கால் தந்தையால் ஏவப்பட்டுத் தடைசெய்தவன்.

பிங்கலிகை:—புரோகிதனுடைய சகோதரன் மனைவி; இவள் புதல்வர் நரவாகனதத்தனுக்குப் புரோகிதராயினர்.

பிரசேனசித்து:—சிராவத்திநகரத்துத் தலைவன்; கலிங்கசேனையை மணஞ்செய்விப்பதாக அவள் தந்தையால் கருதப்பட்டவன்.

பிரமதத்தன்:—காசி நகரை யாட்சி புரிந்த அரசன்; உதயனன் பகைவன்; அவனொடு பொருதற்காற்றாது கையுறைப் பொருள் பலதந்து அவன்பால் அடைக்கலம் புகுந்தவன்.

புளிந்தகன்:—விந்தியவனத்தில் வசித்த வேடர் தலைவன்; உதயனன் நண்பன்; அவனையும் வாசவதத்தையையும் கள்வர் துன்புறுத்தாவண்ணம் தடுத்துத் தன் நகரை யடைவித்து உபசரித்தவன்.

மகததேசம்:—பதுமாவதி தந்தையின் நாடு; இதன் தலைநகர் இராஜகிரியம் என்ப.

மகாசேனன்:—சண்டமகாசேனனின் இயற்பெயர்.

மகாமாத்திரன்:—சண்டமகாசேனனுடைய குதிரைச்சாலைத் தலைவன்.

மகேந்திரவன்மன்:—சண்டமகாசேனனுடைய பாட்டன்.

மதனமஞ்சுகை:—கலிங்கசேனைக்கு இரதிதேவியின் கூறாகப் பிரமதேவனால் கொடுக்கப்பட்ட புதல்வி; நரவாகனதத்தனின் பட்டத்தேவி; மானசவேகன் என்னும் வித்தியாதரனால் விரும்பி எடுத்துச் செல்லப்பெற்றுத் தன் கணவனால் மீட்கப்பட்டவள்.

மதனவேகன்:—உதயனன்பாற் காதற்கிழமை பூண்ட கலிங்கசேனையை அவனுருவந்தாங்கிச் சென்று வஞ்சித்து மணந்த வித்தியாதரன்.

மந்தரதேவன்:—இமயமலையின் வடபால் வாழ்ந்த வித்தியாதரர்களுக்குச் சக்கரவர்த்தி; நரவாகனதத்தனொடு பொருது தன் தங்கை வேண்டுகோளின்படி அவனால் கொல்லாதுவிடப் பட்டவன்.

மந்தரதேவி:—மந்தரதேவனின் தங்கை; நரவாகனதத்தனை மணந்தவள்.

மருபூதி:—யௌகந்தராயணனுடைய புதல்வன்; நரவாகனதத்தனுக்கு அமைச்சனானவன்.

மாதலி:—தேவேந்திரனுடையசாரதி; அவனுக்குத் துணைசெய்தற்பொருட்டுச்சென்று அசுரரால் கொல்லப்பட்ட சதானீகன் உடலைக் கௌசாம்பி நகரத்திற் சேர்ப்பித்தவன்; மிருகாவதியின்

பிரிவால்வருந்திய சகச்சிரானீகனைத் திலோத்தமையின் சாபச்செய்திகூறித் தேற்றியவன்.

மாயாசுரன்:—சோமப்பிரபையின் தந்தை.

மாயாவதி:—ஒரு வித்தியாதரப் பெண்; சாபக்குற்றத்தால் பத்திராவதியென்னும் பெண்யானை யானவள்.

மானசவேகன்:—வித்தியாதரரில் ஒருவன்; மதனமஞ்சுகையை விரும்பிக் கவர்ந்து சென்று நரவாகனதத்தனால் வெல்லப்பட்டவன்.

மிருகாவதி:—சகச்சிரானீகனுடைய மனைவி; அயோத்தியாசன் கிருதவன்மனின் புதல்வி; கருவுற்றிருந்தபொழுது செவ்வாக்கு நீர் தோய்ந்த தன்னுடலை இறைச்சிப் பிண்டமாகக் கருதித் தன்னைக் கவர்ந்து சென்ற கருடனால் உதயாசலத்தில் விடப்பட்டுச் சமதக்கினி முனிவனுடைய ஆச்சிரமத்தை யடைந்து உதயனனைப் பெற்றவள்; அப்புதல்வன் அரசுரிமையை ஏற்ற பின்னர் கணவனொடு தவஞ்செய்யக் கானகம் புக்கவள்.

யுகந்தரன்:—சகச்சிரானீகனுடைய அமைச்சரில் ஒருவன்; யௌகந்தராயணனுடைய தந்தை.

யோககரண்டகன்:—காசிநகரத்து அரசன் பிரமதத்தனுடைய முதல் அமைச்சன்; உதயனன் படைகள் வரும் வழிகளில் வஞ்சச்செயல்கள் பல செய்தவன்.

யோகேசுவரன்:—உச்சயினி நகர்க்கணித்தான சுடலையில் வாழும் பிரமராக்கதன்; யௌகந்தராயணன்

பால் நட்புக்கொண்டு அவனுக்கு உருவமாற்று என்னும் வித்தையை உபதேசித்தவன்; கலிங்கசேனையின் ஒழுக்க நிலையை மறைந்து நின்று அறிந்து அவனுக்கு அறிவித்தவன்.

யௌகந்தராயணன்:—உதயனனுடைய முதல் அமைச்சன்; சூழ்ச்சித்திறமையிலும், வில்வித்தை முதலிய எல்லாக்கலைகளிலும் வல்லவன்; உதயனன் சண்டமகாசேனனால் வஞ்சித்துச் சிறைப் படுத்தப்பட்டானென்பது கேட்டு வேற்றுருக் கொண்டு உச்சயினி யடைந்து பல உபாயங் களால் சிறைச்சாலையினின்றும் அவனை வாசவ தத்தையோடும் வெளிப்படும் வண்ணம் செய் தவன்; அவனுக்கு வாசவதத்தையை மணஞ் செய்வித்ததுமன்றி மகததேசத்து அரசனை நட்பாளனுக்கக்கருதி அவன் மகளையும் வேட் பித்தவன்; பாண்டவர்குலத்து அரசர் வைத்த நிதித்திரளையும் அரியணையையும் உதயனனை யடைவித்து அவன் அரசியற்றிருவைப் பெரு கச் செய்தவன்; அவனைக் காதலித்துவந்த கலிங்கசேனையின் மணம் தீங்குபயப்பதாகு மெனக்கருதி அது நடைபெறு வண்ணம் தடை செய்தவன்; அவ்வுதயனன் எல்லாநலங் கட்குங் காரணம் இவன் பெருமுயற்சியே.

வசந்தகன்:—உதயனனுடைய அமைச்சரில் ஒருவன்; சண்ட மகாசேனனால் வஞ்சிக்கப்பட்ட உதயனனை விடுவிக்க யௌகந்தராயணன் செய்த சூழ்ச்சி கட்குத் துணைநின்று உடலின் வேற்றுமை யால் விளையாட்டுப் பொருள் போல இருந்து

வாசவதத்தையின் மனத்தைப்பின்புறுத்திய வன்; உதயனன் பதுமாவதியை மணப்பதற்கு யௌகந்தராயணன் செய்த உபாயத்தின்படி வாசவதத்தையோடு தானும் வேற்றுருக் கொண்டு பதுமாவதியை யடைந்து கணவற் பிரிவால் வாசவதத்தை வருந்தா வண்ணம் தேற்றியவன்; கதை பல பொதிந்த பொரு ளுரைகளைச் சுவைபடப்பேசும் திறமை மிக்கவன்.

வசுநேமி:—வாசுகியென்னும் பாம்பின் தமையன்; உதயன னால் வேடனின்றும் விடுவிக்கப்பட்டு அவனு க்கு "இன்னிசை" யென்னும் யாழொன்றைக் கொடுத்தவன்.

வற்சம்:—உதயனன் அரசாண்ட நாடு; இதன் தலை நகரம் கௌசாம்பி.

வாசவதத்தை:—உதயனனுடைய பட்டத்தேவி; சண்டமகா சேனனின் புதல்வி; இந்திரன் (வாசவன்) அருளால் உதித்தவளாதலின் இப்பெயர் பெற் றாள்; உதயனன்பால் இசைக்கலை பயின்றவள்; மாலை தொடுத்தல் முதலிய கைத்தொழிலி லும், சிற்பவேலையிலும் மிக்க திறமையுள்ள வள்; தன்பாலுள்ள காதலால் உதயனன் இராசகாரியத்தை மறந்தானென்பது கேட்டு அவனுக்கங் கருதி வேற்றுருக்கொண்டு சில காலம் மறைந்திருந்தவள்; சடத்தினியாகிய பதுமாவதிபால் மிக்க அன்புள்ளவள்; சிவ பிரான் வழிபாட்டால் காமவேளின் கூறென

நரவாகனதத்தன் என்னும் புதல்வனைப் பெற்றவள்.

விண்டுமதி:—சதானீகனுடைய மனைவி; சௌண்டிலியமுனிவன் ஈந்த தூயதானபாயசத்தை உண்டு கருத்தரித்துச் சகச்சிரானீகனைப் பெற்றவள்; தேவாசுரர் போரில் இந்திரனுக்குத் துணைசெய்தற்பொருட்டுச் சென்று அவ்வசுரரால் கொல்லப்பட்ட தன் கணவன் பிரிவைக் காற்றாளாய் அவன் உடலோடு சிதைக்கண்ணேறி உடன் இறந்துபட்டவள்.

விதேகநாடு:—உதயனனால் வாசவதத்தை சகோதரன் கோபாலகனுக்குக் கொடுக்கப்பட்டது.

விந்தியபர்வதம்:—ஒரு மலை; அழகிய காடுகள் சூழப்பெற்றது.

வீரபாகு:—சண்டமகாசேனன் வாயில் காவலரில் ஒருவன்; வாசவதத்தையை வஞ்சித்துக் கவர்ந்து சென்ற உதயனனைத் தடைசெய்து அவனாற் கொல்லப்பெற்றவன்.

வேகவதி:—மானசவேகன் உடன் பிறந்தவள்; மதனமஞ்சுகையின் வேடங்கொண்டு வந்து நரவாகனதத்தனை மணந்தவள்.

வைசுவாநரன்:—பிங்கலிகையின் புதல்வரில் ஒருவன்; நரவாகனதத்தனுடைய புரோகிதன்.

---

உ

கணபதி துணை.

# உதயன சரிதம்.

## முதல் வகுப்பு.

### (உதயனன் பிறப்பு.)

திங்கண் மரபு சிறக்கப் பிறந்துநலம்
பொங்கு முதயனன்றன் பொற்சரிதம்—இங்கினிது
சொல்லு முறையின்கட் டோன்றுந் தமிழ்ப்புலவீர்
பல்லறங்க ளாகும் பயன்.

வற்சம் எனப் பெயரிய நாட்டிலே கௌசாம்பி எனப் பெயரிய நகரம் ஒன்றிருந்தது. அதன்கண், சதானீகன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் பாண்டவகுலத்திற் பிறந்தவன்; சனமேசயன் புதல்வன்; பரிட்சித்துவின் பௌத்திரன்; அபிமந்நியுவின் பிரபௌத்திரன். அவன் இளம்பருவத்தில் விண்டுமதி என்னும் பெண்ணை மணந்தான்.

அவன் ஓர் அமயத்தில் வேட்டையாடல் குறித்து வனத்தை எய்தினான். ஆண்டு அவற்குச் சௌண்டிலிய முனிவனோடு பழக்க முண்டாயிற்று. அம் முனிவனைப் புதல்வற்பேறு குறித்து இரந்தான். அம் முனிவன் சதானீகனோடு கௌசாம்பி நகரத்தை எய்திப் புத்திரகாமேட்டி என்னும் வேள்வியைச் செய்தான். அவ் வேள்வியினின்றும் "மந்திரங்களாற் றூயதான இப் பாயசத்தை உண்ணச்செய்" என்று அரசனுக்கு ஈந்தான். விண்டுமதி அப் பாயசத்தை உண்டு கருத்தரித்தாள். பத்தாந் திங்களில் ஒரு மகனைப் பெற்றாள். அரசன் அப்புதல்வற்குச் சகச்சிரானீகன் என்று பெயரிட்டான். பின்னர் முறையே சகச்சிரானீகன் பாலப்பருவத்தைக் கடந்து இளவரசனாயினான்.

அப்பொழுது விண்ணுலகில், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் உண்டாயிற்று. அப் போரில் விட்புல வேந்தன் தனக்குத் துணைசெய்தற் பொருட்டுச் சதானீகனை அழைத்தான். சதானீகன் அரசியற் சுமையை யுகந்தரன் என்னும் பெயரினையுடைய அமைச்சன்பால் வைத்து அமராங்கு எய்தினான். ஆண்டு, இயமதமிட்டிரன் முதலிய அசுரர்களோடு போருஞற்றி அவர்களாற் கொல்லப்பட்டான். இந்திரனுடைய சாரதியாகிய மாதலி சதானீகன் உடலைத் தேரிலேற்றிக் கௌசாம்பி நகரத்தை அடைவித்தான். விண்டுமதி அஞ்சத்தக்க அக் கொடுந்துன்பத்தை ஆற்றாளாய்த் தலைவனோடு சிதைக்கண் ஏறி உடனிறந்தாள்.

சகச்சிரானீகன் தந்தைக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களை நிறைவேற்றித் தாதையினது அரியணையில் வீற்றிருந்தான்.

இதற்கிடையில், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நிகழ்ந்த போரில் தேவேந்திரன் வெற்றி அடைந்தான். அதன்பின்னர்த் தன் நண்பனுடைய புதல்வனாகிய சகச்சிரானீகனை அழைத்துப் பலவாறு உபசரித்தான். அவ்வமயம் உரையாடிக் கொண்டிருக்குங்கால், "அயோத்தியில் கிருதவன்மன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் உளன். அவற்கு மிருகாவதி என்னும் பெண்மணி ஒருத்தி இருக்கின்றாள். அவள் நின் மனைவியாவள்" என்று இவ்வாறு கூறினான். சகச்சிரானீகன் அதனைக்கேட்டு அப்பொழுதே மிருகாவதியினிடத்து மிகவும் காதற்கிழமை யுடையனாயினான். அதன்பின் விண்ணவர் இறைபால் விடைபெற்றுக்கொண்டு அவன் தேரின்கண்ணே ஏறிக் கௌசாம்பி நகரத்தைக் குறித்துப் புறப்பட்டான். மிருகாவதியை நெஞ்சத்தில் இருத்திச் செல்கின்ற சகச்சிரானீகனை இடைவழியில் திலோத்தமைகண்டு, "அரச! கணப்பொழுது நின்று எனது சொல் ஒன்றைக்கேட்டு அதன்பின் செல்வாயாக" என்று கூறினாள். சகச்சிரானீகன் அதனைச் செவியேற்றிலன். அதனாற் சினமுற்ற திலோத்தமை, சகச்சிரானீகனை நோக்கி, "எவளிடத்துக் காதலாற் செலுத்திய நெஞ்சத்தையுடையனாய் என் சொல்லைச் செவிக்கொள்ளாமல் விரைந்து செல்லுகின்றாயோ

அவளிடத்தினின்றும் பதினன்கு யாண்டுகள் பிரிவுத் துன்பத்தை அனுபவிப்பாய்'' என்று இவ்வாறு சபித்தாள். இச் சாபத்தையும் வேறென்றைப் பற்றிய மனத்தினையுடைய அரசன் கேட்டிலன். தேவேந்திர சாரதியாகிய மாதலி மாத்திரம் கேட்டான்.

சகச்சிரானீகன், கௌசாம்பி நகரத்தை எய்தி விட்புல நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் அமைச்சர்களுக்குத் தெரிவித்தான். அதன்பின் அயோத்தியின் தலைவனாகிய கிருதவன்மன்பால் தூதனைப் போக்கினன். கிருதவன்மன் தன்மகளாகிய மிருகாவதியின்பால் சகச்சிரானீகனுக்குள்ள காதற்கிழமையைக், கோப்பெருந்தேவிக்கு அறிவுறுத்தான். அவள் "தேவ! மிருகாவதிக்கும் சகச்சிரானீகனுக்குமுள்ள மணமக்களாந் தன்மை மிகவும் பொருத்தமானதே. விரைந்து இவ் விருவருக்கும் மணம் நிகழும். இப்பொருளையே ஓர் அமயம் ஓர் அந்தணன் கனவிற் போந்து எற்கு அறிவுறுத்தான்'' என்று இங்ஙனம் கூறினள். கோப்பெருந்தேவியின் இச்சொற்களைக் கேட்டுக் கிருதவன்மன் மகிழ்ச்சியுடையனாய்த் தூதன் முகமாக "என் புதல்வி மிருகாவதி முன்னரே நின்னைக் காதலித்தாள். நுங்கள் இருவீரது ஒத்த காதற்கிழமையைக் கேட்டலால் இப்பொழுது யான் பயனுடையனாயினேன். ஆதலின், காலந் தாழ்த்தலின்றி இவண் வந்து மணவினையை நிறைவேற்றல் வேண்டும்'' என்று இவ்வாறு மறுமொழி கூறிவிடுத்தான்.

பின்னர், சசச்சிரானீகன் தூதன் முகமாக இத ைனக் கேட்டுக் கணிதநூல் வல்லாராற் குறிக்கப்பட்ட நன் முகூர்த்தத்திற் புறப்பட்டு அயோத்தியை அடைந் தான். அவ்விடத்திலேயே கட்டழகியாகிய மிருகா வதியை மணந்தான். அப்பொழுது மிருகாவதி சகச் சிரானீகன் இவ்விருவர்களது சேர்க்கையானது கல்வியும் பணிவும் ஒருங்குகூடியதுபோல் விளங்குதலையுணர்ந்து எல்லோரும் மிக்க மகிழ்ச்சியடைந்தனர். பின்னர், சகச் சிரானீகன் மிருகாவதியை அழைத்துக்கொண்டு தன் தலைநகராகிய கௌசாம்பி நகரத்தை எய்தி, அவளோடு இன்பம் நுகர்ந்து காலத்தை இனிது கழித்தான். இதற் கிடையில் சகச்சிரானீகன் மந்திரிகளுள் ஒருவனாகிய யுகந்தரனுக்கு யௌகந்தராயணன் என்னும் புதல்வ னும், சுப்பிரதீகன் என்னும் பெயரினையுடைய படைத் தலைவனுக்கு உருமண்வான் என்னும் புதல்வனும், நன்மசிவனுக்கு வசந்தகன் என்னும் புதல்வனும் உண்டாயினர்.

பின்னர், சின்னாட் சென்று மிருகாவதி கருத் தரித்தாள். அவளுக்கு முகம் வெண்ணிறமுற்றது. இடை பருமை யெய்தியது. ஓர் அமயம் அவள் கணவன் பக்கல் எய்தி, "நாத! சிவந்தநீர் நிரம்பிய தடாகத்தில் நீராடுதற்கு விரும்புகின்றேன்" என்று தன் கருப்பகால வேட்கையை இவ்வாறு தெரிவித்தாள். உயர்ந்த அறவோனும், உயிர்களுக்குத் தீங்கு செய்ய விரும்பாதவனும் ஆகிய சகச்சிரானீசன், செவ்வரக்கு முதலியவைகளாலாய நீரால் நிரம்பிய தடாகம் ஒன்றை

நிருமாணித்து அவளுக்குக் காட்டினான். அவள் அத் தடாகத்தில் நீராடினாள். நீர் மூழ்கி எழுந்த மிருகாவதியினது உடல் செவ்வரக்கு நீர் தோய்ந்தமையால் இறைச்சிப் பிண்டத்தை யொப்ப விளங்கியது. அப் பொழுது விண்ணிற் பறந்து திரியும் பருந்து அவளைப் பார்த்து இஃது இறைச்சிப் பிண்டம் என்னுங் கருத் தால் மூக்கினால் கௌவிக்கொண்டு உயரப்பறந்தது. அத னைக் கண்ணுற்ற அரசன் துன்பக் கடலுள் மூழ்கி மயக்கமுற்று வீழ்ந்தான். அத்தகைய அவனது நிலையை யோகவன்மையால் மாதலி யுணர்ந்து, விண்ணுலகினின் றும் இறங்கி, அரசனை நோக்கி, "அரச! முன்னரே நீ விண்ணுலகினின்றும் நிலவுலகத்தை அடையுங்கால் திலோத்தமை நின்னைக் கண்டாள்; நின்னோடு சிறிது அளவளாவுதற்கு விரும்பி நின்ற அவளைப் பொருட் படுத்தாமல் மிருகாவதியின்பால் வைத்த அவா நிறைந்த மனத்தினனாய் விரைந்து போந்தனை; அதனாற் சின முற்ற அவள் நின்னைச் சபித்தாள்; அச்சாபத்தால் இப்பிரிவுத் துன்பம் நேர்ந்தது; பதினான்கு யாண்டு கள் பிரிவுத் துன்பத்தை நுகர்ந்து அதன்மேல் மிருகா வதியோடு சேருவாய்" என்றிவ்வாறு கூறினான்.

இங்ஙனம் மாதலியால், தேற்றப்பட்ட சகச்சிரா னீகன், மிருகாவதியின் பிரிவை மிக அரிதிற் பொறுத்து, "உயிர் வாழ்க்கை யுளமகற்கு யாண்டு பல கடந்தும் இன்பம் உறுமால்" என்னும் முது மொழியை நினைவுகூர்ந்து மனத் திட்பத்தால் உயிர் தாங்கினான்.

மிருகாவதியை மூக்கினாற் கவர்ந்து உயரப் பறந்து சென்ற கலுழன் உறுப்புக்களின் இயக்கத்தால் இவள் இறைச்சிப்பிண்டம் அல்லள்; உயிருடன் கூடிய மானிடப் பெண் என்று அறிந்து அவளை உதயாசலத்தின் சாரலில் விடுத்தது. பறவை மூக்கினின்றும் விடுபட்ட அம்மிருகாவதி, துணையின்றி யாரும் அடைதற்கரிய மலைப்பக்கத்தில் இருக்கும் தன்னை நோக்கி மிகவும் அச்சமுற்று வாய்திறந்து கதறினாள். அவ்வமயம் பன்னாளாகப் பசியுற்றிருக்கும் ஒரு பெரும்பாம்பு அவளை விழுங்குதற்குத் தொடங்கிற்று. அவ்விடத்தில் எதிர்பாராது அடைந்த ஒரு மனிதன் அப்பாம்பை அம்புகளாற் கொன்று மிருகாவதியைக் காத்தனன். அதன்பின், அவள் அத்தகைய துன்பத்தை ஆற்றாதவளாய் உயிர்விடுதலே நலமெனத் துணிந்து அவ்விடத்தில் தன் விருப்பின் வண்ணந் தடையின்றித் திரியும் ஒரு மதயானையின் முன்னிலையிற் சென்று நின்றாள். அவ்யானை தமியளாய் நிற்கும் அபலையாகிய அப்பெண்ணை நோக்கி அருளுடையானை யொப்ப விளங்கி அவளைத் தன் துதிக்கை நுனியால் மெல்லிதாகத் தடவிற்று

பின்னர், அம் மிருகாவதி கருப்பச் சுமையால் துன்புற்று ஆங்குள்ள அருவியின்பக்கல் அடைந்து துன்பமிகுதியாற் புலம்பினாள். ஆண்டு, அணிமைக் கண்ணுள்ள முனிவர் இருக்கையினின்றும் ஒருதாபத குமாரன் வந்து அவளைக்கண்டான். அவன் அவளது துன்பகாரணத்தைக்கேட்டு அநாதையாகிய அவளைக்

கருணைகூர்ந்து சமதக்கினி முனிவனது இருக்கையை அடைவித்தான். நிறைந்த கருப்பச் சுமையாற் சிரம முற்றவளும் வேறு புகலில்லாதவளுமாகிய அம் மிருகாவதி பிரம தேசசால் அக்கினியைப்போற் றிகழ்கின்ற பெரியோனுகிய அம்முனிவன் பாதங்களில் வணங்கினுள். அம் முனிபுங்கவன் அவளது துன்ப காரணத்தை மனவொருக்கத்தால் உணர்ந்து அவளை நோக்கி, "குழந்தாய்! வருந்தற்க; சின்னுள் இவ்வாச்சிரமத்திலேயே இருப்பாயாக; எல்லா அழகும் வாய்ந்த புதல்வன் பிறப்பான்; சமீப காலத்திலேயே தலைவன்பக்கல் அடைவாய்" என்றிவ்வாறு தேற்றினுன். மிருகாவதி அச் சொற்களைத் தலைவணங்கி யேற்று அவ் வாச்சிரமத்திலேயே தங்கினுள். பின்னர், பேறுகால நிறைவில் சக்கரவர்த்தியின் எழில்வாய்ந்த புதல்வன் ஒருவனைப்பெற்றுள். அவன்பிறந்த சமயத்தில், ஆகாயத்தில் அசரீரியாக, "நங்காய்! மிருகாவதி! உதயனன் என்னும் பெயர் வாய்ந்த நின்னுடைய இப்புதல்வன் எல்லா வுலகங்களிலும் புகழ்விளங்கப் பெற்ற சக்கரவர்த்தியாவான்" என்னுஞ்சொற்கள் எழுந்தன. அவற்றைக்கேட்டு மிருகாவதி பெருமகிழ்ச்சியையும் வியப்பையும் அடைந்தாள்.

## வெண்பா.

கணவற் பிரிந்தமிரு காவதியோர் காட்டிற்
றணிவின் முனியிருக்கை சார்ந்தங்—கணியிற்
றிகழு முதயனனுஞ் சேய்மணியைப் பெற்றுள்
புகழுந் திருவின் புற.

# இரண்டாம் வகுப்பு.

## (உதயனன் அரசியற்றிருவெய்தல்)

பின்னர்ச் சமதக்கினி முனிவன் அப் புதல்வனுக்குச் சாதகன்மம் முதலிய எல்லாக் கிரியைகளேயும் அவ்வக் காலங்களிற் செய்தான். சிறுவனுகிய உதயனன் ஒத்த பருவமுள்ள முனிகுமாரர்களோடுகூடிச் சிறுவர்க்குரிய விளையாடல்களைச்செய்து முறையாகக் குழவிப் பருவத்தைக் கடந்தான். அதன்பின், அம்முனிவர் பெருமானுலேயே உபநயனம் செய்யப்பெற்று அவன்பாணின்றே எல்லாக் கலைகளேயுங் கற்றுணர்ந்தான். முறையாகப் பதினுன்கு வித்தைகளிலும் வில்வித்தையிலும் கரைகண்டவனுயினுன். ஓர் அமயம் மிருகாவதி நிறைமதிபோற் கண்களுக்கு இன்பத்தை விளைவிக்கின்ற புதல்வனைப் பார்த்து, அன்பு நிறைந்த மனத்தினளாய்ச் சகச்சிரானீகனது பெயர் குறிக்கப்பட்டுத் தன்கையில் அணிந்திருக்கின்ற வளையலை அப்புதல்வன் கையில் இட்டாள். அதன்பின் ஒருநாள், உதயனன் வேட்டையாடல் குறித்துக் காடுகளிற் றிரிந்து ஒரு பாம்பை வலிந்து இழுத்துக்கொண்டு நிற்கும் ஓர் மனிதனைப் பார்த்தான். பாம்பினது அத்துன்ப நிலையை நன்கு நோக்கி அருளுடையனுகிய அவ்வுதயனன், வேடனைப் பார்த்து, "ஒரு குற்றமுமில்லாத இப்பாம்பை எதற்காகத் துன்புறுத்துகின்ருய்? இதனைவிடல்வேண்டும்; இது

தன் விருப்பின்படி செல்க" என்று இங்ஙனங் கூறினான். அவ்வேடன், "குமார! யான் வறியவன்; இதுவே என் வாழ்க்கைத் தொழில்; மந்திரவன்மையாலும், பச்சிலைகளின் பெருமையாலும் இவ்விடத்திற் பாம்புகள் கிடைத்தற் கரியவாயின; நெடுநாளாக இதனைத் தேடிப் பெற்றேன்; ஆதலின் இதனைவிட்டு எங்ஙனஞ் சீவிப்பேன்?" என்று இங்ஙனம் மறுமொழி கூறினான்.

இதனை வள்ளற்றன்மையினையுடைய உதயனன் கேட்டுத் தாய் உதவிய காப்பைக் கையினின்றுங் கழற்றி வேடனுக்குக் கொடுத்து, "இக்காப்பை வாழ்க்கைக்குரிய தாக்கொண்டு இதனை விடுவாயாக" என்று கூறினான். அவ்வேடன் காப்பைப்பெற்று மகிழ்ச்சியுடையனாய்ப் பாம்பைவிட்டு அப்புதல்வனது வள்ளற்றன்மையைக் கண்டு வியந்து தன் விருப்பின் வண்ணஞ் சென்றான்.

அதன்பின், அப்பாம்பு உதயனனை வணங்கி மக்கள் கூறுஞ் சொற்களால் "குமார! யான் வாசுகியின் தமையனாகிய வசுநேமி என்னும் பெயரினையுடையேன். என்பால் "இன்னிசை" என்னும் பெயரினையுடைய யாழ் ஒன்று இருக்கின்றது. அதனைப் பெற்றுக்கொள்வாயாக" என்று இங்ஙனம் கூறிற்று. உதயனன் "அங்ஙனமேயாக" என்று சொல்லி அவ்யாழைப் பெற்றுக்கொண்டான். வசுநேமி உதயனன்பால் விடைபெற்றுத் தன் இருப்பிடஞ்சென்றது. உதயனனும் தாயின் பக்கல் எய்தி இவ்வெல்லா நிகழ்ச்சிகளையும் தெரிவித்தான்.

மிருகாவதி அவற்கு இளமைப் பருவத்தே இயற்கையி னமைந்த வள்ளற்றன்மையை மகிழ்ந்து பாராட்டினாள்.

பின்னர், வேடன் அக்காப்பை விற்றற்பொருட்டுக் கௌசாம்பி நகரத்தை அடைந்தான். அவ் விடத்திற் சகச்சிரானீகனது பெயர் குறித்த அக் காப்பைக் கண்டு அரசன் காவலாளர், அவ்வேடனை அரசன் பக்கல் கொணர்ந்தனர். "நீ இக்காப்பை எவ்வாறு அடைந்தாய்" என்று அரசன் கேட்க, வேடன், நிகழ்ந்த எல்லாவற்றை யும் விளங்கக் கூறினான். அப்பொழுது அசரீரிமொழி "அரச! நின்னைப்பற்றிய சாபத்தின் ஒழிவுகாலம் நெருங்கிவிட்டது. நின் கோப்பெருந்தேவியாகிய மிருகா வதி உதயாசலத்தின் பக்கத்திலுள்ள சமதக்கினி முனி வனது ஆச்சிரமத்திற் பதினான்குயாண்டு நிறைவேறப் பெற்ற நின் அருமைப் புதல்வனோடு சுகமாகத் தங்கி யிருக்கின்றாள்" என்று இங்ஙனம் எழுந்தது. அதனைக் கேட்டுச் சகச்சிரானீகன் முகில் ஒலிகேட்ட மயில்போல மிகப் பெருமகிழ்ச்சியுடையனாயினான்.

பின்னர், அப்பொழுதே படை வீரர்கள் சூழப் புறப்பட்டு அவ்வேடன் வழிகாட்ட உதயாசலத்தை அடைந்தான். ஆச்சிரமத்திற்கு இடையூறு உண் டாகாதவண்ணம் படைகளைச் சேய்மைக்கண்ணே நிறுத்தித் தான் தமியனாகவே ஆச்சிரமத்தின் உட் புகுந்து சமதக்கினி முனிவனைத் தரிசித்து வணங்கி னான். அம்முனிவன் அரசற்கு வாழ்த்துரைகூறி நலம் வினவினன். பின்னர்ப் புதல்வனோடு மிருகாவதியை

ஈந்தான். அவளைக்கண்டு சகச்சிரானீகன் பெரிதும் இன்புற்றான். இத்துணைக்காலம்வரையும் காணாத தன் அருமைப் புதல்வனை விரைந்திழுத்துத்தழுவி உச்சி மோந்து உடல் புளகமுற இன்பக்கடலுண் மூழ்கினவ னாயினான். பின்னர், முனிவன்பால் விடைபெற்று மிருகாவதி உதயனன் இவர்களோடு கௌசாம்பி நக ரத்தை நோக்கிப்புறப்பட்டான். பதினான்கு யாண்டு களிலும் தான் அநுபவித்த நிலைகளைத் தன் காத லிக்கு அறிவுறுத்தும், அவள் நிலையைத் தான் கேட்டும் நெடுந்தூரமான வழியைச் சிரமம் தோன்றா வண்ணங் கடந்தான். அப்பொழுது கௌசாம்பி நக ரத்தில் வாழ்கின்ற மக்கள் எல்லோரும் தோரணம் முதலியவைகளால் நகரத்தை அலங்கரித்தனர். தெருக் கடோறும் நீர் தெளித்தனர். சந்தனம் அகில் முதலிய வற்றின் புகைகளால் எல்லாப்பக்கங்களிலும் மணங் கமழச் செய்தனர். இல்லங்களின் வாயில்கடோறும் நிறை குடங்களை வைத்தனர். பலவகை வாத்தியங்களை முழக்குவித்தனர். மங்கல வாழ்த்துரைப்போராகிய அந்தணர்களை முன்னிட்டு அமைச்சரனைவரும், நக ரத்து மக்கள் எல்லோரும் அவனை எதிர்கொண்டு வரவேற்றனர். இங்ஙனம் நகரத்து மக்களால் மிக்க குதூகலத்துடன் வரவேற்கப்பட்ட சகச்சிரானீகன், புதல்வனோடும் பெருந்தேவியோடும் நகரத்துட்புகுந்து தன் அரண்மனைக்கண் அடைந்தான். அதன்பின், முறையாக இளமைப் பருவத்தினையடைந்த உதயனன், இளவரசன் ஆயினான். அவற்கு "யௌகந்தராயணன்"

"உருமண்வான்" 'வசந்தகன்" என்னும் மூவரும் அமைச்சராயினர். பின்னர்த் தன்புதல்வன் உலகாட்சியில், தகுதிவாய்ந்திருத்தலை யுணர்ந்து சகச்சிரானீகன், அப்புதல்வன்மாட்டே அரசியற் சுமை எல்லாவற்றையும் வைத்துவிட்டு மிருகாவதியோடு தவஞ்செய்தற்பொருட்டு இமயமலையை எய்தினன்.

## வெண்பா.

மன்னுங் கலையனைத்து மாமுனிவன் பாற்பயின்றங்
கின்னிசையாம் யாழும் இனிதேற்றே—யன்னையொடு
தந்தை யுறைவிடத்தைச் சார்ந்தங் கரியணையின்
மைந்த னிவர்ந்தான் மகிழ்ந்து.

---

## மூன்றாம் வகுப்பு.

---

### (வாசவதத்தை பிறப்பு.)

உதயனன் தந்தையினது அரியணைக்கண் வீற்றிருந்து அறநெறி கடவாது குடிகளைப்புரந்தான். குடிகளும் அவன் தந்தையிடத்துப் போல அவனிடத்தும் அன்பு பூண்டு ஒழுகினர். இங்ஙனம் பன்னாட்கழிந்ததும் யௌகந்தராயணன் முதலிய மந்திரிகள்பால் அரசியற் சுமையை வைத்துவிட்டுச் சுகமாக இருந்தான். வசுநேமி என்னும் பாம்பு தந்த "இன்னிசை" எனப் பெயரிய யாழை இடைவிடாது வாசித்துக்கொண்டிருந்தான். வனங்களிற்சென்று வேட்டையாடுவதில் மிகவும் குதூகலமுடையவனாயினான். இன்னிசை என்னும் யாழின் ஒலியால் வயப்பட்ட காட்டியானைகளைக் கவர்ந்தான். இங்ஙனம் பல்வகை விளையாடல்களாற் றன் மனத்தை இன்புறுத்தி வருகின்ற வற்சதேயத்தரசனாகிய உதயனன் ஓர் அமயம் "இத்துணைக்காலம் வரையும் எனக்கு எல்லாவகையானும் ஒத்த மனைவி வாய்த்திலள். வாசவதத்தை என்பாளைக் குலத்தானும், ஒழுக்கத்தானும், உருவத்தானும், பருவத்தானும் எனக்கு ஒத்தவளாகக் கேட்கின்றேன். அவள் என் பகைவனும் உச்சயினி நகரத்தரசனும் ஆகிய சண்டமகாசேனன் புதல்வியாவாள். ஆதலின், அவளை எங்ஙனம் அடைவேன்" என்று இங்ஙனம் மனத்தாற் சிந்தித்தான்.

அவ்வமயத்திலேயே சண்டமகாசேனனும் "என் புதல்வியாகிய வாசவதத்தை மங்கைப்பருவம் எய்தினாள். வற்சதேயத்தரசனே யன்றிப் பிறனொருவன் அவளுக்கு ஒத்த கணவனாகக் காணப்பட்டிலன். அவ்வுதயனனோ என் பகைவனாவான். எங்ஙனம் என்பால் மகட்கோடலை அங்கீகரிப்பான்? மேலும் அவன் மானத்தையே பொருளாக உடையான்; பெரிய வீரன்; உலோபம் முதலிய குற்றங்களால் சிறிதும் பற்றப்படாதவன்; நகரத்து மக்களாலும் அமைச்சர்களாலும் மிகவும் அன்பு செய்யப்பட்டவன். ஆதலின், அவனைச் சாமதானம் முதலிய உபாயங்களால் வயப்படுத்துதற்கு இயலாது. இப்பொழுது யாது செயற்பாலது?" என்று இங்ஙனம் மனத்தாற் சிந்தித்தான். நெடுநேரம் சூழ்ந்து முடிவில் "வற்சதேயத்தரசன் வேட்டையாடுதலிலேயே பற்றுடையனாய் இடைவிடாது தமியனாகவே காட்டில் திரிகின்றான். விசேடமாகக் காட்டியானைகளைப் பிடிப்பதில் அவாவுடையனாகக் காணப்படுகின்றான். ஆதலின், அவனைப் பொறியான் இயன்ற யானையால் வயமாக்குவேன். பின்னர், அவன்பால் இசை பயிலுதற் பொருட்டு என் புதல்வியாகிய வாசவதத்தையை நியமனஞ் செய்வேன். அவன் அவள்பாற் காதலுடையனாவான். உதயனனை மருகனாகப் பெறுதற்கு இதனையன்றி வேறுவழியின்று" என்று இங்ஙனந்துணிந்தான்.

இவ்வாறு துணிவுற்றுச் சண்டமகாசேனன் சண்டிகையின் கோயிலை அடைந்து தேவியை வணங்கி "எனது வேண்டுகோளை நிறைவேற்றியருள்க" என்று

வேண்டினன். அப்பொழுது அசரீரிமொழி, "அரச! நின் விருப்பம் நிறைவேறும்; கவலுதல் ஒழிக" என்று கேட்கப்பட்டது. சண்டமகாசேனன் இதனைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்து அப்பொழுதே தூதனையழைத்து, "கௌசாம்பிநகரத்தை யடைந்து வற்சராசன்பாற் சென்று, "நீ இசைத் தொழிலில் மிகவும் நிபுணன் என்பது அறிந்ததொன்றே; என்புதல்வி வாசவதத்தை நின்பால் இசைபயில விரும்புகின்றாள்; ஆதலின், என்பால் நட்பு உளதேல் இங்குவந்து வாசவதத்தையை நன்கு பயிற்றல் வேண்டும்" என்று இங்ஙனம் யான் கூறியதாகச் சொல்லுதல் வேண்டும்" என்று கட்டளையிட்டான். தூதன் கௌசாம்பி நகரத்தை யடைந்து அங்ஙனமே தெரிவித்தான்.

உதயனன் பகைவன் விடுத்த பொருத்தமில்லாத செய்திகளைக் கேட்டு யௌகந்தராயணனை யழைத்து மறைவிடத்திலிருந்து, "அமைச்ச! எக்காரணத்தாற் சண்டமகாசேனன் இங்ஙனம் தூது விடுத்தான். செருக்கினலா! அன்றி வேறு கருத்தாலா! ஆராய்தல் வேண்டும்" என்று இங்ஙனம் கூறினன். பேரறிஞனாகிய யௌகந்தராயணன் வற்சநாயகனது நலங்குறித்து, "வேந்தர் பெரும! நீ வேட்டையாடுதலினும், இசை பயிலுதலினும் மிகவும் பற்றுடையவன் என்பது எல்லாராலும் அறிந்ததன்றே! சண்டமகாசேனன் தன் பெண் மணியால் நின்னை வயப்படுத்தற்கு முயல்கின்றான். எவன் வேட்டையாடன் முதலியவைகளில் மிக்க பற்று வைத்திருக்கின்றானே அவன், குழியில் வீழ்த்திப்

பிடிக்கப்படும் காட்டியானையைப்போலப் பிறன்கைப் பட்டுப் பெரிதும் துன்பத்தை அநுபவிப்பான். ஆதலின், இனி வேட்டையாடன் முதலியவைகளில் வைத்திருக்கும் அவாவை விட்டொழிப்பாயாக" என்று இவ்வாறு மறுமொழி கூறினன். இதனைக்கேட்ட வற்சர் தலைவன் சண்டமகாசேனனுடைய தூதனை நோக்கி, "செல்! நின் தலைவன்பால்; 'நின் புதல்வி இசைக்கலை பயிலுதற்கு விரும்புவாளாயின், அவளை ஈண்டுச் சேர்ப்பிப்பாயாக; அவளைப் பயிற்றுவேன்' என்று இங்ஙனம் யான் கூறியதாகத் தெரிவிக்கவேண்டும்" என்று கட்டளையிட்டான். உதயனன் இங்ஙனம் மறுமொழி கூறித் தூதனைப்போக்கிச் சண்டமகாசேனன்பாற் பெரிதுஞ்சினமுடையனாயினன். அப்பொழுதே அவனோடு பொருதற்கு விரும்பினன். அவ்வமயம் யௌகந்தராயணன் "அரச! இது செய்தற்கு ஒல்லாதது; தக்கதும் இன்று. சண்டமகாசேனனே, நின்னோடு உறவுகோடலை விரும்புகின்றான்; அவன் பெருமையைக் கேட்பாயாக. "உச்சயினிநகரத்தில் மகேந்திரவன்மன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் உளன். அவற்கு, சயசேனன் எனப்பெயரிய புதல்வன் இருந்தான். அவற்குப் புதல்வனாக மகாசேனன் தோன்றினன். அவன் ஆண்மையிலும், திண்மையிலும், தன்னை ஒப்பாரும் மிக்காரும் இல்லாதபடி இவ்வுலகத்தைக் காவல்புரிந்தான்; அவன் ஓர் அமயம், 'எனக்கு ஒத்த இல்லாளையும், வாட்படையையும், எவ்வாறு அடைவேன்?' என்று

இங்ஙனம் சிந்தித்தான். அம்மனைவியையும் வாட்படையையும் பெறுதற்பொருட்டுச் சண்டிகையின் கோயிலையடைந்து அவ்வம்மையை வணங்கி அவ்விடத்திலேயே பன்னாளாகச் செயற்கரிய தவத்தைச் செய்தான்; தவமுடிவில், தன்றலையை அறுத்துத் தீக்கட்பெய்தான்; அப்பொழுது அருண்மிக்க சண்டிகை அவன் கண்ணெதிரிற் றோன்றினாள்; அவளை மகாசேனன் தரிசித்து விரைந்தெழுந்து வணக்கம் புரிந்து கைகூப்பி நின்றான்; சண்டிகாதேவி அவனைப்பார்த்து, "வேந்தே! இத்தகைய நின்தவத்தால் அருளுடையளாயினேன்; இவ்வாட்படையைப் பெற்றுக்கொள்வாயாக; இதனால், நீ பகைவர்களான் வெல்லப்படாதவன் ஆவாய்; இன்னும் அங்காரகன் என்னும் பெயரினையுடைய அசுரர் தலைவன் ஒருவன் உளன்; அவற்கு அங்காரவதி யென்னும் பெயரினையுடைய பெண்மணி ஒருத்தி இருக்கின்றாள்; அவள் நின் மனைவியாவாள். நீ என்பால் வரங்கோடற் பொருட்டுத் தலையறுத்தலாகிய சண்டகன்மத்தைச் செய்தமையால், சண்டமகாசேனன் என்னும் புகழ்ப் பெயரை அடைவாயாக" என்று கூறி அவ்வம்மை மறைந்துவிட்டாள்.

சண்டமகாசேனன், தன் அவா பயனுறப்பெற்று மிக்கமகிழ்ச்சி யடைந்தான். அவற்கு முன்னரே ஒப்பற்ற மதயானை ஒன்றுளது. இப்பொழுது சண்டிகாதேவியின் திருவருளால் வாட்படையும் கிடைத்தது. ஆதலின், பகைவர்களால் அச்சுறுத்தப்படாதவன் ஆயினான்.

பின்னர், ஓர்அமயம், சண்டமகாசேனன் வேட்டை யாடல் குறித்துக் காட்டினை யடைந்தான்; அக் காட்டில் மலையை ஒத்த உருவினையுடைய ஒரு பன்றி யைக் கண்டான்; அது மிக்க சீற்றத்தோடு அரசனை நோக்கி விரைந்து ஓடிவந்தது. அஃது அரசன் உய்த்த கூரிய பகழிகளால் உயிர்நிலை உறுப்புக்கள் அடிக்கப்பட்டும், அத் துன்பத்தைப் பொருட்படுத் தாது, அவன் தேரைச் சிதறச்செய்து துகளாக் கியது; அதன்பின் ஒரு பிலத்தின் உட்புகுந்தது; தேர் ஒழிந்து காலாட்படையினை மாத்திரம் உடைய அரசன் ஆற்றொண்ணுச் சினத்தால் அப் பன்றியைப் பின்றொடர்ந்து பிலத்தினுட் புகுந்தான்; பன்றியோ சிறிதுதூரம்சென்று காணப்படாததாயிற்று. சண்ட மகாசேனன் அங்குமிங்கும் பார்த்து அகன்ற ஒரு காட்டினை யடைந்தான்; ஆண்டு வியப்புடையனுய்ச் சுற்றித் திரிந்து மலையையொத்த மதில்சூழ்ந்த நக ரம் ஒன்றைக் கண்டான்; அந்நகரத்தின் புறத்தே உள்ள உத்தியானவனத்தில் தெளிந்த நீர்ப் பெருக் கினையுடைய ஒரு தடாகம் இருந்தது. அதன் கரை யிற் சிறிதுநேரம் இருந்து வழிநடத்தலால் உண்டா கிய இளைப்பைப் போக்கினன். அவ்வமயம், அவ் விடத்தே, மன்மதனது வெற்றித் திருவினை யொத்து விளங்கிப் பற்பல தோழிகளும் பணிப்பெண்களும் புடைசூழ வருகின்ற ஒரு நங்கையைக் கண்டான்; அவள், சேய்மைக்கண்ணே சண்டமகாசேனனைக் கண்டு மிக்க காதற்பெருக்கால் இமைத்தலின்றி அவ னையே உற்றுநோக்கினவளாய் மெல்ல மெல்ல நடந்து

அவன் பக்கல் எய்தினுள். எய்தி, "நீ யார்? எங்கு வந்தனை? யாதுசெய்ய விரும்புகின்றனை?" என்று வினவினுள் சண்டமகாசேனன், தன் வரலாறு முழுதையும் உள்ளவாறு தெரிவித்தான். அதனைக்கேட்டு அப்பெண்மணி, ஒரு காரணமுமின்றிப் போந்த துன்பமுடையாளாய்க் கண்களினின்றும் நீர் ஒழுக அழத்தொடங்கினுள். சண்டமகாசேனன், "நீ யார்? எவன்மகள்? எதற்காக அழுகின்றனை?" என்று கேட்டான். அவள், "பெரியோய்! கேட்பாயாக; நின்னுற் பன்றியுருவமாகக் காணப்பட்டவன் அங்காரகன் என்னும் பெயரினையுடைய அசுரர் தலைவன் ஆவான். யான் அவன் புதல்வி; அங்காரவதி யென்னும் பெயரினையுடையேன்; கண்ட அளவினுனே நின்பாற் காதற் கிழமையுடையளாயினேன்; அத்தகைய என் தந்தை தவவன்மையால் வச்சிரப் படையாலும் பிளக்கவொண்ணுத உடலினைப்பெற்ருன்; பல அரசர்களுடைய உவளகங்களினின்றும் பல பெண்மணிகளை எற்குப் பணிசெய்தற்பொருட்டுக் கொணர்ந்தான்; அவன் இப்பொழுது பசிதாகங்களால் வாட்டமுற்று உறங்குகின்ருன். உறக்கத்தினின்றும் எழுந்து நின்னைக் காண்பானுயின், நிச்சயமாகக் கொன்றுவிடுவான்; விரைவில் நேரக்கூடிய நின் கேட்டைக்கண்டு மிகவும் வருந்துகின்றேன்" என்று இங்ஙனங் கூறினுள்.

இவ்வாறு கூறிய அங்காரவதியின் சொற்களைக் கேட்டுச் சண்டமகாசேனன் அவளை நோக்கி, "நங்காய்! அஞ்சற்க. வருவன வந்தே தீரும்; என்பால்

அன்புளதேல் என் சொல்வழி நிற்பாயாக; எப்பொழுது இவன் தூக்கம் நீங்கி விழிக்கின்றானோ அப்பொழுது நீ அவன் முன்னின்று கண்ணீர் உதிர்த்து அழல்வேண்டும்; அவன் அவசியம் நின் துன்ப காரணம் யாது என்று வினவுவான்; அவனை நோக்கி, "தந்தையே! நின்னினும் வலியனாகிய ஒருவன் போந்து நின்னைக் கொன்று விடுவானாயின் அப்பொழுது யான் அநாதையாக நின்று என்செய்வல்?" என்று மறுமொழி கூறுக; அதனைக்கேட்டு அவன் கூறும் மறுமொழியை என்பால் தெரிவித்தல்வேண்டும்; அதன்மேல் நினக்கும் எனக்கும் நலம் உண்டாம்" என்று இங்ஙனம்கூறினான். இதனைக் கேட்டு அங்காரவதி; "அங்ஙனமே செய்வல்" என்று உடன்பட்டாள்.

காமவேளின் ஏவலால் தந்தையின் கொலையினும் பெண்கள் முயல்கின்றனர் என்னும் இந் நிகழ்ச்சியால் உலகத்தீர்! அம்மன்மதனது கொடுமையை உணர்வீர்களாக.

அதன் பின்னர், அவள் தன் தந்தையால் சண்டமகாசேனனுக்குக் கேடு வருங்கொலோ என்னும் ஐயமுடையவளாய் அவனை ஒரு மறைவிடத்திற் சார்த்து வைத்துத் தூங்குகின்ற தந்தையின் பக்கலெய்தி, அவன் விழிக்கும் அமயத்தை எதிர்பார்த்து நின்றாள்.

அதன்பின் சிறிதுநேரஞ் சென்றதும் துயில்நீத்தெழுந்த அங்காரகன் கண்களை விழித்துத் தன்முன்னிலையிற் கண்ணீர் ஒழுகநிற்கின்ற அங்கார

வதியைக் கண்டான். "ஏதற்காக இங்ஙனம் அழு கின்றனை !" என்று கேட்ப, "ஐய! நின்னினும் வலிய வீரன் ஒருவன் போந்து நின்னைக் கொன்றுவிடுவா னாயின், அப்பொழுது எற்குப் புகலிடம் யாதாம்?" என்று கூறினாள். அங்காரகன் அதனைக்கேட்டு நகை செய்து, "குழந்தாய்! என் உடல் முழுதும் வச்சிர மயம் என்பதை அறிந்திலாய்கொல்! மேலும் என் இடக்கையில் நுண்ணியதுளை ஒன்று உள்ளது; அதன்கண் அடிவிழுமாயின் எனக்கு இறப்புநேரும். என்னையன்றி வேறொருவற்கும் இது தெரியாது. இங்ஙன மிருக்குங்கால் என்னைக்கொல்லுதற்கு யாவன் வலியுடையவன் ஆவான்? ஆதலின் நீ துன்புறுதல் ஒழிவாயாக" என்று கூறினான்.

இவ்வாறு இவன் கூறிய மொழிகளை மறைந்து நின்ற சண்டமகாசேனன் கேட்டான். அதன்பின் அப்பொழுதே அங்காரகன் படுக்கையினின்றெழுந்து நீராடி முக்கண்ணனாகிய சிவபிரானுக்குப் பூசை செய்யத் தொடங்கினான். அவ்வமயத்தையே பார்த் துச் சண்டமகாசேனன் வில்லின்கண் அம்பைப்பூட்டி அங்காரகனைப் போர்க்கழைத்தான். அப்பொழுது அங்காரகன் மௌனவிரதத்தை ஒழிக்க விருப்பமற்ற வனாய்த் தனதிடக்கையைத் தூக்கிநீட்டி, "சிறிது தாழ்த்தலைப் பொறுத்திருத்தல் வேண்டும்" என்று குறிப்பில் தெரிவித்தான். சண்டமகாசேனன் இதுவே நல்லசமயம் என்றெண்ணி விரைந்து அக்கையில் அம்பு களைப் பொழிந்தான். உயிர்நிலைத்தானத்தில் அடிக்கப்

பட்ட அங்காரகன் உயிர் துறந்தான். அதன்பின், சண்டமகாசேனன் அச்சமற்று அங்காரவதியை மணந்து உச்சயினி நகரத்தை நோக்கித் திரும்பினான். பின்னாட்சென்றதும் அங்காரவதி, பாலகன் கோபாலகன் என்னும் இரண்டு புதல்வர்களைப் பெற்றாள். பின் ஓர் அமயம் சண்டமகாசேனன் இந்திரனுக்குப் பெரும் விழாச் செய்தான். அதனான் மகிழ்ந்த இந்திரன் கண் எதிரில் வெளிப்பட்டுச் சண்டமகாசேனனை நோக்கி, "வேந்தே! நின்பால் மிகவும் மகிழ்ச்சியுடையவனாயி னேன். ஆதலின், என் அருளால் உருவத்திலும், குணத்திலும், ஒப்புவமையற்ற பெண்மகவையடைவாய்" என்று கூறினான். அங்ஙனமே அவற்கு ஒரு பெண் மணி பிறந்தாள். அப்பெண் மகவு பிறக்குங்கால் விண் ணில் அசரீரியாக "இப் பெண்மணியின் வயிற்றிற் காமவேளின் கூறாக ஒரு புதல்வன் உண்டாவான். அவன் வித்தியாதரர்களின் சக்கரவர்த்தியாவான்" என்னும் சொற்கள் எழுந்தன. சண்டமகாசேனன் அச்சொற்களைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி யெய்தினான். அதன்பின், வாசவன் அருளாற் றரப்பட்டமையான் அவளுக்கு வாசவதத்தை என்னும் காரணப் பெயரிட் டான். அப்பெண் முற்பக்கத்துத் திங்களஞ்செல் வன் கலைபோல முறைமேய உறுப்புக்கள் வளரப்பெற் றுத் தந்தையின் கண்களை இன்புறுத்தினாள்.

இங்ஙனம் மிக்க பெருமையினையுடைய சண்ட மகாசேனன் எய்தற்கரிய வலிமையுடைமையால் அச்ச மிலனாய் எப்பொழுதும் பிறரால் வெல்லுதற்கு அரிய

ஞயினன். மேலும் இவன் தன்மகளை நினக்குத் தருதற்கு விரும்புகின்றான். ஆயினும் மானத்தால் இரத்தற் கேடுவருங்கொலோ வென்னும் அச்சத்தால் முதலில் வேண்டிக்கோடற்கு விரும்பவில்லை. வாசவதத்தைக்கு நீயே மணவாளன் ஆவாய் என்னுமிதன்கட் சிறிதும் ஐயமின்று" என்று இங்ஙனம் கூறி யௌகந்தராயணன் ஒழிவெய்தினன். இதனைக் கேட்டு உதயனன் வாசவதத்தையையே இடைவிடாது நினைவு கூர்ந்து சிலநாட்களைக் கழித்தான்.

## வெண்பா.

விண்ணோ ரிறையருளான் மேதினியி லுஞ்சைநகர்க்
கண்ணு ரெழிலெல்லை காட்டுதல்போ—னண்ணிய
வாசவ தத்தை வரலாறு கேட்டின்ப
மாசலதி தோய்ந்தான் மனம்.

---

# நான்காம் வகுப்பு.

---

## (சிறைப்படல்.)

இஃது இங்ஙனமிருக்க வற்சதேயத் தரசனது தூதுமொழியை ஏற்றுக்கொண்டு உச்சயினி நகரத்தை யடைந்த தூதன், உதயனன் ஈந்த மறுமொழியைச் சண்டமகாசேனன் பக்கல் உள்ளவாறு தெரிவித்தான். அதனைக்கேட்ட சண்டமகாசேனன் "மானமுடையாரில் தலைசிறந்தவன் உதயனன். நம் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளான். வாசவதத்தையை அவன்பக்கல் அனுப்புவேமாயின், அது நம்மை மிகவும் சிறுமைப் படுத்துவதாகும். ஆதலின், இப்பொழுது வேறு சூழ்ச்சிகளால் உதயனனை நம் வயப்படுத்துதலே தக்கதாகும்" என்று இவ்வாறு கருதினன். இங்ஙனந் துணிந்து படைத்தலைவனை யழைத்து "மிகப் பெரியதொரு எந்திர யானையைச் செய்விப்பாயாக" என்று கட்டளை யிட்டான். அப் படைத்தலைவன் நிபுணர்களான சிற்பிகளாற் பொறிக்களிறு ஒன்றை இயற்றுவித்தான். சண்டமகாசேனன் பொறியான் இயன்ற யானையின் உள்ளே பல போர்வீரர்களை மறைத்துவைத்து விந்தியவனத்தில் திரியச் செய்தான். யானைபிடிப்பதில் மிக்க அவாவுடையனாகிய உதயனன்பால் வேடர்கள்வந்து "வேந்தர் பெரும! விந்தியவனத்தில் பெரிய உருவத்தினையுடைய மதயானை ஒன்று திரிகின்றது; இத்தகைய

யானை இதுகாறும் எங்களான் முன்னர்க் காணப் படாத தொன்று, பெரிய உருவத்தால் மலைபோலக் காணப்படுகின்றது" என்று இங்ஙனந் தெரிவித்த னர். இதனைக்கேட்டு உதயனன் பேருவகையால் அவ்வேடர்களுக்கு நூறு பொற்காசுகளைப் பரிசிலாக உதவினான். பின்னர்ச் "சண்ட மகாசேனனுக்கு 'நடைமலை' என்னும் பெரிய மதயானை ஒன்று இருக் கின்றது. அதற்கு எதிராக இவ் யானையைக் கொணர் வேன். அதனாற் சண்டமகாசேனன் எளிதில் வெல் லுதற்கு உரியன் ஆவான். வாசவதத்தையையும் தானே கொடுத்துவிடுவான்" என்று இவ்வாறு மனத் திற் கருதினான்.

இங்ஙனம், மனத்தின்கண் அவாவை மேற் கொண்டு பிற்றைநாட் காலையில் அமைச்சர்கள் தடுத் தும் கேளானாய் யானையைக் கவர்தற் பொருட்டு வேடர்கள் சூழ்வரச் சென்றான். அமைச்சர்கள் கணிதம் வல்லோரை யழைத்து, அவன் புறப்பட்ட நேரத்தின் பயனை வினவினர். அக்கணிகள், "சிறைக்கோட்டம் புகுந்து ஒரு பெண்ணை அடை வான்" என்று தெரிவித்தனர். விந்திய வனத்தை யடைந்த வற்சர்தலைவன் படைவீரர்களைக் கண்டு கலக்கமுற்று யானை ஓடிவிடும் என்னும் ஐயத்தால் அவ்வீரர்களைச் சேய்மைக்கண்ணே நிறுத்திச் சில ஏவலாளர்கள் சூழ்ந்துவரச் சுற்றினான். வசுநேமி யாற் றரப்பட்ட 'இன்னிசை' எனப் பெயரிய யாழைக் கேட்டற்கு இனிமை பயக்குமாறு வாசித்

துக்கொண்டு உதயனன் காட்டின் இடையே உயிருள்ள யானையைப்போல மெல்ல மெல்லத் திரிகின்ற பொறியானையைக் கண்டான்.

உதயனன் மிகக் கூரிய அறிஞனாயினும் மாலைக் காலத்து இருளாற் கரிய நிறத்தினையுடைய காட்டில் அம்மாயக் களிற்றை உயிருள்ள யானையாக எண்ணி மெல்ல மெல்லச் சென்று அதன் பக்கலையடைந்தான். அப்பொறி யானையோ காதுக்கு இனிமை பயக்கும் அவ் யாழிசையால் இழுக்கப்பட்டதுபோல முறம் போன்ற காதுகளை மிகவும் உயர எடுத்து மீண்டு மீண்டும் பக்கல் அணுகியும், தூரச்சென்றும் மனிதர் இல்லாத அக்காட்டில் அரசனை நெடுந்தூரம் ஈர்த்தது. முடிவில், அப்பொறியானையினுள்ளே யிருக்கின்ற போர்வீரர்கள் அரசன் துணையில்லா திருத்தலை யுணர்ந்து விரைந்து வெளிப்பட்டு வாட்படை ஏந்திய கையினராய் நாற்புறமுஞ் சூழ்ந்தனர். அவர்களை வற்சர்தலைவன் பார்த்துச் சினமுற்று உறையினின் றெடுத்த வாளினால் அவ்வெல்லோரையும் வீழ்த்தினான். இதற்கிடையில் அக்காட்டிலுள்ள புதரில் மறைந்திருந்த வேறு சில போர்வீரர்கள் விரைந்து ஓடிவந்து பிற்பக்கத்தே பிடித்துக்கொண்டனர். ஆங்காங்கு மறைந்திருக்கின்ற பல போர்வீரர்கள் மேன்மேலும் குறிப்பான் அழைக்கப்பட்டு ஓடிவந்து அவனைப் பிணித்துச் சண்டமகாசேனன் பக்கல் சேர்த்தனர். சண்டமகாசேனன் வற்சர்தலைவனைச் சிறப்பாகப் பெருமைப்படுத்தி அன்போடு உபசரித்

தான். பின்னர், "வேந்தே! நின் மனத்தில் துன்புறல் ஒழிக. நின்பால் எனக்குப் பகைமையின்று. என் புதல்வி வாசவதத்தை இசைக்கலை பயிலுதற்கு விருப்பமுடையளாக இருக்கின்றாள். அவளைப் பயிற்றுவித்தல்வேண்டும். அதன்பின், நலம் எய்துவாய்" என்று இங்ஙனங் கூறினான்.

உச்சயினி நகரத்திலுள்ளமக்கள் உதயனன்பாற் பெரிதும் அன்பு பூண்டு ஒழுகினர்; அதன்பின் சண்டமகாசேனன் ஒருசமயம் உதயனனுக்கு அமங்கலத்தைச்செய்யவுங்கூடுமென்று ஐயமுற்ற மனத்தினராய் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர். இங்ஙனம் நகரத்து மக்களிடைப் பெருகிவரும் ஐயப்பாட்டைச் சண்டமகாசேனன், ஒற்றர்களால் உணர்ந்து, அவர்களையழைத்து "எனக்கு வற்சர்தலைவன்பாற் பகைமையின்று. அவனோடு நட்புரிமை கோடற்கே இவ்வுபாயம் என்னான் மேற்கொள்ளப்பட்டது. ஆதலின், என்பால் நுங்கட்கு வேறுவகையானவேறுபாடுவேண்டா" என்று இவ்வாறு தெரிவித்தான். பின்னர்ச் சண்டமகாசேனனால் ஏவப்பட்ட வாசவதத்தை உதயனன் பக்கல் எய்தி இசைக்கலை பயிலுதற்குத் தொடங்கினாள். வாசவதத்தை வற்சராசன் இவ்விருவர்பாலும் முன்னரே முளைத்தெழுந்த காதற்கிழமையானது இப்பொழுது துளிர்த்தெழுந்தது.

## வெண்பா.

பொறியா னியன்ற புழைக்கைமா வீர்ப்ப
நெறியா ருதயனன்சீர் நீங்காச்—சிறைசேர்பு
மாசிரியுங் காதன் மடவரற்கி யாழ்பயிற்றும்
ஆசிரிய னாயினா னங்கு.

# ஐந்தாம் வகுப்பு.

---

## (சிறை வீடல்.)

இதற்கிடையில், கௌசாம்பி நகரத்தில் "உதயனன், பகைவனாகிய சண்டமகாசேனன் சிறையில் அகப்பட்டான்" என்று பெரிய கிளர்ச்சி உண்டாயிற்று. "அப்பொழுதே படைகளைச் செலுத்தி உச்சயினி நகரத்தைத் தாக்க வேண்டும்" என்று நாலுபக்கங்களிலும் நகரத்து மக்கள் பேரொலி செய்தனர். அப்பொழுது அமைச்சர்களுள் ஒருவனாகிய உருமண்வான் எல்லோரையும் அழைத்துச் "சண்டமகாசேனனைப் படைகளால் வெற்றிகோடல் அரிது. அவன் சண்டிகாதேவியின் திருவருளால் அளவற்ற வலிமையை அடைந்துளான். இன்னும் உச்சயினி நகரத்தை எதிர்த்துச்செல்லுவேமாயின், அவன் ஒருவாறு உதயனனுக்குக் கேடு விளைவிக்கவுங்கூடும். ஆதலின், இப்பொழுது எதிர்த்துச் சேறல் தக்கதன்று. இக்காரியம் நன்கு ஆராய்ந்து நுண்ணறிவாற் சாதிக்கத்தக்கது" என்று இங்ஙனங் கூறினான். அதன்பின், நுண்ணறிவுடைய யௌகந்தராயணன் "ஓ நகரத்தவர்களே! நீங்கள் எல்லோரும் இவ்விடத்திலேயே இருத்தல் வேண்டும். உருமண்வான் அரசியற் காரியங்களெல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளுவான். யானே வசந்தகனைத் துணையாகக் கொண்டு இவ்விடத்தினின்றும் புறப்பட்டு என் அறி

வின் மாட்சியால் உதயனனைப் பகைவன் கையினின்றும் விடுவித்து இங்குக் கொணர்வேன். இதன்கட் சிறிதும் ஐயமின்று. வேண்டுங் காலத்தில் வெளிப் படுத்துதற்குரிய மறைத்துக்கோடன் முதலிய விஞ்சைகள் என்பால் இருக்கின்றன" என்று இவ்வாறு சொல்லினான். இங்ஙனம் சொல்லிவிட்டு யௌகந்தராயணன் எல்லோரையும் உருமண்வான் கையிற் சேர்த்து வசந்தகனோடு உச்சயினி நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். விந்திய வனத்திற்குச் சென்று உதயனனுடைய அன்புமிக்க நண்பனாகிய 'புளிந்தகன்' என்னும் பெயரினையுடைய வேடர் தலைவனைக் கண்டான். அவ்வேடன் யௌகந்தராயணனை விருந்தினர் முறையில் உபசரித்தான். யௌகந்தராயணன், தான் செய்ய விரும்பிய காரியங்கள் எல்லாவற்றையும் அவற்குச் சொன்னான். முடிவில் "வற்சர் தலைவன் மீண்டு வருங்கால் அவனை நீ காத்தல் வேண்டும். பெரிய படைவீரர்களோடு நீ இவ்விடத்திலேயே விழிப்புடையவனாக இருத்தல் வேண்டும்" என்று இங்ஙனம் வேண்டினான். புளிந்தகன், "அங்ஙனமேயாக" என்று உடன்பட்டான். அதன்பின், யௌகந்தராயணன் வசந்தகனோடு புறப்பட்டு உச்சயினி நகரத்திற்கு அணிமையில் அடைந்தான். அவ்விடத்தில் அஞ்சத்தக்க உருவினையுடைய பலவகை வேதாளங்கள் சூழ்ந்த சுடலையுட் புகுந்தான். அங்கு "யோகேசுவரன்" என்னும் பெயரினையுடைய வேதாளம் ஒன்று யௌகந்தராயணனுக்கு

நண்புடையதாயிற்று. யௌகந்தராயணன் வேண்டு கோட்கிணங்கி யோகேசுவரன் 'உருவமாற்று' என்னும் பெயரினையுடைய விஞ்சையை அவற்கு உபதேசித்தது. அவ்விஞ்சையால் அப்பொழுதே வேற்றுருக் கொண்ட யௌகந்தராயணன், யாண்டு முதிர்வும் குறுமையும் பிறழ்ச்சியுணர்வும் உடையவனாயினன். அவ்விஞ்சையாலேயே வசந்தகனையும் பருத்த வயிறும் வேறுபட்ட முகமும் உடையவனாகச் செய்தான். அவனை வாயிலின்கண் நிறுத்தி யௌகந்தராயணன் அரண்மனையினுட் புகுந்தான். அந்நகரத்துள்ள சிறுவர் எல்லோரும் யௌகந்தராயணனை மருளன் என்று எண்ணிக் கைகொட்டிப் பேரொலி செய்து சூழ்ந்தனர். அதற்கு ஒத்தவாறே யௌகந்தராயணனும் ஆடிப்பாடி அச்சிறார்களுக்குக் குதூகலத்தை விளைவித்தான். இதனை வாசவதத்தை கேட்டுத் தோழியை உய்த்து யௌகந்தராயணனை உவளகத்திற் கொணர்வித்தாள்.

பித்த வேடங்கொண்ட யௌகந்தராயணன் அவ்விடத்திற் பகைவன் வயப்பட்டிருக்கின்ற உதயனனைக் கண்டு நேத்திரங்களினின்றும் மிகவும் கண்ணீர் ஒழுக்கினான். உதயனன், அவயவக் குறிப்புக்களால் யௌகந்தராயணனை வேற்றுருவில் மறைந்திருப்பவனாக அறிந்தான். அதன்பின், யௌகந்தராயணன் விரைந்து யோக வன்மையால் அவ்விடத்திலேயே மறைந்திருந்தான். உதயனற்கு மாத்திரம் கண்ணுக்குப் புலனாமாறு இருந்தான். அங்குள்ள எல்லோரும், "இப்பித்தன் யாண்டுச் சென்றான்" என்று வியப்பெய்தினர். உதயனன்,

யௌகந்தராயணன் தன் கட்புலனுக்கு மாத்திரம் தெரிய இருத்தலைக் கண்டு, அவனோடு அளவளாவிப் பேசுதற்கு உரிய அவகாசம் எய்துதற்கு வாசவதத்தையை நோக்கிப் "பனுவலாட்டி பூசைக்குரிய பொருள்களைக் கொணர்க" என்று கட்டளையிட்டான். அவள், 'அங்ஙனமே' என்று தோழிகளோடு புறம்போந்தாள்.

இதற்கிடையில் யௌகந்தராயணன் 'விலங்கு முறித்தல்' 'வாசவதத்தையை வசீகரித்தல்' இவை முதலிய யோகவிஞ்சையின் திறமைகளை உதயனற்கு உபதேசித்து, வேற்றுருக்கொண்டு வாயிலின்கண் இருக்கின்ற வசந்தகனையும் தெரிவித்து விரைவில் வெளிச்சென்றான்.

பின்னர், வாசவதத்தை பூசைக்குரிய உபகரணங்களை எடுத்துக்கொண்டு வந்தாள். உதயனன் அவற்றைக்கொண்டு சொற்கிறைவியை அருச்சித்தற்குத் தொடங்கினான். அப்பூசையில் "தக்கிணைப் பொருள் பெறுதற்குரிய அந்தணன் ஒருவன் வாயிலின்கண் இருக்கின்றான். அவனை இங்கு அழைத்து வருக" என்று கட்டளையிட்டான். வாசவதத்தை, வேற்றுருக்கொண்டு வாயிலின்கண் இருக்கின்ற வசந்தகனை உள்ளே புகுவித்தாள். அவன் தக்கிணைப் பொருளைப் பெற்றுக்கொண்டு பகைவன் வயப்பட்டிருக்கும் அரசனைப் பார்த்து, அதனால் உண்டாய பெருந்துன்பத்தை உள்ளே அடக்குவதற்கு ஆற்றாதவனாய் வாய்திறந்து அழுதான். உதயனன், "இவ்

வசந்தகன் ஒரு சமயம் துன்பமிகுதியாற் காரியத்தை மறந்து உண்மையை வெளிப்படுத்துவான்கொல்" என்னும் ஐயமுடையனாய், "ஓ, அந்தண! நோயால் வேறுபட்ட உடலினையுடைய நின்னை விரைவிலேயே இயற்கை நிலையுடையவனாகச் செய்வேன். அழுதல் வேண்டா. இனி, இவ்விடத்திலேயே என் முன்னிலையில் இருப்பாயாக" என்று இவ்வாறு கூறினான். வசந்தகன் "அங்ஙனமே" என்று கூறி உடலின் வேற்றுமையால் பெண்பாலர்க்கு விளையாட்டுப் பொருள்போல இருந்து, இடைவிடாது குதூகலமடைந்துவரும் வாசவதத்தையின் மனத்தை இன்புறுத்திக் கொண்டிருந்தான்.

இங்ஙனம் சின்னாட் சென்றதும், வாசவதத்தை வற்சர்தலைவன்பாற் காதலுடையளாயினாள். அயக்காந்தத்தால் ஊசி இழுக்கப்படுதல்போல் அவ்வுதயனனது உருவ முதலிய குணங்களால் இழுக்கப்பட்ட வாசவதத்தை மனத்தால் அவனையே தனக்குக் கைப்பிடி நாயகனாக வரித்தாள். பின்னர், யௌகந்தராயணன் இந்நிகழ்ச்சிகளை யறிந்து பிறர் காணாதவாறு வந்து உதயனன் முன்னின்று, "வேந்தர் பெரும! சண்டமகாசேனனால் வஞ்சிக்கப்பட்ட நீ தகுதியில்லாததான பிறர் வயப்பட்ட இந்நிலையை அனுபவிக்கின்றாய். சண்டமகாசேனன் வாசவதத்தையைக் கொடுத்து நின்னைச் சிறப்புச் செய்து சிறையினின்றும் விடுவித்தற்கு விரும்புகின்றான். ஆதலின், அக்காலத்தை

எதிர்பார்த்து நீ இங்கிருத்தல் தக்கதன்று. இனி, வாசவதத்தையை வலிந்துபற்றி இங்கிருந்து வெளிப்படுதலே நல்லதாகும். அங்ஙனம் செய்யின் நம்மை வஞ்சித்தவற்கு எதிர் செய்ததாகும். அந்நிகழ்ச்சியில் இச்சூழ்ச்சியானது என்றுங் கருதப்பட்டது. சண்டமகாசேனன் வாசவதத்தைக்குப் "பத்திரவதி" என்னும் பெயரினையுடைய பெண் யானையைக் கொடுத்திருக்கின்றான். அது மிகவிரைவிற் செல்லுந் திறமை வாய்ந்தது. அதற்குரிய யானைப்பாகன் "ஆசாடகன்" என்னும் பெயரினையுடையான் ஒருவன் உளன். அவனை யான் மிகு பொருள் கொடுத்து நம் விருப்பத்திற்கு அநுகூலமுடையவனாகச் செய்திருக்கின்றேன். மேலும், இவ்விடத்தில் "மகாமாத்திரன்" என்னும் பெயரினையுடைய குதிரைச்சாலைத் தலைவன் ஒருவன் இருக்கின்றான். மிக்க திறமை வாய்ந்த அவன் களிப்பு மயக்கத்தால் அறிவு கெடும் வண்ணம் அளவின் மேம்பட்ட கள்ளினை அவற்குக் கொடுத்தல் வேண்டும். இங்ஙனம் முன்னரே செய்யத் தக்கவைகளைச் செய்து நள்ளிரவிற் பிறராற் பார்க்கப்படாமல் வாசவதத்தையோடு யானைக்கன்றின்மேல் ஏறி, அன்புமிக்க காவலாளர் சூழ்வர, நகரத்தினின்றும் வெளிச்செல்லல் வேண்டும். யானோ, முன்னர்ச் சென்று "புளிந்தகன்" என்னும் பெயரினையுடைய நின் நண்பனோடுகூடி வழியிடை நேரக்கூடிய இடையூறுகளைப் போக்கி நின்வரவை எதிர்பார்த்திருப்பேன்" என்று இங்ஙனம் கூறினான்.

இவ்வாறு உதயனற்குச் செய்யத் தக்கவைகளை உபதேசித்து யௌகந்தராயணன் வெளிச்சென்றான். உதயனன் சிறிதுநேரம் நினைவு கூர்ந்து செய்யத் தக்கவைகளைப்பற்றி நன்றாக ஆராய்ந்தான். பின்னர், வாசவதத்தை அவன் பக்கலில் வந்தாள். அவளோடு நெடுநேரம் பலகதைகளைச் சொல்லி அவள் மனத்தைப் பலவாறு சோதித்து முடிவில், "நம் செயற்கு இவள் துணை நிற்பவள் ஆவாள்" என்று துணிவுற்றான். அவள்பால் நம்பிக்கை மேற்கொண்டொழுகும் இவ்வுதயனன் அவட்குத் தான் செய்யவிரும்பிய காரியங்களைப்பற்றிக் கூறினான். அவள், மகிழ்ச்சியோடு உதயனனைப் பின்றொடர உடன்பட்டாள். பின்னர், "ஆசாடகன்" என்னும் பெயரினையுடைய யானைப் பாகனை யழைத்து, "பத்திரவதி" என்னும் யானையைப் பிரயாணத்திற்குச் சித்தம்செய்து இவ்விடத்திலேயே நிறுத்திவைத்துப் பிரயாண காலத்தை எதிர்பார்த்திருத்தல் வேண்டும்" என்று இவ்வாறு கட்டளை யிட்டாள். அதன்பிறகு, உதயனனது விருப்பத்திற் கிணங்கிக் கடவுட் பூசையைக் காரணமாகச் செய்து குதிரைச்சாலைத் தலைவனாகிய மகாமாத்திரனுக்கும் மற்றை யானைப்பாகர்களுக்கும் அளவிகந்த கள்ளைக் கொடுப்பித்தாள். அதனாற் களித்து மயங்கிய எல்லோரும் அறிவிழந்தவராயினர்.

பின்னர், நள்ளிரவில் உதயனன் 'இன்னிசை' என்னும் யாழை எடுத்துக்கொண்டு யௌகந்தராயணன் உபதேசித்த யோக வன்மையால் விலங்கை

முறித்து, அன்புமிக்க காவலாளர்கள் தன்னைச் சூழ்ந்துவர, வசந்தகனோடு 'பத்திரவதி' என்னும் யானையில் இவர்ந்தான். வாசவதத்தையும் மறைவான எல்லா நிகழ்ச்சிகளையும் உள்ளே அடக்கி வைத்திருக்கும் 'காஞ்சனமாலை' என்னும் பெயரினையுடைய தோழியோடு அவ்யானையிலேயே ஏறினாள். அந்நால்வர்க்கும் முன்னர் ஐந்தாவனாக யானைப்பாகனும் அதன்கண் ஏறினான். இவ்வாறு ஐவர்களையும் ஏற்றிக்கொண்டு 'பத்திரவதி' என்னும் யானை மிக்க வேகத்தோடு புறப்பட்டது.

அதன்பின், வீரபாரு, தாளபடன் என்னும் இரண்டு வாயில் காவலர்கள் வழியிற்றடுத்தனர். உதயனன் அவ்விருவரையும் வாட்படையால் வீழ்த்தி மிக்க வேகத்தோடு நகரத்தினின்றும் வெளிப்பட்டான். உதயனன் நெடுந்தூரம் கடந்ததும், காவலாளர் பெருங் கிளர்ச்சி செய்தனர். அரசனிடத்தும் அறிவித்தனர். வேந்தன், வாசவதத்தையைக் கைப்பற்றி ஓடுகின்ற உதயனனைப் பிடிக்குமாறு 'பாலகன்' என்னும் பெயரினையுடைய தன் புதல்வற்குக் கட்டளையிட்டான். அவன் பத்திரவதியின்பால் அன்புமிக்க 'நடைமலை' என்னும் களிற்றரசின்மேல் இவர்ந்து பின்றொடர்ந்து ஓடினான். உதயனன் பின்புறத்தே தொடர்ந்து வருகின்ற பாலகன்பால் அம்பு மாரிகளை இறைத்தான். 'நடைமலை' என்னும் யானை அப் பத்திரவதியைக் கண்டு அவாவோடு வேகந் தணிந்து மெல்ல மெல்ல அதனைத் தொடர்ந்து சென்றது.

இதற்கிடையில் 'கோபாலகன்' என்னும் பெயரினையுடைய சண்டமகாசேனனுடைய இரண்டாம் புதல்வன் தந்தையின் கருத்திற்கிணங்கிப் பின்புறத்தே விரைந்துபோந்து பாலகனைப் போரினின்றும் திருப்பினான். பாலகன் திரும்பியதும் வற்சர்தலைவன் அச்சமின்றிச் சென்றான். பின்னர், விந்திய வனத்தின் நடுவண் அடைந்தான். இரவு விடிந்தது. அப்பொழுது நெடுந்தூரம் வழிநடத்தலால் நீர் வேட்கை மிக்க பத்திரவதி ஆங்குள்ள தடாகத்தில் நீர் உண்டது. அக் குடிநீரின் குற்றத்தால் அப்பொழுதே அவ் யானை மரணம் எய்திற்று. உதயனன் வாசவதத்தையோடு மிகவும் துன்புற்று, எதிர்பாராமல் உண்டாகிய ஆகாயச் சொல்லாகிய "அரச! யான் 'மாயாவதி' என்னும் பெயரினையுடைய வித்தியாதரப் பெண் ஆவேன். இதுகாறும் சாபமாகிய குற்றத்தாற் பெண்யானை ஆயினேன். நினக்கு இவ்வுதவியைச் செய்து அச்சாபத்தினின்றும் விடுதிபெற்றேன். இதற்குப் பின்னரும் நினக்குப் பிறக்கும் புதல்வனுக்கும் உதவி செய்வேன்" என்னும் இதனைக் கேட்டான்.

பின்னர், வற்சராசன் விந்தியமலையின் சாரலில் இருக்கின்ற புளிந்தகனுக்குத் தன் வரவைத் தெரிவித்தற் பொருட்டு வசந்தகனை ஏவினான். பின்னர் அவ்விடத்திலேயே வாசவதத்தையோடு கால்களால் நடந்து செல்கின்ற இவனைக் காட்டிற் றிரியும் நூற்றைந்து திருடர்கள் வளைத்தனர். வில்லைமாத்திரம் துணையாகவுடைய உதயனன் வாசவதத்தையின் கண்

முன்னமே அவர்கள் எல்லோரையுங் கொன்றான். பின்னர், மற்றைத் திருடர்கள் ஒருங்குகூடி அவனை எதிர்த்து ஓடிவந்தனர். இதற்கிடையிற் புளிந்தகன், வசந்தகன் வழிகாட்ட யௌகந்தராயணனோடு அவ்விடத்தை அடைந்தான். அவன் அக்கள்வர்களைத் தடுத்து வற்சர்தலைவனை வணங்கி வாசவதத்தையோடு தன் இருப்பிடத்தை அடைவித்தான் உதயனன் அவ்விடத்திலேயே அவ்விரவைக் கழித்தான். பின்னர், பிற்றைநாட் காலையில் யௌகந்தராயணன் போக்கிய ஒற்றனால் எல்லாநிகழ்ச்சிகளையும் உணர்ந்த 'உருமண்வான்' என்னும் படைத்தலைவன் படைவீரர்கள் எல்லோருஞ் சூழ்ந்துவர அவ்விடத்தை எய்தினான். உதயனன் உச்சயினியின் நிகழ்ச்சிகளை அறிதற்பொருட்டு அவ்விந்தியவனத்திலேயே சிறிது காலந்தங்கினான்.

## வெண்பா.

சோற்றிறனார் யௌகந்த ராயணன்செய் சூழ்ச்சியினாற்
றுற்று மிருளிற் றுணைப்பிடிக்கண்—அற்புமிகு
தேவி யுடனிவர்ந்து சென்றான் சிறையோரீஇ
யாவியினு மானமுயர் வால்.

---

# ஆறாம் வகுப்பு.

## (வாசவதத்தை திருமணம்.)

இதனிடையில் உச்சயினியின் நிகழ்ச்சிகளை யறிதற் பொருட்டு யௌகந்தராயணன் போக்கிய வணிகன் ஒருவன் உச்சயினி நகரத்தை யடைந்து எல்லா நிகழ்ச்சிகளையு முணர்ந்து திரும்பிவந்து உதயனனை நோக்கி "வேந்தர் பெரும! சண்டமகாசேனன் நின்பால் மிகவும் அன்புடையவனாக இருக்கின்றான். நின்னைக் குறித்து ஒரு தூதனை விடுத்தான். அத்தூதன் தூதுமொழியை மேற்கொண்டு என்னோடு புறப்பட்டான். யானே செய்திகளைத் தெரிவித்தற் பொருட்டு விரைந்து வந்தேன்" என்று இவ்வாறு சொல்லினான். இதனைக்கேட்டு வற்சர்தலைவன் ஆனந்த பரிதனாய் வாசவதத்தைக்கு உணர்த்தினான். அவள் பேருவகைக் கடலுண் மூழ்கினவளாய் மணத் திருநாள் எப்பொழுது நேரும் என்று மனத்தாற் சிந்தித்துக்கொண்டிருந்தாள். பின்னர்ச் சண்டமகாசேனனுடைய தூதன்வந்து உதயனனை வணங்கி, "பெரும! அரசர் பெருமானாகிய சண்டமகாசேனன் நட்போடு என் முகமாகத் தெரிவிக்கின்றான். அஃதாவது 'முன்னரே வாசவதத்தைக்கு நீயே ஒத்த மணவாளன் என்று எனக்கு விருப்பம் இருந்தது. அவளை நீ பெற்றுக்கொள்ளுதற்கே என்னால் இச்சூழ்ச்சி மேற்கொள்ளப்பட்டது. ஆதலின், என்

விருப்பமே நின்னால் நிறைவேற்றப் பெற்றது. என் புதல்வன் கோபாலகன் விரைவிலேயே அவ்விடத்தில் வந்து நுங்கள் இருவீர்க்கும் விதிப்படி மணவினையை நிறைவேற்றுவான் என்பதாம்" என்றிவ்வாறு தெரிவித்தான். உதயனன்பால், தெரிவித்துவிட்டு அத்தூதன் வாசவதத்தைக்கும் தந்தையின் தூதுமொழியை அறியச் செய்தான்.

பின்னர், வற்சர்தலைவன் வாசவதத்தையோடு கௌசாம்பி நகரத்தைக் குறித்துப் புறப்பட்டான். அத்தூதனையும் புளிந்தகனையும் நோக்கி "நீவிர் இருவீரும் இவ்விடத்திலேயே இருந்து கோபாலகனுடைய வரவை எதிர்பார்த்தல் வேண்டும். அவனை யழைத்துக்கொண்டு கௌசாம்பி நகரத்தை அடைவீர்களாக" என்று இவ்வாறு கட்டளையிட்டான். கடல் அலைகளை ஒப்ப யான்முன் யான்முன் என்று புறப்பட்ட அளவிறந்த படைவீரர்கள் சூழ்வர உதயனன் இரண்டு மூன்று நாள்வரை வழிகடந்து காலைப் பொழுதிற் கௌசாம்பி நகரத்தை யடைந்தான். அப்பொழுது நகரத்து மக்களனைவரும் மிக்க குதூகலமுடையவராய் நகரத்தைத் தோரண முதலியவைகளால் அலங்கரித்து உதயனனது வரவைப்பற்றி மகிழ்ச்சி கூர்ந்தார்கள். யாவரானும் புகழ்ந்து பாராட்டப்பெற்ற கட்டழகு வாய்ந்த வாசவதத்தையைக் காணும் அவாவினராய் அந்நகரத்து மகளிர் அனைவரும் வீட்டின் மேற்றளத்தில் ஏறிச் சாளரங்களில் வரிசையாக நின்றனர். அந்நகரத்தவரனைவரா

னும் சிறப்போடு நல்வரவேற்கப்பட்ட வற்சர்தலைவன் வாசவதத்தையோடு தன் அரண்மனையுட் புகுந்தான்.

பின்னர்ச் சிலநாட் சென்றதும் வாசவதத்தையின் உடன் பிறந்தானாகிய கோபாலகன் தந்தையின் கட்டளைப்படி விந்தியவனத்தை யடைந்து தூதனையும் புளிந்தகனையும் உடன் அழைத்துக் கொண்டு கௌசாம்பி நகரத்தை அடைந்தான். பின்னர், நன்மைமிக்க முகூர்த்தத்தில் வாசவதத்தைக்குப் பாணிக்கிரகண விழாவை நிறைவேற்றினான். அவ்வமயத்தில் அளவிறந்த அரதனங்களையும் உதயனற்கு ஈந்தான். மற்றை வேந்தர்களும் பல வகைக் கையுறைகளைக் கொணர்ந்தனர். இவ்வாறு எல்லா நண்பர்களாலும், சுற்றத்தாராலும் அன்போடு சேர்ப்பிக்கப்பட்ட பொருள்களால் அவ்வுதயனனுடைய பொருளுறை இல்லங்கள் நிறைந்தவாயின. அதனால், அவன் குபேரனை ஒத்தான்.

பின்னர், விதிப்படி மணவினை நிறைவேறியதும் உதயனன் கோபாலகனையும் புளிந்தகனையும் தானே நன்கு உபசரித்தான். அங்கு வந்த மற்றை வேந்தர்களனைவரையும் உபசரித்தற்கு யௌகந்தராயணனையும், உருமண்வானையும் நியமனஞ் செய்தான். அவ்விருவரும் எல்லா மன்னர்களையும் "ஒவ்வொருவரும் தாம் தாமே மற்றையோரினுஞ் சிறந்த அன்பினாற் பெருமைப் படுத்தப்பட்டேம்" என்று எண்ணுமாறு பெருமைப்படுத்தினர்.





பின்னர், உதயனன், யௌகந்தராயணனையும் உருமண்வானையும் வசந்தகனையும் ஆடை அணி முதலியவைகளாற் பலவாறு பெருமைப்படுத்தினன். வாசவதத்தை தனக்கு ஒத்த காதலனை அடைந்து அவனோடு உம்பருலகத்தினும் பெறுதற்கரிய போகங்களை நுகர்ந்து இன்புற்றிருந்தாள்.

## வெண்பா.

ஐம்பொறிக்கு மின்ப மளிக்கு மமுதமென
நம்பு மடவரலை நன்றுமணந்—திம்பரிடைக்
கற்பு முறையிற் கலந்தின்ப மெய்தினன்
பொற்பு மதனிரதி போல்.

---

# ஏழாம் வகுப்பு.

(மந்திராலோசனை.)

இங்ஙனம் உதயனன் வாசவதத்தையை மணந்து அவளோடு இன்புற்று யௌகந்தராயணன் என்னும் அமைச்சன்பாலும், உருமண்வான் என்னும் படைத் தலைவன்பாலும், அரசியற் சுமையை வைத்துவிட்டுக் கவலையற்றுப் பலநாட்களைக் கழித்தான்.

பின்னர், ஓர் அமயம் யௌகந்தராயணன், உருமண்வானை அழைத்து மறைவிடத்திருத்தி "இவ் வுதயனன் பாண்டவகுலத்திற் பிறந்தவன். முன்னர் நிலவுலகம் முழுதும் இவன் முன்னோர் வயப்பட் டிருந்தது. இவற்குக் குலமுறைப்படி அத்தினபுரம் தலைநகராகும். அவ்வெல்லாம் இப்பொழுது முயற்சி யற்றிருக்கும் இவனால் விடப்பட்டன. இப்பொழுது இவன் இந்நிலத்தின் ஒரு கோடியில் அரசனாக இருக்கின்றான். இடைவிடாது இவன், மகளிர் இன்பத் திலும் வேட்டையாடுவதிலும், அவாவுடையவனாய்க் கவலையற்றிருக்கின்றான். அரசியற் சுமை எல்லா வற்றையும் நம் தலைக்கண் ஏற்றினான். ஆதலின், இவன் இந்நிலவுலகம் எல்லாவற்றிற்கும் சக்கரவர்த்தி யாகும் வண்ணம் நாம் முயலல்வேண்டும். இங்ங னம் செய்வோமாயின் அரசன்பால் நமக்குள்ள அன்பை வெளிப்படுத்தியதாகும். இவ்விடயத்தில் மகததேயத் தரசன் பகைவனாக இருக்கின்றான்.

அவற்குப் பதுமாவதி என்னும் பெயரினையுடைய பெண்மணி ஒருத்தியுள்ளாள். அவள் நம் உதயனற்கு மனைவியாவாளாயின் மகததேயத்தரசனும் நாம் செய்ய விரும்பிய காரியத்திற்குத் துணை நிற்பான். அப்பதுமாவதியை முன்னர் வற்சநாயகனுக்காக யான் தூதன்முகமாகக் கேட்டதுமுண்டு. அதற்கு மகத தேயத்தரசன் "வற்சராசனுக்கு வாசவதத்தையின்பாற் பெரிதும் அன்புண்டு என்பது யாவரும் உணர்ந்ததே. ஆதலின் உயிரினுஞ்சிறந்த அன்புமிக்க பதுமாவதியை அவ்வுதயனற்குக் கொடேன்" என்று இவ்வாறு தூதன்முகமாக மறுமொழி விடுத்தான். வற்சராசனும் வாசவதத்தை இருக்குங்கால் வேறொருத்தியை மணஞ்செய்துகொள்ளான். ஆதலின் இச்செயலில் நமது அறிவின் மாட்சியைக் காட்டல் வேண்டும். வாசவதத்தையைப் பிறர் அறியாவாறு ஓரிடத்தில் மறைத்து வைத்து அவள் உறையுளைத் தீக்கிரையாக்குதல் வேண்டும். அதன்பின் "வாசவதத்தை எரிந்து நீறாயினாள்" என்று உலகவதந்தியைச் செய்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்வோமாயின் மகததேயத்தரசன் பதுமாவதியை வற்சராசற்குக் கொடுத்துவிடுவான். வற்சராசனும் மணம்புரிந்துகொள்ளுவான். அதன்பின் மகததேயத்தரசன்பாற் றுணைநிற்போராகிய ஏனைய அரசர்கள் எல்லோரும் இவன்வயப்படுவார்கள். அதனால் இவன் நிலவுலகம் எல்லாவற்றிற்கும் சக்கரவர்த்தியாவான்" என்று இவ்வாறு சூழ்ந்தான்.

அதனைக்கேட்டு உருமண்வான் "இச் சூழ்ச்சி ஒருவாறு கேடுவிளைக்கவுங் கூடுமென்று அஞ்சுகின்றேன். காரியம் நிறைவேறுவிடின் அரசற்குக் கோபம் விளையும். சனங்களும் நம்மைப் பரிகசிப்பார்கள். வாசவதத்தையின் பிரிவால் அரசற்கு ஒருவாறு அமங்கலம் உண்டாகவுங்கூடும்" என்று இங்ஙனம் கூறினான்.

அதனைக்கேட்ட யௌகந்தராயணன் பின்வருமாறு கூறுவானாயினன். "வேந்தர்கள், தம்வயத்தர், அமைச்சர் வயத்தர், என இருவகைப்படுவர். தம் வயத்தராவோர் தம் அறிவினாலேயே எல்லாச் செயல்களையும் நிறைவேற்றுவார். நம்மன்னனோ அமைச்சர்வயத்தன் ஆவான். இவற்குச் செய்யத்தக்கவைகளில் அமைச்சர் அறிவே புகலிடமாகும். நாம் முயன்றிலேமாயின் இவற்கு எல்லாம் அவிந்துபோம். இனி நாம் இப்பொழுது சூழ்ச்சியினாலேயே காரியத்தை நிறைவேற்றல் வேண்டும். இத்தகைய செயல்களைச் செய்யாமல் வாளாவிருப்போமாயின் அரசன் நம்மை அவமதிப்பான். மனத்திட்பமுடைய வற்சராசன் வாசவதத்தையின் பிரிவிலும் மனவுறுதி மேற்கொண்டிருப்பான். முற்காலத்தில் தேவர்கள் இராமனால் இராவணனைக் கொல்லுதற்குச் சீதாபிராட்டியிடத்தினின்றும் அவனைப்பிரியும்படி செய்தார்கள். உயிரினுஞ்சிறந்த அன்புமிக்க சீதையை நீங்கியும் இராமன் மனத்திண்மையால் உயிர்தாங்கினான். இன்னும் இவ்விடயத்திற் பழங்கதை யொன்று கேட்பாயாக.

அது "முற்காலத்தில் உச்சயினி நகரத்தில் 'புண்ணியசேனன்' எனப்பெயரிய அரசன் ஒருவன் இருந்தான். அவனை ஓர் அமயம் வலிமைமிக்க பகைவன் எதிர்த்தான். வலிமைகுறைந்த புண்ணிய சேனனைப் பார்த்து, அமைச்சர்கள் ஒருங்குகூடி ஆலோசித்து அவனை ஓரிடத்தில் மறைத்துவைத்து 'நம் அரசன் இறந்து போயினன்' என்று யாவரும் உணர வெளிப்படுத்தினர். வேறொரு பிரேதத்தை இஃது அரசன் பிரேதம் என்று வெளிப்படுத்தி அதற்கு முறைப்படி இறுதிக் கடன்களைச் செய்தனர். பின்னர், பகைவன்பக்கல் எய்தி "இவ்விராச்சியம் அரசனில்லாத தாயிற்று நீயே எங்களுக்கு வேந்தன் ஆதல் வேண்டும்" என்று வேண்டினர். அவன் இவ்வெல்லாம் உண்மையென்று நினைத்து அரசனுதற்கு உடன்பட்டான். பின்னர்ச் சின்னாட்சென்றதும் மறைவிற் சித்தம் செய்து வைத்திருந்த படைவீரர்களால் அப்பகைவனை வேரோடு களைந்து புண்ணிய சேனனை மீண்டும் அவன் இராச்சியத்தில் நிலை நிறுத்திவைத்தனர்" என்பதாம்.

ஆதலின், "அரசநீதியாற் சூழ்ச்சிபுரிதல் இயற்கையே. இவ்விடயத்தில் ஐயுறல் வேண்டா. தெய்வம் நமக்குத் துணைநிற்கும்" என்று இவ்வாறு கூறினன்.

அதனைக்கேட்டு உருமண்வான் "இது துணிவாயின் வாசவதத்தையின் உடன் பிறந்தானாகிய கோபாலகனை ஈண்டழைத்து அவனோடு சூழ்ந்து இச்செயலில் இறங்கல் வேண்டும்" என்று கூறினன்.

யௌகந்தராயணன் 'அங்ஙனமே' என்று உடன்பட்டுக் கோபாலகன்பால் தூதனைவிடுத்தான். தூதன் விரைந்து உச்சயினி நகரத்தை அடைந்து கோபாலகனை வணங்கி "ஐய, அமைச்சர் தலைவனாகிய யௌகந்தராயணன் நின்னைச் சிறிதும் தாழ்த்தலின்றிக் காண்டற்கு விரும்புகின்றான்" என்று தெரிவித்தான். அக்கோபாலகன் அப்பொழுதே புறப்பட்டுக் கௌசாம்பி நகரத்தை யடைந்தான். யௌகந்தராயணன் அவனை மறைவிடத்தில் அழைத்துத் தான்செய்ய விரும்பிய காரியங்கள் எல்லாவற்றையும் உண்மையாக அவற்குக் கூறினான். கோபாலகன், முதலில் வாசவதத்தைக்குத் துன்பம் தருவதாயினும் அரசற்கு நலத்தை வளர்விப்பதால் அச்சொல்லை ஏற்றுக் கொண்டான்.

பின்னர், யௌகந்தராயணன், "மகததேயத்தின் அணிமையில் இலாவாணகம் என்னும் பெயரினையுடைய இடம் ஒன்று இருக்கின்றது. அது வேட்டையாடுதற்கு இன்பம் விளைக்கும் இடமாகும். ஆதலின், வாசவதத்தையையும் வற்சராசனையும் அழைத்துக்கொண்டு அவ்விடத்திற்கு நாம் செல்லல் வேண்டும். எப்பொழுது வேட்டையாடல் குறித்து உதயனன் வெளிச்செல்வானோ அப்பொழுது அரண்மனையில் தீ வைப்போம். வாசவதத்தையை மகததேயத்தரசனது கன்னியாமாடத்தில் இருக்கின்ற பதுமாவதியின்பக்கல் உபாயத்தாற் சேர்ப்பிப்போம். பிரிவுக் காலத்திலேயும் வாசவதத்தையின் சற்புநிலைக்குப் பதுமாவதியே சான்றுவாள் இங்ஙனஞ்

செயயின் நாம் செய்யவிரும்பிய காரியம் சிரமமின்றி நிறைவேறிவிடும்" என்று இங்ஙனங் கூறினன்.

இங்ஙனம் சூழ்ந்து, யௌகந்தராயணன், உருமண்வான், கோபாலகன் என்னும் இம் மூவரும், பிற்றைநாட் காலையிற் காலைக்கடன்களை முடித்துவிட்டு அரசன்பக்கல் எய்தினர். அரசன் தகுதிக்குத் தக்கவாறு சிறப்பித்து ஈந்த இருக்கைகளில் இருந்தனர். பின்னர் உருமண்வான், அரசனைநோக்கி 'வேந்தர் பெரும! இலாவாணகம் என்னும் இன்ப நிலம் ஒன்று இருக்கின்றது. அதனைச்சூழ்ந்து வேட்டையாடுதற்குரிய நிலங்கள் பலவுள்ளன. பக்கத்துள்ள மகததேயத் தரசன் எப்பொழுதும் அவ்விடத்தை உலைவு செய்கின்றான். அதனைக்காத்தற்கு அவ்விடம் அடைதல் இவ்வமயம் தக்கதாகும்" என்று இவ்வாறு தெரிவித்தான். வேட்டையாடுதலில் விருப்பம் மிக்க உதயனன் அச்சொற்களை ஏற்றான். புறப்படல் துணிந்ததும் கணிதம் வல்லோர் பிரயாணத்திற்குரிய நன்னாழிகையைக் கண்டுகூறினர்.

அப்பொழுது எதிர்பாராது நாரதர் ஆகாயத்தில் நின்றும் இறங்கி வெளிப்பட்டார். வற்சராசன் அவரைக்கண்டு விரைந்தெழுந்து அருக்கியம், பாத்தியம் முதலியவைகளால் உபசரித்தான். பின்னர் அவரை இருக்கையில் வீற்றிருக்கச்செய்து வணக்கத்தோடு கைகூப்பிநின்றான். நாரதர் பாரிசாதமலர்களாலாகிய மாலையொன்றை அரசற்குக் கொடுத்தார். பின்னர் வணங்கிநிற்கின்ற வாசவதத்தையைநோக்கி,

"நங்காய், பகவானுகிய காமவேளின் கூறுக அவதாரஞ்செய்யும் வித்தியாதரர்களின் தலைவனை மகனுக விரைந்து பெறுவாய்" என்னும் வாழ்த்துரையால் அருள் செய்தார். பின்னர் அமைச்சர்களின் முன்னிலையில் உதயனனை நோக்கி "வேந்தே! தருமபுத்திரன் முதலிய சகோதரர் ஐவரும் எனக்கு நண்பர்களாக இருந்தனர். நீயும் அவர்கள் வழித்தோன்றினவன். அவ்வன்பால் நினக்குச் சிறிது உபதேசிக்க யான் இங்குவந்தேன். நீ என் சொல்வழி நிற்றல் போல் அமைச்சர் சொல்வழியிலும் நிற்றல்வேண்டும். அவர்கள் யாது யாது கூறுவார்களோ அதனை அவ்வண்ணமே மேற்கொள்ளல் வேண்டும். அதனுல் நீ மிக்க நலத்தினை அடைவாய் சிறிது நாட்களில் நினக்குச் சிறிது துன்பம் நேரும். அதுவும் இன்ப வளர்ச்சியாகவே முடியும். இதன்கண் நீ துன்புறல் வேண்டா" என்று இங்ஙனங் கூறினுர். இவ்வாறு சொல்லி நாரதர் அவ்விடத்திலேயே மறைந்துவிட்டார். யௌகந்தராயணன் முதலியோர் நாரதமுனிவர் சொற்களைக்கேட்டுத் தாங்கள் செய்ய விரும்பிய காரியத்தில் தெய்வமும் துணைநிற்கின்றது என்னும் மகிழ்ச்சியால் இருமடங்கு உற்சாகம் எய்தினர்.

## வெண்பா.

மன்ன னரசின் வளம்பெருக்கும் வல்லமைச்சர்
இன்னன் முதற்க ணிசைவித்த—பின்னரே
மன்னிறைவ னுக்கி மகிழ மதித்தனராற்
றுன்னு மதிவலியாற் சூழ்ந்து.

# எட்டாம் வகுப்பு.

---

## (பதுமாவதி பரிணயம்.)

பின்னர் அமைச்சர்களோடு ஆலோசித்தபடி வற்சராசன் வாசவதத்தையோடு படைவீரர்கள் சூழப்புறப்பட்டு 'இலாவாணகம்' எனப்பெயரிய சிற்றூரை யடைந்தான். அவ்விடத்தில் நாடோறும் பக்கத்துள்ள வனங்களிற் சுற்றித்திரிந்து வேட்டையாடலான் மனம் இன்புற்றுச் சிலநாட்களைக் கழித்தான். ஓரமயம் உதயனன் வனத்திற் சென்றிருக்குங்கால், யௌகந்தராயணன், உருமண்வான், வசந்தகன் இம்மூவரும் கோபாலகனை முன்னிட்டுத் தனித்திருக்கும் வாசவதத்தையின்பாற் சென்றனர். பின்னர், தாம் செய்யவிரும்பிய எல்லாக் காரியங்களையும் கூறினார்கள். முன்னரே கோபாலகன்பால் எல்லா நிகழ்ச்சிகளையுந் தெரிந்த கற்பரசியாகிய வாசவதத்தை, தனக்குத் துன்பந்தருவதாயினும் தலைவற்கு நலம்விளைக்கும் என்பதுபற்றி அவர்கள் செய்யவிரும்பிய காரியத்தை ஏற்றுக்கொண்டாள்.

பின்னர் யௌகந்தராயணன் 'உருவமாற்று' என்னும் விஞ்சையால் வாசவதத்தையை அந்தணர் குலத்துப் பெண்ணாகவும், வசந்தகனை ஒற்றைக்கண் மாணவகனாகவுஞ் செய்தான். யௌகந்தராயணன் தானும் யாண்டுமுதிர்ந்த அந்தண வடிவமுடையனாயி

ஞன். பின்னர் யௌகந்தராயணன் அந்தணர் குலத்துப் பெண்வேடந்தாங்கிய வாசவதத்தையையும் ஒரு கண்கெட்ட மாணவக வேடந்தாங்கிய வசந்தகனையும் அழைத்துக் கொண்டு மகததேயத் தரசனது தலைநகரையடைந்தான். வாசவதத்தை தலைவனையே நெஞ்சத்தால் நினைந்து யௌகந்தராயணனைப் பின்றொடர்ந்து சென்றாள்.

அவ்வமயத்தில் உருமண்வான், அந்தப்புரத்தில் தீப்பெய்து "அந்தோ! அந்தோ!! தேவி வாசவதத்தை நெருப்புச் சுடரால் வெந்து போயினாள்" என்று பேரொலி செய்தான். பின்னர், பரிசனங்களினது அழுகையொலி மிகவும் உண்டாயிற்று. மெல்ல மெல்ல நெருப்புத் தணிந்தது. அழுகையொலி ஒவ்வொரு கணமும் பெருகிற்று. வாசவதத்தையோடும் வசந்தகனோடும் புறப்பட்ட யௌகந்தராயணன் மலர்கள் நிறைந்த உத்தியானவனத்தில் தோழிகளோடு விளையாடல் செய்துகொண்டிருக்கும் பதுமாவதியை அடைந்தான். பதுவாவதிக்கு அந்தணர்குலத்துப் பெண்ணுருவந் தாங்கிய வாசவதத்தையின்பால் கண்ட அளவினானே பெரிதும் நட்புண்டாயிற்று.

பின்னர், பதுமாவதி வயோதிகப் பிராமண உருவத்தையுடைய யௌகந்தராயணனை நோக்கி "பகவானே! இப்பெண் யார்? எதன்பொருட்டு இங்கு எய்தினை?" என்று வினவினாள். அவன் "நங்காய்! ஆவந்திகை யென்னும் பெயரினையுடைய இவள் என் புதல்வியாவாள். இவள் கணவன் இவளைவிட்டு

வேற்றுநாடடைந்தான். ஆதலின் இவளை நின்பக்கல் இருத்தி இவள் கணவனைத் தேடிக்கொணர்தற்கு விரும்புகின்றேன். இச்சிறுவன் இவள் உடன்பிறந்தான் ஆவான். இவனையும் இவண்மாட்டே விடுகின்றேன். அதனால் இவள் தனித்திருக்கும் துன்பத்தை யடையாள்" என்று மறுமொழி கூறினான். பதுமாவதி "அங்ஙனமேயாக" என்று உடன்பட்டாள்.

யௌகந்தராயணன், வாசவதத்தையையும் வசந்தகனையும் அவ்விடத்திலேயேவிட்டுப் பதுமாவதியின்பால் விடைபெற்று அப்பொழுதே புறப்பட்டுத் தனது முன் உருவத்தை யடைந்து இலாவாணகத்தை எய்தினான். இதனிடையில் உதயனன் வேட்டை நிமித்தம் நெடுந்தூரம் காடுகளில் அலைந்து திரிந்து மாலைப் பொழுதில் இலாவாணகத்தை யடைந்தான். அங்கு உவளகம் நீறுக்கப்பட்டிருத்தலைக் கண்டும், வாசவதத்தையும் நெருப்பினால் வெந்துபோயினாள் என்பதைக் கேட்டும் மயக்கமுற்று நிலத்தில் வீழ்ந்தான். பின்னர், பரிசனங்கள் செய்த உபசாரங்களாற் சிறிதுபொழுதில் தெளிவெய்தி வாசவதத்தையை நினைவுகூர்ந்து துன்பமிகுதியாற் பலவாறு புலம்பினான்.

பின்னர் மனத்தின்கண் பின்வருமாறு சிந்திப்பானாயினான். "முன்னரே அசரீரிச்சொல் 'வாசவதத்தை வித்தியாதரச் சக்கரவர்த்தியாகும் புதல்வனைப் பெறுவாள்' என்று கேட்கப்பட்டது. தெய்வமுனிவராகிய நாரதராலும் அங்ஙனமே கூறப்பட்டது. அது பொய்மையாகாது. மேலும் சில நாள் என்

ஞற் றுன்பம் அனுபவிக்கப்படும் என்றும் நாரதராற் கூறப்பட்டது. வாசவதத்தையின் உடன்பிறந்தானாகிய கோபாலகனுஞ் சிறிது துன்பமுடையவனுகக் காணப்படுகின்ருன். யௌகந்தராயணன் முதலிய அமைச்சர்களுடைய முகங்களும் மலர்ச்சியுடையவைகளாகவே காணப்படுகின்றன. ஆதலின், எனக்குப் பெரிய நலத்தையுண்டாக்குவதற்கு விரும்பி அமைச்சர்கள் செய்த சூழ்வினைச் செயலே இதுவாகும் என்று எண்ணுகிறேன். ஆதலின் தேவி வாசவதத்தை யாண்டாயினும் உயிருடையவளாக இருக்கின்ருள் என்றே ஊகிக்கின்றேன். இதனுல் ஒருசமயம் எனக்கு வாசவதத்தையோடு சேர்தல் நேரும்" என்று இவ்வாறு சிந்தித்து வற்சராசன் சிறிது தேறுதல் அடைந்தான்.

பின்னர் மகததேயத்தரசன், இலாவாணக நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் ஒற்றன் மூலமாக அறிந்தான். பதுமாவதியை ஏற்றுக்கொள்ளச் செய்தற்கு இதுவே தக்க சமயம் என்று துணிந்து தன்கருத்தைக் கூறித் தூதன் ஒருவனை உதயனற்கு விடுத்தான். உதயனன், யௌகந்தராயணனது உடன்பாட்டின்வண்ணம் பதுமாவதியை மணஞ்செய்துகொள்ளுதற்கு அங்கீகரித்தான். அப்பொழுது பதுமாவதியின் மணத்தை நிறைவேற்றுதற்கே வாசவதத்தை அமைச்சர்களால்மறைத்து வைக்கப்பட்டிருப்பாள் என்று உதயனனது மனத்தில் உறுதியான நம்பிக்கை உண்டாயிற்று.

பின்னர், யௌகந்தராயணன் விவாகத்திற்குரிய இலக்கினத்தை நிச்சயித்து மகத தேயத்தரசற்கு "உதயனன் பதுமாவதியை மணந்துகோடற்கு உடன் படுகின்றான்; இதற்கு ஏழாவது நாள் விவாகத்தை நிறைவேற்றுதற்கு நின் தலைநகரை யடைவான்" என்று இவ்வாறு மறுமொழி விடுத்தான். அதனைக் கேட்டு மகததேயத்தரசன் மிக்க மகிழ்ச்சியுடையனாயினான். பின்னர்த் தன் புதல்வியின்மாட்டுள்ள அன்பிற்கும் தன் செல்வத்திற்கும் ஒத்தவாறு விவாகச் சிறப்பிற் குரிய ஏற்பாடுகளைச் செய்வித்தான். பதுமாவதி, தான் அடைதற்கு விரும்பிய கணவனைப் பெறுதலான் மிகவும் மகிழ்வெய்தினாள். அப்பொழுது வாசவதத்தை பது மாவதியின் மணநிகழ்ச்சியைக் கேட்டுத் துன்பத்தால் வேறுபட்ட முகம் உடையளாயினாள். உடனிருக்கின்ற வசந்தகன் "அன்னாய் இம்மகத நாட்டரசனை வயப்படுத் தற்கு அமைச்சர்கள் செய்த சூழ்ச்சியிதுவாகும். வேறு பாடு கருதற்க" என்று மறைவிடத்திருந்து தேற்றி னான். பின்னர் விவாகமுகூர்த்தம் அடுத்திருக்குங்கால் வாசவதத்தை வற்சராசன்பாற் கற்றவிஞ்சையால் வாடுத லில்லாத மாலையையும் விசித்திரமான திலகத்தையும் செய்து பதுமாவதிக்குக் கொடுத்தாள். பதுமாவதி அவற்றை யணிந்து தாயின்பக்கல் எய்தினாள். தாய் விசித்திரமான மாலையையும் திலகத்தையும் பார்த்து மிக்க வியப்புடையவளாய், "யாரால் இவை செய்யப் பட்டன" வென்று பதுமாவதியை வினவினாள். அவள் "அன்னாய்! ஆவந்திகை என்னும் பெயரினையுடைய

அந்தணர் குலத்துப் பெண்மகள் என்பக்கல் இருக்கின்றாள். அவள் இவற்றைச் செய்தனள்” என்று மறுமொழி கூறினாள். அதனைக்கேட்ட தாய் “குழந்தாய்! மிகப் பெரியவளாகிய இவள் எக்காரணத்தினாலோ இங்கு வந்த தெய்வ மகள் ஆவாள். ஆதலின், இவண்மாட்டு விழிப்புடையவளாக இருப்பாயாக. தக்க உபசாரங்களாற் பெருமைப்படுத்துக” என்று கூறினாள். அதுமுதல் வாசவதத்தை பதுமாவதியினால் மிகவும் சிறப்பிக்கப்பட்டிருந்தாள்.

பின்னர், வற்சர்தலைவன் குறிப்பிட்டவாறு அமைச்சர்களோடு புறப்பட்டு மகததேயத்தரசனது தலைநகரை யடைந்தான். மகதராசன் அவனை எதிர்கொண்டழைத்து மகிழ்ச்சியோடு தன்னகரையடைவித்தான். அவ்விடத்தில் நன்முகூர்த்தத்தில் விவாக மண்டபத்திற்கு அழைத்துவரப்பெற்ற வற்சர்தலைவன், மணத்தின் பொருட்டுச் சித்தமாக இருக்கின்றவளும், எல்லா அணிகலன்களாலும் அலங்கரிக்கப்பட்டவளும் ஆகிய பதுமாவதியைக் கண்டான். அப்பதுமாவதியின் உடம்பில் வாசவதத்தையால் நிருமிக்கப்பட்ட மாலையினையும் திலகத்தினையுங் கண்டு “தேவியாகிய வாசவதத்தையினது கைத்திறமை இதுவாகும். இம்மாலையும் திலகமும் இவளால் எங்கிருந்து அடையப்பட்டனவோ” என்று மனத்தினுற் சூழ்ந்தான். இதனை எண்ணிக் கொண்டே மணவறை வேதியை எய்தி விதிப்படி பதுமாவதியை மணந்தான்.

அவ்வமயத்தில், மகதராசன் யௌகந்தராயண னது வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு "இனி உதய னற்குக் கனவினும் கேடுசெய்யக் கருதுவேனல்லேன்" என்று உறுதி செய்தான். அதன்பின் உதயனற்கு விலைமதிக்கொண்ணு அளவிறந்த அரதனங்களை வழங்கி ஞன். மணத்திருவிழா நிறைவேறியபின் யௌகந்த ராயணன் "ஒருசமயம் உதயனன் உவளகத்திலிருக்கும் வாசவதத்தையைக் காணவுங்கூடும்" என்னும் ஐயத் தால் அப்பொழுதே இலாவாணகத்தைக் குறித்துப் புறப்படும் வண்ணம் செய்தான். பதுமாவதியோடு வற்சராசன் புறப்பட்டவுடன் வாசவதத்தையும் வசந்தக னேடு மறைவிற் பின்றொடர்ந்து சென்ருள். எப்பொழு தும் வாசவதத்தையையே மனத்தால் நினைந்துகொண் டிருக்கும் உதயனன் இலாவாணகத்தையெய்தித் தன் இருப்பிடத்துட் புகுந்தான். வாசவதத்தையோ "தன் உடன்பிறந்தானுகிய கோபாலகனது இருப்பிடத்தை யடைந்து அங்குக் கோபாலகனைப் பார்த்துப் பிரிவுத் துன்பத்தை யுள்ளே அடக்கமுடியாதவளாய் வாய்திறந்து அழத்தொடங்கினுள். அப்பொழுது யௌகந்தராயணன் உருமண்வானேடு அவ்விடத்தெய்தி வாசவதத்தையைப் பலவாறு தேற்றினுன்.

இதற்கிடையில், ஏவன்மகளிர் விரைந்தோடி வந்து வற்சராசனது முன்னிலையிற் பதுமாவதியை நோக்கி "ஆவந்திகை யென்னும் அந்தணர் குலமாது எம்மைப் புறத்தே நிறுத்திவிட்டுக் கோபாலகனது

இல்லத்துட்புகுந்து ஏதோ ஒரு துன்பத்தால் வாய் திறந்து அழுகின்றனள்" என்று இவ்வாறு தெரிவித்தனர். அதுகேட்ட வற்சராசன் பதுமாவதியை நோக்கி இம்மாலையும் திலகமும் எங்கிருந்து நின்னாலடையப்பட்டன வென்று கேட்டான். அவள் "யாண்டு முதிர்ந்த ஓர் அந்தணனால் அடைக்கலமாக வைக்கப்பட்ட ஆவந்திகை என்னும் பெயரினையுடைய அந்தணர்குலமாது என்பால் இருக்கின்றாள். அவள் என்னால் உண்டி உடுக்கை முதலிய உபசாரங்களால் நன்கு போற்றப்பட்டவளாய் என்பா லளவிகந்த நட்புரிமையுடையவளா யிருக்கின்றாள். சிலநாட்களுக்கு முன்னர் எனது மணநிகழ்ச்சி வெளிப்படுத்தப்பட்டிருக்குங்கால் இம்மாலையினையுந் திலகத்தினையும் நிருமித்து எனக்குதவினாள்" என்று இவ்வாறு தெரிவித்துக் கொண்டாள். அதுகேட்ட வற்சராசன் "இஃதுஉண்மையாக வாசவதத்தையினது சிற்பத் திறமையேயாகும்" என்றுதுணிந்து அப்பொழுதே கோபாலகனது இல்லம் எய்தினான். அங்கு யௌகந்தராயணனால் முன்னை உருவம் எய்தப்பெற்றவளும், தனக்குநேர்ந்த கொடிய பிரிவு நிலையைஎண்ணி மிகவும் வருந்துகின்றவளும், யௌகந்தராயணனாலும் உருமண்வானாலும், வசந்தகனாலும் பலவாறு தேற்றப்படுகின்றவளும், பிரிவுத் துன்பத்தால் மிகமெலிந்த உடம்பினையுடையாளும் ஆகிய வாசவதத்தையைக் கண்டான். கண்டதும் கண்ணீராற்றடுக்கப்பட்டவாயினால் எதனையுஞ் சொல்வதற்கு ஆற்றலில்

லாதவனுய்க் கண்களினின்றும் பெருகி வழிகின்ற நீர்த் தாரைகளான் முன்னிடத்தை நனைத்துப் பேய்கோட்பட்டான்போல் நிலத்தில் வீழ்ந்தான். அங்ஙனம் வீழ்ந்த அவனைப் பார்த்தவுடன் நடுக்கமுற்ற நெஞ்சினையுடையாளாகிய வாசவதத்தையும் அத்தகைய துன்பத்தை ஆற்றுதவளாய் நிலத்தில் வீழ்ந்தாள். கணப்பொழுதில் தெளிவெய்தித் தலைவன் துன்பத்திற்குக் காரணமாகிய தன்னைப் பலவாறு பழித்துரைத்தாள்.

அவ்வமயத்தில் தலைவன் தலைவியாகிய இவ்விருவர்களது அத்தகைய நிலையைநோக்கி மிக வருந்துகின்ற நெஞ்சத்தையுடைய யௌகந்தராயணனும் கண்களினின்றும் நீரையொழுக்கினுன். அங்கு நிகழ்ந்த குழப்பத்தைக் கேட்ட பதுமாவதியும் ஈதென்னையென்று ஏதமுற்ற நெஞ்சினளாய் அவ்விடத்தையடைந்தாள். அப்பொழுது யௌகந்தராயணன் வற்சராசனை நோக்கி "வேந்தர் பெரும! நிலவுலக முழுதும் நின் வயமாக்குதற்குரிய உபாயத்தை யாராய்ந்தேன். அதற்கு மகத தேயத்தரசன் ஒருவனே தடையாயுள்ளான். பதுமாவதியின் விவாகத்தையின்றி மகத ராசனைத் துணையமைத்துக் கொள்ளக் கூடவில்லை. பதுமாவதியின் மணத்தை முடித்துக் கோடற்கு என்னுல் இவ்வுபாயம் மேற்கொள்ளப்பட்டது. இனி மகதராசன் கனவிலும் நினக்குத் துன்பம் செய்ய எண்ணுன். யானே நின்றுன்பத்திற்குக் காரணமாயினேன். தேவி வாசவதத்தையும் இதன்பொருட்டு அழைக்கப்பட்ட கோபாலகனேடு ஒற்றுமைப்பட்டு

மிக அரிதின் இந்நிகழ்ச்சியிற் றுணையுடையளாயி ருள். பிரிவுக்காலத்திலும் இவள் பதுமாவதியின் பக்க லிலேயே இருக்கப்பெற்ருள். ஆதலின் பதுமாவதியே இவள் கற்புடைமையிற் சான்ருவாள். நினக்குத் துன் பம் விளைவித்த எனது இப்பிழையைப் பொறுத்தருள் வாயாக" என்று இவ்வாறு கூறினன்.

அதுகேட்ட பதுமாவதி "யௌகந்தராயணன் உண்மையையே கூறினன். யான் இவ்வாசவதத்தை யின் கற்புடைமையிற் சான்ருவேன். யான் தீப்புகுத லானும் இதனை நம்பும்படி செய்வேன்" என்றிவ்வாறு கூறினள். பின்னர், வாசவதத்தை "யானே எனது கற்பு நிலைமையில் நம்பிக்கைகொள்ளும் வண்ணம் தீப் புகுவேன்" என்று துணிவுமேற்கொண்டாள். அது கேட்ட யௌகந்தராயணன் விரைந்து நீர்கொணர்ந்து ஆசமித்துக் கிழக்கு முகமாக இருந்து "ஏ! உலகபாலகர் களே! யான் வற்சராசனுகிய உதயனற்கு நலம்விளைவிப் பதில் உறுதி பூண்டுளேனென்பதும், தேவி வாசவ தத்தை கற்புநிலையினின்றும் பிறழ்ந்திலள் என்பதும், உண்மையாயின், அவ்விரண்டினையும் இப்பொழுது அறிவியுங்கள். இன்றேல், தீப்புகுந்து உயிரைப்போக்கு வேன்" என்றிவ்வாறு கூறினன். அச்சொன் முற்றிய பொழுதே அசரீரியாக "ஓ வற்சராச! நினக்கு அமைச் சர் இலக்கணம் முற்றும் நிரம்பிய யௌகந்தராயணன் மந்திரியாகவும், சற்பரசியும் முற்பிறப்பில் தெய்வமு மாகிய வாசவதத்தை மனைவியாகவும் வாய்த்தமையால் நீ மிகச் சிறந்தவனுயினுய். ஆதலின் இவள்பால் நினக்கு

வேறுபாடான எண்ணம் உண்டாதல் வேண்டா" என்னும் இச்சொற்கள் உண்டாயின. அவைகேட்ட எல்லோரும் கார்காலத்து மயில்கள்போல மிக்கமகிழ்ச்சியுடையராயிருந்தனர். பின்னர், வற்சராசன் யௌகந்தராயணனது உபாய நிபுணத்தன்மையைப் பலவாறு பாராட்டினான். நிலமுழுதும் தன்கைப்பட்டதாக எண்ணினான்.

## வெண்பா.

க. ஆன்ற அறிவி னமைவா சவதத்தை
யேன்ற துயரோ டியைகற்பின்—சான்றும்
பதுமா வதியென்னும் பாவைதனை வேட்டான்
விதுநே ருதயனனும் வேந்து

உ. தன்றலைவற் கண்டின்பஞ் சார வயலொருத்தி
மன்றல் கொளத்தன் மனமிசைந்து—பொன்றாத
மாலை யொடுதிலக மீந்தாள் வலாரிதரு
வேலை யுருவமுதா மின்.

# ஒன்பதாம் வகுப்பு.

---

## (மகதராசன் சந்தி.)

அதன்பின், இரண்டு மூன்று நாட் கழிந்ததும் மகத தேயத்தரசனுடைய தூதன்வந்து வற்சராசனை நோக்கித் "தேவ! அரசர் பெருமானாகிய மகதராசன் என் முகமாகத் தங்களுக்கு இவ்வாறு அறிவிக்கின்றான். அஃதாவது 'அரச! உபாயத்திறன் வாய்ந்த நின் அமைச்சர்களால் யாம் வஞ்சிக்கப்பட்டவர்களாயினேம். ஆதலின், யாங்கள் பதுமாவதியைக் குறித்துக் கவலைகொள்ளாதிருக்கச் செய்தல்வேண்டும்' என்பதே" என்று இவ்வாறு தெரிவித்தான். அச் சொற்கேட்ட வற்சராசன் ஒற்றற்குத் தக்கவாறு சிறப்புச் செய்தான். பின்னர் "தந்தைக்கு வேண்டிய செய்தியைத் தருக" என்று கூறிப் பதுமாவதியின் பக்கல் அவனைப் போக்கினான்.

பதுமாவதி, தந்தையின்பானின்று வருகின்ற அத்தூதனை வியப்போடு மலர்ந்த கண்ணிணைகளாற் செய்மைக்கண்மேனே பார்த்து, அன்போடு வருக! வருக !! என்று அழைத்துத் தாயுந்தந்தையும் நலமுடையர்களாய் இருக்கின்றார்களா? என்று வினவினாள். தூதன், மன்னவன் புதல்வி! அன்னையாகிய தேவியும் வேந்தர் பெருமானும் நலமுடையரே. ஆனால் அன்னை நின்னை வஞ்சித்துக் கொணர்ந்தமை கேட்டு

அவலத்தாற் கலக்குண்டு, நீராடல், பருகல், உண்டல் ஆகிய இவற்றிற் பற்றில்லாதவளா யிருக்கின்றாள். அரசர்பெருமானே நினக்கு ஒரு செய்திதந்து என்னை உய்த்தான். அச்செய்தி வருமாறு:— "வாசவதத்தை எரிந்துபோயினாள் என்று பொய்யான அவச்சொல்லை வெளிப்படுத்தி வற்சராசன் நின்னை வஞ்சத்தாற் பெற்றுக்கொண்டான். வாசவதத்தையோ வற்சராசற்கு உயிரினுஞ் சிறந்த காதலியாவாள் என்பது யாவரா லும் உணரப்பட்டதொன்றே. ஆதலின் 'பெண்மகப் பெறுதல் துன்பமாம்' என்னும் முதுமொழிக்கு முதல் எடுத்துக்காட்டாயினேன்" என்பதாம், என்று இவ் வாறு கூறினான்.

அதுகேட்ட பதுமாவதி, "நல்லோய்! 'வஞ்சத் தால் யான் கொணரப்பட்டேனாயினும் இங்குச் சுக மாகவே இருக்கின்றேன். நின் மருகன் வாசவதத்தை யின்பால் மிக்க அன்புடையவன் என்று யாவரானுங் கூறப்பட்டானாயினும் என்மாட்டு மிகப் பேரன்புடைய னாகவே யிருக்கின்றான். வாசவதத்தையும் உடன்பிறந் தாளையொப்ப என்பால் அளவில்லாத நட்புரிமைகொண் டுள்ளாள். ஆதலின், என்னிமித்தம் நீங்கள் கவலை மேற்கொள்ளல் வேண்டாம்' என்னும் இச்செய்தியை யான் கூறியதாகத் தந்தையின்பால் நீ சொல்லல்வேண் டும்" என்றிவ்வாறு கூறினாள். வாசவதத்தையும் அத் தூதனை நன்குபசரித்தாள். பின்னர், பதுமாவதியினது இச்செய்தியை ஏற்றுக்கொண்டு தூதன் மகதராசன் பக்கல் எய்தினான்.

பின்னர், பதுமாவதி தந்தையின் இல்லத்தை நினைந்து சிறிது அவாவுற்று வருந்தினாள். வாசவ தத்தை வசந்தகனை யலழைத்துப் "பதுமாவதிக்கு மகிழ்ச்சியோடு பொழுதுபோதற்பொருட்டுக் கதை சொல்லுக" என்று கூறினாள் வசந்தகன் மனத்தை இன்புறுத்தத்தக்க கதைகளைக் கூறினான். கதைமுடிவில் வாசவதத்தையையும் பதுமாவதியையும் நோக்கி "முற் பிறப்பில் நீவிர் இருவீரும் உடன்பிறந்த தெய்வப் பெண்களாயிருந்து ஏதோ ஒரு சாபப்பிழையால் மக்கட் பிறப்பை யடைந்தீர்கள். ஆதலின் உங்கள் நெஞ்சம் ஒன்றுக்கொன்று துணைசெய்வதாகவே இருக்கும். ஒரு பொழுதும் நும்மறிவு மாறுபடும் நிலையில் ஒழுகமாட் டாது" என்று இவ்வாறு கூறினான்.

அதுகேட்டுப் பதுமாவதி மிக்க மகிழ்ச்சியுடைய ளாயினாள். வாசவதத்தை பதுமாவதி இவ்விருவர் களின் உள்ளங்களும் பொறாமை சிறிதுமின்றி ஒன்றுக் கொன்று அநுகூலமுடையனவாய் ஓர் உள்ளம்போல் ஆயின. பின்னர், யௌகந்தராயணன் என்னும் அமைச் சன் வற்சராசன் பக்கல்எய்தி "வேந்தர் பெரும! இனிப் பெரியதொரு முயற்சி செய்யத்தக்கதாக இருக்கின்றது. இப்பொழுதே சிறிதும் தாழ்த்தலின்றிக் கௌசாம்பி நகரத்தைக் குறித்துப் புறப்படுதல் தக்கதாகும். மகத ராசனை யாம் வஞ்சித்தேமாயினும் நமக்கு அவன் துணை யில்லாதவனாகமாட்டான். அவனே பதுமாவதியின் விவாககாலத்தில் "இனியான் வற்சராசற்குக் கனவினுங் கேடுசெய்யக் கருதேன்" என்று தீக்கடவுள் சான்றாக

உறுதிசெய்துளான். அன்றி நம்மோடு பகைத்து உயிரினுஞ் சிறந்த பதுமாவதியை எங்ஙனம் புறக்கணிப்பான்? யானும் ஒற்றர்களைப் போக்கி அவன் உள்ளத்தை நன்குணர்ந்திருக்கின்றேன். ஆதலின் எவ்வாற்றானும் மகதராசன் நமக்குத் துணைசெய்பவனாவான் என்பது உறுதியே. ஆதலின் இப்பொழுதே புறப்பட்டுக் கௌசாம்பியை யடைவோமாக" என்றிவ்வாறு கூறினான்.

யௌகந்தராயணன், இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்குங்கால் மகதராசனுடைய தூதன் வந்தான். அவன் அரசனால் அனுமதிபெற்று வணங்கி, "வேந்தர் பெரும! பெருமானாகிய மகதராசனது செய்தியைத் தாங்கி இங்குவந்துளேன். அப்பெருமான், தன் அருமை மகளாகிய பதுமாவதியின் செய்தியைத் தூதன்முகமாகக்கேட்டு மிக்க மகிழ்ச்சியுடையனாய்த் 'தூதன் முகமாகவும், குழந்தை பதுமாவதியின் செய்தியாலும் அவ்விடத்து நிகழ்ச்சிகளை நன்றாக அறிந்துளேம் நினக்கு ஒப்பற்ற அறிவுடையனாகிய யௌகந்தராயணன் அமைச்சனாக இருத்தலின் நீயே எவ்வாற்றானுஞ் சிறந்தவனாவாய். பதுமாவதி வஞ்சத்தாற் கவரப்பட்டாளாயினும் நலமுடையளாயிருக்கின்றாள் என்றுகேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்துளேம். எதற்காக இத்தகைய ஏற்பாடுகள் தொடங்கப்பட்டனவோ அச்செயலிற் காலந்தாழ்த்தலின்றி நீ இறங்கல் வேண்டும். யாமும் அந்நிகழ்ச்சியில் துணை செய்வோம்' என்றிவ்வாறு நின்பாற்றெரிவிக்கும்படி கட்டளையிட்டருளினான்" என்று கூறினான்.

அதுகேட்டு வற்சராசன் உள்ளத்திற்றோன்றிய அளவிலா மகிழ்ச்சியை உள்ளடக்கிக்கொண்டு "தங்கள் துணையுடைமையால் யாம் மிக்க பெருமையுடையே மாயினேம். குறிப்பிட்டபடி செய்வேமாக" என்று மறுமொழிகூறி அத்தூதனை நன்கு உபசரித்துப் போக்கினான். தூதன் மகதராசனது தலைநகரைக் குறித்துப் புறப்பட்டான். அவ்வமயத்திலேயே உச்சயினிநகரத்தினின்றும் சண்டமகாசேனனால் அனுப்பப்பட்ட தூதன் வந்தான். அவனும் வற்சராசனால் உட்புக அனுமதி பெற்றுச்சென்று வணங்கி "தேவ! வேந்தர்பெருமானாகிய சண்டமகாசேனன் நட்புரிமையை முன்னிட்டுத் தங்களைக்குறித்துத் தெரிவித்துக்கொள்வதாவது:— 'பதுமாவதி விவாகம் முதலிய பாராட்டப்படும் நின்செயல்கள் அனைத்தையும் நன்கறிந்துளேன். யௌகந்தராயணனை அமைச்சனாகப் பெற்ற நீ எவ்வாற்றானும் பாக்கியவானாவாய். தன் தலைவனது நலத்தையே விரும்பித் தனக்குநேரும் துன்பத்தையும் பொருட்படுத்தாமல் யாருமறியாதவாறு இருக்கும் தாழ்ந்தநிலையை எய்திய குழந்தை வாசவதத்தையும் மிகவும் பாக்கியசாலியாவாள். இன்னும் வாசவதத்தை பதுமாவதி இவ் விருவர்களும் ஒருவருக்கொருவர் உண்மையன்புடையராயிருத்தலைக்கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். ஆதலின் நும்மால் அடைய விரும்பிய காரியத்தில் சிறிதும் தாழ்த்தலின்றி முயற்சிமேற்கொள்ளப்படல் வேண்

டும். அக்காரியத்தில் யாமும் துணைசெய்வேம்' என்பதாகும்" என்றிவ்வாறு கூறினன். அதுகேட்ட வற்சராசன் சண்டமகாசேனற்குத் தக்கவாறு மறுமொழியீந்து தூதனை யுபசரித்துத் திருப்பியனுப்பினன்.

அதன்பின், யௌகந்தராயணன் கூறியவண்ணம் வாசவதத்தை பதுமாவதி இவ்விருவர்களோடு கௌசாம்பிநகரத்தைக் குறித்துப் புறப்பட்டான். கரைகடந்துசெல்லும் கடல்நீர்போல அளவிடவொண்ணுப் படைகள் அவனைப் பின்பற்றிச் சென்றன. களிற்றரசின் பிடர்க்கண் ஏறிச் செல்கின்ற உதயனன், கீழ்க்கடன்மலையிற்றோன்றித் திகழும் கதிரவனையொப்ப விளங்கினன். வாசவதத்தையும், பதுமாவதியும் பின்னுக மற்றொரு பெண்யானையின்மீதிவர்ந்து அவ்வுதயனனைப் பின்றொடர்ந்து சென்றனர். இங்ஙனம், வற்சராசன் வரவைக்கேட்டுக் குதூகலமிக்க நகரத்து மாந்தரெல்லாரும் கௌசாம்பி நகரத்தை அணிசெய்தனர். எவ்விடத்தும் கொடியாடைகளை இடைவெளியின்றி யுயர்த்தினர்கள். இல்லங்கடோறும் அழகுவாய்ந்த பற்பல தோரண வரிசைகளைக் கட்டினர்கள். வீட்டு வாயில்கள்தோறும் உயர்ந்த நிறைகுடங்களையமைத்தார்கள். இவ்வாறு நகரத்து மக்கள் அனைவராலும் மகிழ்ச்சியோடு வரவேற்கப்பட்ட உதயனன் கௌசாம்பி நகரத்துட் புகுந்தான். அப்பொழுது, எங்கும் களிப்போடு ஆரவாரிக்கின்ற நகரத்து மக்களால் நிறையப்பெற்ற கௌசாம்பி நகரம், திங்களஞ்செல்வன் தோன்றுங் காலத்துப் பெரிய அலைகளை

யுடைய கடற்கரைபோலத் திகழ்வதாயிற்று. இங்ஙனம் நகரத்திலுள்ள மாந்தர்களின் கண்களை இன்புறுத்தும் உதயனன், வாசவதத்தை பதுமாவதி இவ்விருவர்களோடும் தன் அரண்மனையை யடைந்தான்.

## வெண்பா.

மாமன்மார் தன்சீர் வளர்ச்சி கருதியுய்த்த
தூய்மை நிறைதுணையாஞ் சொற்பேறிப்—பூமனெழில்
இன்ப நிலமா மிலாவா ணகமகன்று
நன்புலத்திற் சென்றுணங் நாள்.

---

# பத்தாம் வகுப்பு.

## (அரியணை யடைதல்.)

அதன்பின்னர், பிற்றைநாட் காலையில் வற்சராசன் காலைக்கடனை முடித்துக்கொண்டு அமைச்சர்களோடு அத்தாணிமண்டபத்தை யலங்கரித்தான். அப்பொழுது ஓர் அந்தணன் வாயிற்புறத்தையடைந்து "அந்தோ! அந்தோ!!" என்று கதறினன். உதயனன் துன்பத்தின் காரணத்தைக் கேட்க, அவ்வந்தணன் "வேந்தே! காட்டிற் செல்கின்ற என்புதல்வன் குற்றம் யாதும் செய்யாதிருப்பவும் அவன் காலைக் கொடியவர்களாகிய இடையர்கள் வெட்டினர்கள்" என்றிவ்வாறு கூறினன். அதுகேட்டு வற்சராசன் அந்தணனைத் தேற்றி அக்கணமே அவ்விடையர்களைக்கொண்டு வரச் செய்தான். கொணர்வித்து எதற்காக இத்தகைய கொடுஞ்செயலைச் செய்தீர்கள்? என்று வினவினன். அவர்கள் "அரசர் பெரும! இடையர்களாகிய யாம் மனித சஞ்சாரமில்லாத காட்டில் விளையாடிக்கொண்டிருந்தோம். எங்களுள், தேவசேனன் என்னும் பெயரினையுடைய இடையன் ஒருவன் இருக்கின்றான். அவன் காட்டின் ஒருபுறத்தே கல்லான் அமைந்ததோர் இருக்கையைக் கண்டு அதன்கண் அமர்ந்தான். அமர்ந்த மாத்திரத்திலேயே "யான் இப்பொழுது இடையர்களுக்கு அரசனாகின்றேன். ஆதலின், இனி நீவிர் விழிப்புடன் எனது ஆணைவழி ஒழுகுதல் வேண்டும்" என்று எமக்குக் கட்டளையிட்டான்.

யாங்களும் அவ்வாணையை அங்ஙனமே ஏற்றுக்கொண் டோம். அதுமுதல் அவன் ஆணையை யாம் கடப்ப தில்லை. அவன் இங்ஙனங் காட்டில் அரசு செலுத் திக் கொண்டிருக்குங்கால், இவ்வந்தணன் புதல்வன் அவ்வழிக்கட் சென்றுகொண்டிருந்தான். எங்கள் அரசனாகிய தேவசேனனுக்கு வணக்கஞ் செய்திலன். யாம் அவன் பக்கல் அணுகி "வேந்தற்கு வணக்கஞ் செய்யாது நீ செல்லல் கூடாது" என்று கூறினேம். அவன் இங்ஙனம் பலவாறு வற்புறுத்துரைக்கப்பட் டும் எம்மைப் பொருட்படுத்தாமற் சென்றான். அதன் பின் யாம் எல்லோரும் அவனை வலிந்திழுத்து அர சன் பக்கல் சேர்ப்பித்தோம். எங்கள் தலைவனாகிய அத் தேவசேனன் "இறுமாந்த இவனது காலை வெட்டி விடுங்கள்" என்று எமக்குக் கட்டளையிட்டருளினான். ஆதலின் யாம் அரசனது ஆணையை மேற்கொண்டேம். அரசனது ஆணையைக் கடத்தற்கு எங்ஙனம் ஆற்ற லுடையேம் ஆவேம்?" என்றிவ்வாறு தெரிவித்துக் கொண்டனர்.

இவ்வாறு இடையர்கள் கூறிய சொற்களைக் கேட்டு அறிஞனாகிய யௌகந்தராயணன், நெடுநேரம் மனத்தில் ஆராய்ந்து, வற்சராசனை மறைவிடத்திற் கழைத்து, "வேந்த! அவ்விடத்தில் அளவில்லாத வைப்புப் பொருள்கள் நிச்சயமாக உள்ளன. அப் பொருண்மாட்சியால் இடையனும் அரசனை யொப்ப ஒழுகுதற்குரிய வன்மையுடையவனாயினான். ஆதலின் இப்பொழுதே புறப்பட்டு அவ்விடத்தை யடைந்து

சோதித்தல் வேண்டு" மென்று இவ்வாறு கூறினான். வற்சராசன் அங்ஙனமேயாக வென்று உடன்பாடுற்று அக்கணத்தே புறப்பட்டு இடையர்களாற் காட்டப் பட்ட நெறியே சென்று அவ்விடத்தை யடைந்தான். பின்னர் அவ்விடத்தை வினைஞர்களைக் கொண்டு தோண்டுவித்தான். அவ்விடத்தினின்றும் மலையை ஒத்த உருவத்தினையுடைய ஓர் இயக்கன் கிளம்பினான். அவ்வியக்கன் "அரச! நின் குலத்து முன்னோர் களால் வைக்கப்பட்ட பெரிய நிதி இங்குள்ளது. அத னைக் காத்தற்கு இத்துணைக்காலம் ஈண்டிருந்தேன். அதனைப் பெற்றுக்கொள்வாயாக, செல்கின்றேன்" என்று சொன்னான். அதுகேட்டு மிக்க மகிழ்ச்சி யடைந்த வற்சராசன் இயக்கற்கு அளவின்றிப் பூசை செய்தான். அப் பூசனையை ஏற்றுக்கொண்டு அவ் வியக்கன் மறைந்தான். அதன்பின், கல்லப்பட்ட அவ் விடத்தினின்றும் பெரியநிதி வெளிப்பட்டது. பின் னும் அவ்விடத்தில் மிக்க விலைமதிப்புள்ள இரத்தினங் களழுத்திய அரியணையும் காணப்பட்டது. ஆங்கா லத்தில் மனிதற்கு மேன்மேலும் மங்கல வரிசைகள் தாமாகவே வந்தடைவனவாம். ஆதலின், வற்சராசன் இடையர்களை நோக்கி இனி நீவிர் இன்னோரன்ன கொடுஞ்செயல்களைச் செய்தல் கூடாது என்று கட்டளை யிட்டான்.

பின்னர், பொருட் குழுவனைத்தையும் எடுத்துக் கொண்டு தன் நகரத்தைக் குறித்துப் புறப்பட்டான். இரத்தினங்களிழைக்கப்பட்ட அவ்வரியணையை நன்கு

பார்த்துக் கௌசாம்பிநகரத்து மக்களெல்லோரும் மிகவும் வியப்பெய்தினர். மற்றுநாள் யௌகந்தராயணன் வற்சராசனை நோக்கி "வேந்த! நின் முன்னோர்கள் வீற்றிருந்த இரத்தின சிங்காதனத்தில் ஏறி அலங்கரிப்பாயாக" என்றிவ்வாறு தெரிவித்தான். அதற்கு வற்சராசன் "எனது முன்னோர்களாகிய அரசர்கள் நிலவுலக முழுதையும் தந்தோள் வலியால் வென்று இவ்வரியணையில் ஏறி வீற்றிருந்தார்கள். யானும் எல்லாத் திசைகளையும் வென்ற பின்னரே இவ்வரியணையில் ஏறுதற்கு விரும்புகின்றேன். ஆதலின் இப்பொழுதே நாற்புறமும் கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்தை வென்று கோடற்குப் புறப்படல் வேண்டும்" என்றிவ்வாறு மறுமொழி கூறினன்.

யௌகந்தராயணன், அச் சொற்களை மகிழ்ந்து பாராட்டினன். பின்னர் "முதலிற் கீழ்த்திசையை நோக்கிப் புறப்படுவாயாக" என்று கூறினன். அது கேட்டு வற்சராசன் "வடக்கு முதலிய திசைகள் இருக்கக் கீழ்த்திசையைக் குறித்து முதலிற் செல்லல் வேண்டுமென்னும் நியமம் எதற்காகச் செய்யப்பட்டுள்ளது" என்று வினவினன். அதற்கு யௌகந்தராயணன், "வேந்த! கேட்பாயாக. நான்கு திசைகளுள் வடதிசை எல்லாச் செல்வமும் நிறைந்ததாயினும், மிலேச்சர்களாற் கவரப்பட்டிருத்தலின் இழிந்ததாகும்; மேற்றிசையும் கதிரவன் சென்று மறைதற்குக் காரணமாயிருத்தலிற் சிறந்ததன்று; தென்றிசையும் இயமனால் ஆளப்படுதலின் உயர்ந்ததன்று;

கீழ்த்திசையிலோ பகவானாகிய கதிரவன் உதயமாகின்றான்; அத்திசையிலேயே எல்லாத் தேவர்களுக்குந் தலைவனாகிய இந்திரன் வீற்றிருக்கின்றான்; எல்லா உலகத்தையும் தூய்மைசெய்யும் கங்கையும் கீழ்பாலை நோக்கி ஓடுகின்றது; கங்கையின் சிறப்பைப்பற்றி வேறு கூறற்பாலது என்னை? எல்லா நாட்டினுள்ளும் கங்கைநீராற் றூய்மைசெய்யப்படும் நாடே சிறந்ததாகப் பாராட்டப்படுவதாகும்; பெரும்பாலும் அரசர்கள் பலர் கங்கைக் கரைகளிலுள்ள நாடுகளிலேயே வாழ்கின்றனர்; ஆதலின் நலத்தை விரும்பும் அரசர் முதலிற் கீழ்பாலை நோக்கிச்செல்வர்; நின் முன்னோர்களும் கீழ்பாற்றொடங்கியே எல்லாத்திசைகளையும் வென்றனர்; கங்கைக் கரையிலுள்ள அத்தினபுரத்திலேயே வாழ்ந்தனர். நின் பிதாமகனாகிய சதானீகன் அத்தினபுரத்தை விட்டுக் கௌசாம்பியை யடைந்தான்; அத்தினபுரத்தினும் சிறந்த எழில்வாய்ந்ததாகுங் கௌசாம்பிநகரம்; சதானீகன் நிலமுழுதும் ஆளுதல் ஆண்மையின் பாலதாகும்; நாடு என்செய்யும் என்றெண்ணி முன்னோர்களாற் பெறப்பட்டதாயினும் அத்தினபுரத்தையொழித்துவிட்டான்; நினக்கு இப்பொழுது ஊழ் நல்லதாக இருக்கின்றது; ஆண்மையும் நிறைந்துளது; ஆதலிற் சிறிதுந் தாழ்த்தலின்றித் திக்குவிசயத்தின் பொருட்டுப் புறப்படல் வேண்டும்'' என்றிவ்வாறு மறுமொழி கூறினான். இங்ஙனங்கூறிய யௌகந்தராயணன் சொற்களைக்கேட்டு வற்சராசன் அமைச்ச! “நலமிதொன்றடைதற்குறு மிடையூறு நாதனே! பலவுள'' என்பது

முதுமொழி, ஆதலின், இடையூறுகளைப் போக்கு தற்கு முதலிற் பகவானாகிய உமாநாதனை வழிபடுதற்கு விரும்புகின்றேன்; என்று கூறினான். யௌசந்தராயண னும் அங்ஙனமே செய்தல் வேண்டுமென்று ஒத்துரைத் தான். பின்னர் மற்றை அமைச்சர்களும் தழீஇக்கூற, வற்சராசன் வாசவதத்தை, பதுமாவதி இவ்விருவர்க ளோடு நீராடித் தூய்மையுடையனாய் மூன்றிரவு பட் டினி இருந்து பகவானாகிய உமாகாந்தனைப் பூசித்தான். நோன்பின் இறுதியிற் சிவபெருமான் கனவிற்றோன்றி "வேந்த! நீ குற்றமற்ற மெய்யன்போடு செய்த வழி பாட்டினான் மகிழ்ச்சி யெய்தினேம். சிறிதும் ஐயமின் றித் திக்குவிசயங் குறித்துப் புறப்படுவாயாக. தடை யில்லாத வெற்றியை யடைவாய். வித்தியாதரச் சக்கர வர்த்தியாகிய புதல்வனையும் விரைந்து பெறுவாய்" என்றிவ்வாறு கட்டளையிட்டருளினார். அதன்பின், கண்விழித்த வற்சராசன் பெரிதும் இன்பமுடையனாயி னான். காலைப்பொழுதில் இக்கனவின் நிகழ்ச்சியை நோன்பினாலிளைத்த மனைவிமார்க்குங் கூறினான். பின் னர் அமைச்சர்களுக்குங்கூறினான். அதனை எல்லோரும் கேட்டு மகிழ்ச்சியின்பேரெல்லையை அடைந்தார்கள். பின் வற்சராசன் நோன்பைமுடித்து உணவுட்கொண்டான்.

## வெண்பா.

முன்னோர்தம் வைப்பாம் முழுமணிப் பூண்பொருளும்
பொன்னா ரரியணையும் போற்றியெடுத்—தந்நாள்
திசைவிசயஞ் செய்தேறச் சிந்தித் தரனை
வசையொழியப் பூசித்தான் மன்.

# பதினோராம் வகுப்பு.

## (திக்குவிசயம்.)

அதன்பின், மற்றுநாள் யௌகந்தராயணன், வற்சராசனை நோக்கி "தேவ! பகவானாகிய பார்வதீ காந்தன் திருவருளால் நீ பாக்கியவானாயினாய். ஆதலின் இப்பொழுதே திக்குவிசயத்தின் பொருட்டுப் புறப்படுவாயாக. தோள்வலியால் ஈட்டப்படும் அரசியற்றிருவை யடைவாயாக. அறவழியான் ஈட்டப்படுஞ் செல்வமே அழிவில்லாததாகும். மறவழியான் ஈட்டப்படுஞ் செல்வங்கள் புன்னுனியிற் பொருந்தியிருக்கும் பனித்திவலைகளை யொப்பச் சிறிதுபொழுதில் அழிந்துவிடும். ஆதலின் அரசன் அறவழியாற் பொருளீட்டுதலில் முயற்சி செய்தல் வேண்டும். நினக்கு இப்பொழுது எல்லாத் திசைகளும் எளிதில் வெல்லற்பாலனவாம். நினக்கு மாமன்மார் இருவர்களுடைய இயைபாற் பல அரசர்கள் உறவினராயினர். அவ்வெல்லோரும் திக்குவிசயங் குறித்துச் செல்லும் நின்னோடு பகைமை கொள்ளார். துணைசெய்தலையேமேற்கொள்பவராவர். காசிநகரிற் பிரமதத்தன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் உளன். அவன் ஒருவனை முதலிற் கருதற்பாலன். அவன் நினக்கு எப்பொழுதும் பகைவனாவான். அவனை

முதலில் வென்று பின்னர்க் கீழ்த்திசை தொடங்கி எல்லாத் திசைகளையும் வெல்லுவாயாக" என்றுகூறினன்.

இங்ஙனங்கூறிய யௌகந்தராயணன் சொற்களைக் கேட்டு வற்சராசன் படைத்தலைவனை யழைத்து "இப்பொழுதே திக்குவிசயச் செலவிற்குரிய ஏற்பாடுகளைச் செய்தல் வேண்டும்" என்று கட்டளையிட்டான். அப்பொழுது வாசவதத்தையின் உடன்பிறந்தானாகிய கோபாலகனும் பதுமாவதியின் உடன்பிறந்தானாகிய சிங்கவன்மனுந் துணைசெய்தற்பொருட்டு அவனைப் பின்றொடர்ந்து சென்றனர். வற்சராசன் கோபாலகனை விதேகநாட்டிற்கு அரசனாகச்செய்தான். சேதிநாட்டைச் சிங்கவன்மனுக்குக் கொடுத்தான். பின்னர்த் தனக்குத் துணைசெய்தற் பொருட்டு விந்திய மென்னும் அடவியினுட்பண் இருக்கின்ற வேடர் தலைவனாகிய புளிந்தகனைப் பரிவாரங்களோடு கொண்டுவரச் செய்தான்.

இதற்கிடையில், யௌகந்தராயணன் பிரமதத்தனது செயலை அறிதற்பொருட்டுக் காசிநகரைக் குறித்து ஒற்றர்களைப் போக்கினன். அவர்கள் காபாலிக வேடந்தாங்கிக் காசிநகரை யடைந்தார்கள். அவர்களுள், குககனென்னும் பெயரினையுடைய ஒருவன் ஆசாரிய வேடம் பூண்டான். மற்றையோர் அவற்கு மாணவகர் ஆயினர். அவர்கள் ஐயமேற்றுண்ணும் அவ்வஞ்சக குருவை முக்காலமு முணர்ந்தோன் என்று

புகழ்ந்து கொண்டாடினர். காசிநகரத்து மாந்தர் அனைவரும் எதிர்காலத்துவரும் நன்று தீதுகளைக் கேட்டற்கு வணக்கத்தோடு அவன் பக்கல் சூழ்ந்தனர். எல்லாவற்றையும் ஞானக்கண்ணாற் காண்பவன் போல் அபிநயஞ் செய்கின்ற அக்கபடகுரு, இன்ன இடத்தில் நெருப்புப்பற்றும், இன்ன இடத்திற் களவு போம், என்று இவை முதலியவற்றுள் எதனை யெதனை அம்மாந்தர்க்குச் சொல்லுகின்றனோ அதனை யதனை அவன் மாணவகர்கள் உண்மையாகவே செய்தனர். இதனால் அவன் பெரும்புகழ் எங்கும் பரவுவதாயிற்று. அவ்வமயத்தில் வற்சராசனது திக்குவிசய யாத்திரையின் ஏற்பாட்டை ஒற்றன் முகமாக அறிந்த பிரமதத்தன் மிகவும் கலக்குண்ட நெஞ்சமுடையனாயினான். அப்பொழுது மிக வியக்கத்தக்க மகிமைகளையுடைய இக்காபாலிகவிரதி வந்திருத்தலைக் கேட்டு அவனை வழிபடுதற்குத் தன் மகன் ஒருவனையனுப்பினான் அக்கபடகுரு அவ்வரச குமாரனைச் சிறந்த மாணவகனாக ஏற்றுக்கொண்டான். பின்னர் அவன் முகமாகப் பிரமதத்தனுடைய எல்லா மறைபொருள்களையும் அறிந்தான்.

வற்சராசன், முதலிற் காசிநகரை நோக்கிப் படையெடுத்துவருவான் என்றுணர்ந்த யோககரண்டகன் என்னும் பெயர்வாய்ந்த பிரமதத்தனுடைய அமைச்சன் பல வஞ்சகச் செயல்களைச் செய்தான். வழியிலுள்ள மரங்கள், கொடிகள், நீர்நிலைகள், புற்கள் ஆகிய இவைகளை நஞ்சுபொருந்தச் சேர்த்துக்

கெடுத்தான். பொருட்பெண்டிர் உருவந்தாங்கிய நச்சுப்பெண்களை ஆங்காங்கு நிலைப்படுத்து இயங்க வைத்தான். இராக்காலங்களிற் பாசறை புகுந்து மறைவிற் படைகளைக் கொல்லுதற்குரிய கொலைத் தொழில்வல்ல மாக்களைத் திட்டஞ்செய்தான். இங்ஙனம் பிரமதத்தனுடைய அமைச்சனாற் செய்யப் பட்ட வஞ்சகச் செயல்களை யுணர்ந்து கபடமிக்க காபாலிகன் ஒற்றன்முகமாக யௌகந்தராயணற்கு அறிவித்தான்.

பின், வற்சராசன் கணிதம் வல்லுநரால் தெரிந் துரைக்கப்பட்ட நன்னேரத்திற் படைகளோடு புறப் பட்டான். அப்பொழுது அவற்கு வெற்றியை யறி வுறுப்பனவாகிய நன்னிமித்தங்கள் பல உண்டாயின. நிலவுலக மனைத்தையும் மறைத்துக்கொண்டு கிளம்பிய தும் அளவறுக்க ஒண்ணாததுமாகிய அவன்படை ஊழிக்காலத்திற் கரைகடந்தெழூஉம் கடனீர் போலக் காணப்பட்டது. மிகவுயர்ந்த களிற்றின் பிடர்க்கண் ஏறி வீற்றிருக்கும் உதயனன் காலைப்பொழுதில் உதய மலையின் உச்சியில் விளங்கித் தோன்றும் கதிரவனை யொப்பத் திகழ்ந்தான். முதலிற் கிழக்குத் திசையைக் குறித்துப் புறப்பட்ட வற்சராசன் காசிநகரை நோக்கிச் சென்றான்.

முன்னரே, பிரமதத்தனுடைய அமைச்சன் யோக கரண்டகனாற் செய்யப்பட்ட வஞ்சகங்களை

யறிந்த யௌகந்தராயணன் மாற்றுச் செயல்களால் அவ் வஞ்சச்செயல்களைப் பயனில்லாதனவாம்படி செய்தான். நஞ்சின் சேர்க்கையாற் கெடுக்கப்பட்ட புல், நீர் முதலியவைகளை எதிர்ப்பிரயோகத்தால் ஆராய்ந்து ஒழித்தான். நச்சுப்பெண்களின் றடையைப் போக்குதற்கு, முன்னர்க் காணப்படாத பெண்கள் உட்புகுதலைப் படைவீட்டிற் றடுத்தான். மறைவிற் கொல்லுங் கொலைத்தொழிலாளரை உபாயங்களாற் றேடிக்கொன்றான். இங்ஙனம் யௌகந்தராயணன் பகைவனுடைய வஞ்சகச் செயல்களைப் பயனில்லாதனவாக்கி வற்சராசனது வென்றிச் செலவை இடையூறில்லாததாகச் செய்தான். இவ்வாறு இடையூறொழித்து அளவில்லாத படைகளாற் றிசையிடங்களை நிறைத்துவந்த வற்சராசனைக்கண்டு செயற்பாலது இன்னதென்று அறியாமையாற் பாழடைந்த நெஞ்சினனாகிய பிரமதத்தன் அமைச்சர்களோடு சூழ்ந்து "வற்சராசனை வெல்லுதற்கு முடியாது" என்று துணிந்தான். பின்னர்ப் பலவகைக் கையுறைப்பொருள்களை ஏந்திக்கொண்டு தலையிற் கைகூப்பி வற்சராசன் பக்கல் எய்தினான். அடைக்கலம் புகுந்தோரை அன்பு செய்யும் வற்சராசன், அப் பிரமதத்தனை மகிழ்ச்சியாற் பெருமைப்படுத்தி விடுத்தான்.

இவ்வாறு, வற்சராசன், வணங்கினவர்களை அன்பினாற்காத்தும், இறுமாந்தவர்களை வேரோடுகளைந்தும் ஆங்காங்கு வெற்றிக்கொடிகளை நாட்டிக் கீழ்க் கடற்கரையை யடைந்தான். அதன்பின் மகேந்திர

நாட்டின் தலைவனாகிய கலிங்கனை எதிர்த்துச் சென்றான். அக்கலிங்கன் நீரோட்டத்தில் வளைந்துகொடுக்கும் நாணற்புல்லின் நிலையை மேற்கொண்டு மகேந்திர தேயத்திற்றோன்றிய அளவிறந்த யானைகளைக் கையுறையாகக் கொடுத்து வணங்கினான். அதன் பின் கடற்கரை வழியாகவே தென்றிசைகளை வெல்லுதற்குப் புறப்பட்டான். அவ்விடத்துக் காவிரியாற்றைக் கடந்து சோழராசனை வென்றான். பின்னர் முரளையாற்றின் கரையை விரைந்தடைந்து வணங்கிய சேரர்களுக்கு அருள்செய்தான். பின்னர் எழுவகைப் பிரிவினையுடைய கோதாவரியைக்கடந்து நருமதையாற்றின் கரையில் இரண்டு மூன்று நாட்கள் தங்கினான். பின்னர், அதனையுங்கடந்து உச்சயினி நகரத்தை நோக்கிப் புறப்பட்டுச் சென்றான். சண்டமகாசேனன் அன்போடு எதிர்சென்று நல்வரவேற்க அவ்வுச்சயினி நகரத்துட் புகுந்தான். அவ்விடத்தில், தன்னாட்டை மறக்கச்செய்யும் மாமன் வீட்டு வாழ்க்கை இன்பத்தை நுகர்ந்து சில நாட்களைப் போக்கினான்.

அதன்பின் மேற்றிசையைக் குறித்துப் புறப்பட்டுச்சென்று இலாடதேசத்தரசர்களை வென்றான். பின்னர் மந்தரமலையைக் கடந்து வடதிசையை யடைந்தான். அவ்விடத்திற் சிந்துதேயத்தரசனை இருத்தி இறுமாப்புடைய மிலேச்சர்களை ஓட்டினான். பின்னர்ப் பாரசீகநாட்டை யடைந்து வணக்கமில்லாத பாரசீகத்தரசனது தலையைக் கூரிய அம்புகளாற் பிளந்து

வீழ்த்தினன். பின்னர் இமயமலையின் சாரலில் இருக்கின்ற ஊணர்களைப் பணியச்செய்தான். அதன் பின், காமரூபேசுவரன் என்பான், வற்சராசனைக் குடைநிழல் பெறாத தலையால் வணங்கி இறைப்பொருள் கொடுத்தான்.

இவ்வாறு வற்சராசன், நிலமுழுதும் வென்று பதுமாவதியின் தந்தையாகிய மகதராசனது தலைநகரை யடைந்தான். மகதராசன், எல்லா நாட்டினுஞ் சென்று தடுக்கப்படாத பராக்கிரமம் வாய்க்கப்பெற்று, வாசவதத்தை பதுமாவதி இவ்விருவர்களோடும் வருகின்ற மருகனைக்கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். முன்னர் உவளகத்தில் மறைவாக இருந்தவளும் இப்பொழுது வெளிப்படையாக வருகின்றவளுமாகிய வாசவதத்தையை உவளகத்து மகளிர் அனைவரும் வியப்புஞ் சிறப்புமுடையராய்ப் பார்த்தார்கள். அவ்விடத்தில் மகதராசனால் விசேட உபசாரஞ் செய்யப்பெற்ற உதயனன் அங்கிருந்து புறப்பட்டு இலாவாணகத்தை யடைந்தான். படைகள் இளைப்பாறுதற் பொருட்டுச் சில நாள்வரை அங்குத் தங்கினன். பின்னர் யாத்திரையா னேர்ந்த துன்ப நீங்கிய சைனியங்களை யழைத்துக்கொண்டு கௌசாம்பியை நோக்கிச் சென்றான். வெற்றித் திருவால் விளங்குகின்ற வேந்தனை நேராகத் தரிசனஞ் செய்தற்குக் குதூகல மிக்க நகரமாந்தர்களால் தோரண முதலியவைகளைக் கொண்டு அலங்கரிக்கப்பட்டதும் நாற்புறமும் உயர்த்தப்பட்ட கொடிகளையுடையது

மாகிய கௌசாம்பி நகரத்தைட் புகுந்தான். பின்னர் நகரத்து மக்களாலும் அமைச்சர்களாலும் அனுமதி பெற்று நன் முகூர்த்தத்தில் இரத்தின சிங்காதனத் திவர்ந்து வீற்றிருந்தான். அப்பொழுது திக்குவிசயத் தினால் ஈட்டியபொருளனைத்தையும் அந்தணர்க்கு வழங் கினான். இவ்வாறு தன்றோள்வலியால் ஈட்டிய அர சியற்றிருவினால் விளங்குகின்ற வற்சராசன் உருமண் வானிடத்தும், யௌகந்தராயணன் பாலும் அரசியற் சுமையனைத்தையும் வைத்துவிட்டு, வாசவதத்தை பதுமாவதியாகிய இவ்விருவர்களோடுங் கூடி விளை யாடித், தேவர்களும் விரும்பத்தக்க இன்பத்தை நுகர்ந்து, காலங்கழித்து வந்தான்.

## வெண்பா.

ஒற்ற ரமைச்ச ருரன்வலியாற் றிக்கனைத்தும்
வெற்றிகோடு மாமன்மார் மேவிடஞ்சென்—றுற்ற
நலனுகர்பு தன்னகரின் நண்ணினான் றோளின்
வலன்மிகுதார் வண்மைசெய் மன்.

முன்றோன்று செல்வத்தை முன்னச் சிறந்ததுமன்
றன்றோள் வலியாற் றருந்திருவே—யென்று
கருதி வினைமுடித்துக் காண்டகு பண்டை
யரியணைக்க ணுற்று னரசு.

# பன்னிரண்டாம் வகுப்பு.

(நரவாகனதத்தன் பிறப்பு.)

அரசியலிற் கருத்தில்லாத வற்சராசன் சிலநேரம் வசுநேமியாற்றரப்பட்ட யாழைவாசித்துக் காலங் கழிப்பான். சிலநேரம் வேட்டையாடி மனத்தை மகிழ்விப்பான். சிலநேரம் யாழோடு ஒன்றுபட்ட கண்ட விசையாற் பாடுகின்ற வாசவதத்தையின் இசைத்தொழிற் றிறமையைக்கண்டு தலையசைத்து மகிழ்வான். சிலநேரம் சுவைபடப் பேசுந்திறன் வாய்ந்த பதுமாவதியோடுகூடி இன்புற்று நெடுநேரத்லைத ஒரு கணமெனக் கழிப்பான்.

பின்னர், அரசியல் நினைவை மறந்து வேட்டை யாடுதலிற் பற்றுடையவனாய் எப்பொழுதும் காட்டிற் றிரிவானாயினான். அதனையறிந்த நாரதமுனிவர் அங்கு வந்தார். வற்சராசன் அந் நாரதமுனிவரைச் சேய் மைக்கண்ணே கண்டு, விரைந்து இருக்கையினின் றெழுந்து எதிர்கொண்டழைத்தான். பின்னர்த் தன் கைகளாற் கொணர்ந்திடப்பெற்ற இருக்கையில் அவரை யிருக்கச்செய்து முறைப்படி உபசரித்தான். வணக்க முடையனாகிய வற்சராசனாற்செய்யப்பட்டவழிபாட்டை ஏற்றுக்கொண்ட நாரதமுனிவர், பின்வருமாறு கூறுவா ராயினார். "வேந்த! நினக்கு நலமுண்டாதலை விரும்பிச் சிறிது உபதேசஞ் செய்வான் இங்குப் போந்தேன். வேட்டையாடுதலில் உண்டாம் பேரவா அரசர்களுக்குப்

பெரிதும் ஏதந்தருவதாம். இதனாற் பலஅரசர்கள் துன்பம் எய்தினர். நின்முன்னைப் பிதாமகனாகிய பாண்டு என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் நின்னையொப்ப வேட்டையாடுதலில் மிகப் பற்றுடையனாக இருந்தான். வேட்டையாடிக் காட்டில் மானுருவத்தோடு திரிந்த கிந்தமன் என்னும் பெயரினையுடைய முனிவனைக் கொன்றான். அம்முனிவன் சாபத்தாற் பாண்டு காளைப்பருவத்திலேயே மரணமெய்தினான். ஆதலின் துன்பம்விளைவிக்கும் வேட்டை விருப்பை விடுப்பாயாக. வாசவதத்தையோடு பகவானாகிய உமாகாந்தனை வழிபடுவாயாக. அச்சிவபிரான் திருவருளாற் காமதேவன் கூறாக ஒரு புதல்வன் நினக்கு உண்டாவான். அவன் வித்தியாதரச் சக்கரவர்த்தியுமாவான்" என்று கூறி நாரதமுனிவர் வற்சராசன்பால் விடைபெற்றுச் சென்றார்.

அதன்பின் வற்சராசன், வாசவதத்தையோடு மூன்றிரவு பட்டினியிருந்து சிவபெருமானை ஆராதனை செய்தான். சிவபிரான் அவ்விருவர்களுக்குங் கனவிற்றம் தரிசனங்கொடுத்துப் பின்வருமாறு சட்டளையிட்டருளினார். "நுங்கள் வழிபாட்டான் மகிழ்ச்சியடைந்தேம். விரைவிலேயே காமதேவன் கூறாகவுள்ள புதல்வனை யடைவீர்கள். ஆதலின் நோன்பை முடித்துக் கொள்வீர்களாக" என்றுகூறி மகேசுரர் மறைந்தார்.

அதன்பின், விழிப்பெய்திய வாசவதத்தையும் வற்சராசனும் பெருமகிழ்ச்சியடைந்தனர். பின்னர்

விதிப்படி நோன்பை நிறைவேற்றிக்கொண்டு உண வுட்கொண்டனர். சிலநாட் சென்று இரவில் மிகு துயில் மேற்கொண்ட வாசவதத்தையைச், சடைமுடி தரித்த தேவன் ஒருவன் அடைந்து தெய்வ உலகில் உண்டாகிய ஒரு பழத்தை அவட்குக் கொடுத்து அப் பொழுதே மறைந்தான். வாசவதத்தை அச்சனவை வற்சராசற்குத் தெரிவித்தாள். பகவானாகிய சிவ பெருமானே பழமென்னும் பொருளாற் புதல்வனை யருளினார் என்று கருதி வற்சராசன் மிக்க மகிழ்ச்சி யடைந்தான். வாசவதத்தை கருத்தரித்தாள். அவள் முகம் வெண்ணிறம் எய்திற்று; உடலும் மெலிவுற் றது. ஓர் அமயம் அவள் தன்னை விண்ணில் விமா னத்தில் ஏற்றிக்கொண்டு போவதாகவும் கேட்டாற் கினிமையுண்டாம்படி பாடுகின்ற வித்தியாதரப் பெண் கள் போற்றுவதாகவும், கனவிற்கண்டாள். விழிப்புற்ற அவள் அந்நிகழ்ச்சிகளை நேராக அனுபவிக்க விரும்பி னள். யௌகந்தராயணனும் தனது இந்திரசால விச் சைத் திறமையால் அவள் விருப்பத்தை நிறைவேற்றி னன். வாசவதத்தையின் வயிற்றிற் கருப்பம் முறையாக வளர்ந்தது; அவள் இடை பருத்தது; மும்மடிப்பும் மெல்ல மெல்ல மறைந்தது. அக்கருப்பத்தை எப் பொழுதுந் துணைநின்று சூலபாணியாகிய சங்கரர் பாது காத்தார்.

பத்தாந் திங்களில் வாசவதத்தை பேறுகாலத் தின் அணிமையுடையளாயினள். நன்னேரத்தில் மணிமயமான விளக்குக்களாலும், மஞ்சண் முதலிய

மங்கலப் பொருள்களாலும், அணிசெய்யப்பட்ட மகப் பெறும் இல்லத்துட் புகுந்தாள். அவ்விடத்தில் திங்களஞ் செல்வனைப்போலக் கண்களுக்கு இன்பம் விளைவிக்கும் புதல்வனைப் பெற்றாள். அப்பொழுது உவளகத்தி லுள்ள தோழிமாரனைவரும் விரைந்து யான் முன் யான் முன் என்று ஓடிவந்து வற்சராசற்குப் புதல்வற்பேற்றை அறிவித்தனர். அதுகேட்டு மிகப் பெருமகிழ்ச்சி யடைந்த வற்சராசன் அத்தோழிமார்க்கு மிக்க விலை மதிப்புள்ள இரத்தினங்களை வழங்கினான்: பின்னர் விருப்பத்திற்கு மேற்பட்ட பொற்கொடைகளால் அந்தணர்களை மகிழ்வித்தான்.

அதன்பின், அரசியற் பெருந்திருவை எய்துதற்குரிய இலக்கணங்கள் அமையப்பெற்றதூஉம், காலைப் பொழுதிற்றோன்றிய இளங்கதிரவனால் அலர்த்தப்பட்ட தாமரைப் பூவைப்போலத் திகழ்கின்ற சிவந்த அதரங்களை யுடையதும், ஆகிய தன் குழந்தையைக் கண்டான். கண்டு உவாமதியைக்கண்ட பெருங்கடல்போலத் தன்னுள் அளவிறந்த மகிழ்ச்சியை அடைந்தான். பின்னர் சாந்திகரன் என்னும்பெயர்வாய்ந்த இவனுடைய புரோகிதன் புதல்வற்குச் சாதகன்மம் முதலிய கிரியைகள் அனைத்தையும் நிறைவேற்றினான். அப்பொழுது எதிர் பாராமலே அசரீரிச்சொல் "வேந்த! காமதேவன் கூறாக அவதரித்த நினது இப்புதல்வன் நரவாகனதத்தன் என்னும் பெயரினன் ஆவன். இவன் சின்னாளிலே வித்தியாதரர்களுக்குச் சக்கரவர்த்தியாவான்" என்றிவ்வாறு

உண்டாயிற்று. அப்பொழுது விண்ணுலகத்தினின்றும் பூமழை பொழிந்தது. தேவதுந்துபி வாச்சியத்தின் ஒலி கேட்கப்பட்டது. பின்னர் நகரத்து மாந்தர் அனைவரும் அரசனது புதல்வற்பேற்றுத் திருவிழாவைக் கொண்டாடினர்கள். அவ்வமயத்திற் கௌசாம்பிநகர முழுவதும் திருவிழாப் பொலிவுடையதாயிற்று வற்சராசன் ஆகாய வாணியாற் சொல்லப்பட்ட வண்ணம் இப்புதல்வற்கு நரவாகனதத்தன் என்றுபெயரிட்டான். நரவாகனதத்தன் முற்பக்கத்துத் திங்களஞ் செல்வன் கலைபோல மெல்ல மெல்ல வளர்ச்சியடைந்தான். அகாரணமாகப் பற்களின் றித்தோன்றும் அவன்சிரிப்புக்கள் வற்சராசனை ஆனந்த பரவசனாகச் செய்தன. எல்லாமக்கள் கண்களுக்கும் இன்பம் விளைவிக்கின்ற அப்புதல்வன் முழந்தாள்களாற் றவழ்தல் சாமந்த அரசர்களுடைய உள்ளங்களையும் உவகையுறச் செய்தது. பின்னர், தடைபட்டுத் ததும்பி வருகின்ற பொருள்விளக்கமில்லாத அப்புதல்வனுடைய மழலைச்சொற்களைக்கேட்டு வற்சராசன் பெரிதும் உள்ள மகிழ் பூத்தான். இதற்கிடையில் யௌகந்தராயணன் மருபூதி என்னும் பெயரினையுடைய புதல்வனையடைந்தான். உருமண்வான் அரிசிகன் எனப்பெயரிய மகனைப் பெற்றான். வசந்தகனுக்குத் தபந்தகன் என்னுங் குமாரன் உண்டாயினன். இத்தியகன் என்னும் பெயரினையுடைய வாயில்காப்போனுக்குக் கோமுகன் எனப் பெயரிய புதல்வன் உண்டாயினன். அதன்பின், ஓரமயம் நரவாகனதத்தற்குப் பகைவரிடத்தினின்றுந் தீங்கு விளை

யுங் கொலோவென்னும் ஐயத்தால் வற்சராசன் மிகவுங் கவற்சியடைந்தான். அதனையறிந்த யௌகந்தராயணன் அவ் உதயனனை மறைவிடத்தில் வைத்து, "தேவ! நின் புதல்வனாகிய நரவாகனதத்தனைப் பாதுகாத்தல் குறித்துச் சிறிதுங் கவலுதல்வேண்டா. பகவானாகிய அம்மையப்பர், இப்புதல்வன் எதிர்காலத்தில் வித்தியாதரச் சக்கரவர்த்தியாதலைத் திருவுளங்கொண்டு பிறப்பித்தார். இந்நிகழ்ச்சியையறிந்த வித்தியாதரர் சிலர் இப்புதல்வற்குத் தீங்கிழைப்பான் எண்ணி முயல்கின்றனர். ஆதலின், உண்மைக் கருணாநிதியாகிய அப்பகவான் தம் பகன் எனப் பெயரிய கணத்தலைவனை இப்புதல்வனது பாதுகாப்பு நிமித்தம் விடுத்துள்ளார். அத் தம்பகன் இப் புதல்வனைக் காத்துக்கொண்டு இவ்விடத்திலேயே பிறராற் காணப்படாமல் இருக்கின்றான். இச்செய்தியை ஓரமயம் நாரதமுனிவர் என்பால் வந்து தெரிவித்தனர்" என்றிவ்வாறு கூறினான். அதுகேட்ட வற்சராசன் கவலுதல் ஒழிந்தான்.

இங்ஙனம் உதயனனால் வளர்க்கப்பட்டுப் பூருவ பக்கத்துச் சந்திரகலைபோல மெல்லமெல்ல வளர்ச்சியெய்துகின்ற உறுப்புக்களையுடைய நரவாகனதத்தன் உரிய காலங்களில் சௌளம் உபநயனம் முதலிய கிரியைகள் செய்விக்கப் பெற்றுப் புனிதனாயினான். தன்னோடு ஒத்த பருவத்தினராகிய மந்திரி குமாரர்களோடு கூடி எல்லாக் கலைகளையும் பயின்றான். பணிவு முதலிய உயர் குணங்களால் மிகவும் பெருமையுற்று விளங்

கும் நரவாகனதத்தன் முறையே எல்லாக் கலைகளிலும் திறமை யெய்தினான். அதன்பின் பாலப்பருவங் கடந்த அந் நரவாகனதத்தற்கு மணஞ் செய்தற் குரிய காலம் வந்ததாக உதயனன் எண்ணினான்.

## வெண்பா.

எப்பொருளுந் தானா மிறைவன் றிருவருளா
னற்பொருளாஞ் சேய்மணியை நண்ணினான்—மெய்ப்
[பொருள்
கொள்ளு மறிஞனெனக் கொண்டான் பெருமகிழ்ச்சி
வள்ள லுதயனனா மன்.

---

# பதின்மூன்றும் வகுப்பு.

## (கலிங்க சேனையின் வரலாறு.)

விசும்பினை யளாவிய மேனில இல்லங்கள் சூழ்ந்த தக்கசிலை யெனப் பெயரிய நகரம் ஒன்றிருந்தது. அந் நகரின்கண், கலிங்கதத்தன் எனப்பெயரிய அரசன் ஒருவன் இருந்தான் அவற்குத் தாராதத்தை என்னும் பெயரினை யுடையாள் பெருந்தேவி யாயினாள். அவ் இருவர்க்கும் நெடுங்காலம் மகப்பே றிலதாயிற்று. அதனால் மிகவும் துன்ப மெய்திய கலிங்கதத்தன் அரிதிற் காலங் கழித்துக் கொண்டிருந்தான். இதற்கிடையில் உம்பருலகத்தில் ஒரு பெருந் திருவிழா நிகழ்ந்தது. அப்பொழுது அரமகளிர் அனைவரும் ஆடுதற்பொருட்டு ஒன்று கூடினர். அவ் அரமகளிருள் ஒருத்தியாகிய சுரபிநத்தை மாத்திரம் அங்கு வாராமல் தன் விருப்பின் வண்ணம் நந்தன வனத்தில் ஒரு வித்தியாதரனோடுகூடி இன்ப விளையாடல்களைச் செய்துகொண்டிருந்தாள். அதனையறிந்த தேவேந்திரன் அவளைத் "தீவினையாட்டி! நீ மனித உலகத்தை அடைவாயாக" என்று சபித்தான். அச்சாபத்தை யறிந்த அவள் விரைந்து வந்து தேவேந்திரனுடைய திருவடிகளில் வீழ்ந்து "தேவ! என் குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்" என்று வேண்டினாள். தேவேந்திரன் கருணையுடையனாய் "நீ ஒரு பெண்மகவை ஈன்றபின்

மீண்டும் இவ்வுலகை யடையக் கடவாய்" என்று அருள் செய்தான். அச்சுரபிதத்தை தாராதத்தையின் வயிற் றிற் கருவுருவாகப் புகுந்தாள்.

அதன் பின் ஒருநாள் நள்ளிரவில் தாராதத்தை விசும்பினின்றும் வீழ்ந்த ஒளிப் பிழம்பு தன் வயிற்றுட் புகுந்ததாகக் கனவுகண்டாள். காலைப் பொழுதில் விழித்து அக்கனவைத் தன் தலைவற்கு அறிவித்தாள். அவன் அக்கனவைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சி யெய்தினன். அப்பொழுதே தாராதத்தை கருத்தரித்தாள். பத்தாந் திங்களில் மின்னற் கொடி யை யொத்துத் திகழும் பெண் மகவை ஈன்றாள். கூதிர்க்காலத்துத் திங்கண்மண்டிலத்தைப் போல் மக்கள் எல்லோருடைய கண்களுக்கும் இன்பத்தைச் செய்கின்ற அப்பெண்மகவைக் கண்டு பெரிதும் இன்புற்ற கலிங்கதத்தன் கலிங்கசேனை யென்னும் பெயரையிட்டு அழைத்தான். முற்பக்கத்துத் திங்க ளுஞ் செல்வன் கலைபோல் நாடோறும் வளர்ச்சி யெய்து கின்ற அக்கலிங்கசேனை இல்லத்தின் முற்றங்களிலும் மேனிலங்களிலும் உய்யானங்களிலும் விளையாடல் புரிந்து முறையே பாலப் பருவங் கடக்கப் பெற்றாள்.

அதன்பின், ஒரமயம் விசும்பில் தெய்வ ஊர்தி யிற் போக்கு வரவு புரிகின்றவளும் மாயாசுரனுடைய மகளுமாகிய சோமப்பிரபை என்பாள் அரண்மனை யின் மேனிலத்தில் தோழிகளோடு விளையாடல் புரியும் கலிங்கசேனையைக் கண்டாள். அக்கலிங்க சேனையின்

தெய்விகத் தன்மை வாய்ந்த எழில் நலத்தைப் நோக்கிப் பின்வருமாறு சிந்திக்கலாயினள். "ஆ! இப்பெண்மணியின் எழில் நலம் இந்நிலவுலகத்தில் எய்தற்கரியது. இவள் தெய்வமகளோ! அன்றி நாககன்னிகையோ கண்ணெதிரிற் போந்த இலக்குமிதேவியோ! ஏதோ ஒரு சாபப் பிழையால் நிலவுலகத்தையடைந்த இவள் உறுதியாக ஒரு தெய்வப்பெண்ணாக இருத்தல்வேண்டும். இன்னும் இவளைப் பார்த்த அளவினானே என்னுள்ளம் மிகவும் இன்புறுகின்றதாகலின் இவள் முற்பிறப்பில் என் அன்பிற்குரிய தோழியாந் தன்மையையும் எய்தி யிருத்தல் கூடும். ஆதலின் இவளோடு நட்புரிமையை மேற்கொள்ளல் வேண்டும். விரைந்து இவள் பக்கல் அணுகுவேனாயின் இவள் அச்சம் எய்துவள்" என்றிவ்வாறு உள்ளத்திற்கருதி அச்சோமப் பிரபை மெல்ல மெல்ல விமானத்தினின்றும் இறங்கி மனிதப் பெண்ணுருவம் தாங்கிக் கலிங்கசேனையின் பக்கல் எய்தினாள். கலிங்க சேனையும் அச்சோமப்பிரபையைக் கண்டு, "ஆ! ஈதென்னே வியப்பு! இம்மாநுடப்பெண் இவ்விடத்தை எவ்வாறடைந்தாள்?" என்று கூறி விரைந்தெழுந்து எதிர்சென்று வருக வருக வென்று நீட்டிய கையினையுடையளாய் அவளைத் தழீஇக்கொண்டாள். பின்னர், தானே விரைந்தோடி இருக்கை கொணர்ந்தாள். அவளை இருக்கையிலிருத்தி அவளுடைய பெயர் இடம் முதலியவற்றை வினவினாள். அதன்பின் அவ்விருவரும் தம்முள் உரையாடினர் அதனால் அவ்விருவர்க்கும் நெருங்கிய

நட்புரிமை யுண்டாயிற்று. சோமப்பிரபை அவ்விடத்திற் சிறிதுநேரம் இருந்து "தோழீ! கலிங்கசேனே! என் இருப்பிடம் இங்கிருந்து அறுபதுயோசனை தூரத்திற் கப்பாலுள்ளது. கதிரவனும் அத்தகிரியை யடைகின்றான். ஆதலின் எனக்குவிடையருள்வாயாக" என்று கூறிவிட்டு எழுந்து விமானத்திலேறிப் போயினள்.

சோமப்பிரபை சென்ற வழியையே இமைத்தலில்லாத கண்களாற் பார்க்கின்ற கலிங்கசேனை விமானம் தன்கட்புலன் கடந்தமை யுணர்ந்து, "ஆ! தெய்வமகளோடு எனக்கு நட்புரிமையுண்டாயிற்றே ஈதென்னை வியப்பு!" என்று கூறி அவ்வியப்பினாற் பரவசமாயினள். அதன்பின் சோமப் பிரபையை நினைவுட்கொண்டே இரவு முழுதும் கழித்தாள். பிற்றைநாட் காலைப்பொழுதில் மீண்டும் சோமப்பிரபை கலிங்கசேனையின் பக்கலில் எய்தினள். எய்தி மரத்தான் ஆக்கப்பட்டனவும் வியக்கத்தக்கனவுமாகிய பற்பல பாவைகள் நிறைந்த பேழை ஒன்றனைக் கலிங்கசேனைக்குக் கொடுத்தாள். கலிங்கசேனை, "இப்பேழையில் யாதுளது?" என்று கேட்டாள். சோமப்பிரபை பேழையைத் திறந்து காட்டினள். அதன்கட் சில பாவைகள் மலர்களான் மாலை தொடுத்தன; சில பாவைகள் பானீயங் கொணர்ந்தன; சில ஆடின; சில பாடின; சில வீணை வாசித்தன. இவ்வாறு பற்பல விதங்களாக அமைந்த பாவைகளைக்கண்டு கலிங்கசேனை தன் மனத்

தில் அளவிடற்கரிய ஆனந்தம் எய்தினுள். பின்னர்ச் சோமப்பிரபை கலிங்க சேனைக்குத் தெரிவித்து விட்டுத் தன் இருப்பிடத்தைக் குறித்துப் போயினுள். இவ்வாறு சோமப்பிரபை மீண்டுமீண்டுங் கலிங்க சேனையின் பக்கல் போக்கு வரவு புரிபவளாயினுள்.

பின் ஓரமயம் கலிங்கசேனை தன்பால் எய்திய சோமப்பிரபையை நோக்கி, "தோழீ! என்னுள்ளத் தோடொத்த நின்பால் ஒரு மறைபொருளைப் பற்றித் தெரிவித்துக் கொள்ளுதற்கு விரும்புகின்றேன். மணஞ் செய்தற்குரிய பருவம் வாய்ந்த என்னை அரசர் பலர் விரும்புகின்றனர். தந்தையோ என்னைச் சிராவத்தி என்னும் நாட்டின் தலைவனுகிய பிரசேனசித்து என்னும் பெயரினையுடைய அரசற்குக் கொடுக்க விரும்புகின்றூர். இஃது என் அன்னையாற் கூறப்பட்டது; அப்பிரசேனசித்துவை நீ முன்னர்க் கண்டதுண்டா? அங்ஙனமாயிற் கூறுவாயாக. அவன் எத்தகையன்? அவன் உருவம் எத்தகைத்து?" என்றிவ்வாறு கூறினுள். அதனைக்கேட்ட சோமப்பிரபை கைகளாற் செவியைப் பொத்திக்கொண்டு "தீவினை யொழிக; அமங்கலம் நீங்குக" என்று கூறிக் கண்களினின்றும் மிகவும் நீரை ஒழுக்கினுள். கலிங்கசேனை அவளை நோக்கி, "இங்ஙனம் துன்புறுதற்குக் காரணம் என்னை?" என்று கேட்டாள். சோமப்பிரபை கலிங்கசேனையை நோக்கி, "தோழீ! மணமகன் இலக்கணங்களாக ஆராயப்படுவன பருவம், குலம், சீலம், கல்வி, உருவம்

என்னும் இவை முதலிய பலவாம். அவற்றுட் பருவமே சிறந்ததாகும். சிராவத்திநாட்டின் தலைவனாகிய பிரசேனசித்து என்பான் குலம், சீலம், கல்வி, உருவம் என்னும் இவைகள் நிரம்பப் பெற்றவனாயினும் யாண்டுமுதிர்ந்தவனாவான். யாண்டு முதிர்ந்தவன்பாற் குலமுதலியவற்றால் எய்தக்கடவ பயன் யாதுளது? ஆதலின், அவன் நினக்கு ஒத்த மணமகன் ஆகான். கௌசாம்பி என்னும் தலைநகரில் வாழ்கின்ற வற்சதேயத்தரசனாகிய உதயனனே நினக்கியைந்த மணமகனாவான். அவனும் நின்னை மிக்க வனப்புடையவள் என்று கேட்டிருக்கின்றான். ஆதலின் நின்பாற் சிறந்த காதற்கிழமை பூண்டுளான். அங்ஙனமாயினும் அவற்கு வாசவதத்தை யென்னும் பெயரினையுடைய பெருந்தேவி ஒருத்தி யுள்ளாள். அவள்பால் அவன் மிகப் பெருங்காதலும் மதிப்பும் உடையான். அவட்கு மனக்கலக்கம் உண்டாகுமென்னும் அச்சத்தால் நின்னை வேண்டுகின்றானல்லன்" என்றிவ்வாறு கூறினாள்.

இங்ஙனங் கூறக்கேட்ட கலிங்கசேனை சோமப்பிரபையை நோக்கி, "என் அன்பிற்குரிய தோழீ! வற்ச தேயத்தரசன் என்னை மணஞ்செய்து கோடற்குரிய உபாயத்தை ஆராய்தல் வேண்டும். அன்றி, வாணாசுரன் புதல்வியாகிய உடையின் பொருட்டு அநிருத்தனைச் சித்திரலேகை கொணர்ந்தாங்கு நீயே அவ் உதயனனை இங்குக்கொண்டுவரல் வேண்டும்" என்றிவ்வாறு கூறினாள். பின்னர்ச் சோமப்பிரபை,

"அசுரப் பெண்ணாகிய சித்திரலேகை என்பாள் தனக்கு உரியனல்லாத மற்றோராடவனைத் தீண்டுதல் முதலிய செயல்களைச் செய்தாள். யான் இத்தகைய செயலை எங்ஙனம் செய்வல்? இனி ஒன்று செய்வேன். நீ எனது இவ்விமானத்தில் ஏறிக்கொள்ளல் வேண்டும். முதலிற் பிரசேனசித்துவை நினக்குக் காட்டி அதன்பின் வற்சதேயத்தரசன் பக்கல் நின்னைச்சேர்ப்பேன். ஆதலின், ஆடை அணிகலன்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு புறப்படுக" என்று சொல்லினாள். கலிங்கசேனை "அங்ஙனமேயாக" வென்றுடன்பட்டுத் தாய் தந்தையர்க்குங் கூறாமல், குலவொழுக்கத்தையும் பொருட்படுத்தாமல், உலகங் கூறும் பழிச்சொல்லையும் புறக்கணித்து ஆடை அணிகலன் பொருள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு சோமப்பிரபையோடு விமானத்திலேறிப் புறப்பட்டாள். காமநோய் வயப்பட்டார் வரக்கடவ நன்மையையாதல் தீமையையாதல் நோக்குவாரல்லர். தாம் புரியுஞ்செயல் நல்லதாயினும் தீயதாயினும் அதனை ஆராயாமல் துணிந்துசெயும் இயல்பினரன்றே!

அதன்பின், சோமப்பிரபை கலிங்கசேனையை விமானத்திலேற்றிக் கொண்டு சிராவத்தி நாட்டை அடைந்தாள். அங்கே நரை திரைமிக்க உடலினையுடைய பிரசேனசித்து என்னும் அரசனைக் காட்டினாள். அதன்பின் கௌசாம்பி நகரத்தை யடைந்து அந்நகரத்தின் புறத்தேயுள்ள பூஞ்சோலையில் விளையாடிக்கொண்டிருக்கும் காமனையொத்த உருவம் வாய்ந்த

வற்சதேயத்தரசனைக் காட்டினாள். அவ் உதயனனையே நெடு நேரம் இமைத்தலில்லாத கண்களாற் பார்க்கின்ற கலிங்கசேனை, "தோழீ! சோமப்பிரபே! இப்பொழுதே என்னை இவனோடு கூட்டுவிப்பாயாக. யான் இவனை யின்றி ஒரு கணப்பொழுதேனும் உயிர் வாழேன்" என்று கூறினாள். சோமப்பிரபை, "தோழீ! இப்பொழுது தீ நிமித்தங்கள் பல காணப்படுகின்றன. ஆதலின், இப் பூஞ்சோலையிலேயே பிறர் அறியாவாறு சிறிது நேரம் இருப்பாயாக. யான் எனது இருப்பிடம் எய்தி விரைந்து திரும்பி வருவேன்" என்று கூறிப் போயினாள். வற்சதேயத்தரசன் அப் பூஞ்சோலைக் கண்ணே நெடுநேரம் விளையாடல் செய்து பின் ஏவலாளரோடு தன் இருப்பிடம் எய்தினான். பின்னர்க் கலிங்கசேனை சகுன நிலையுணர்ந்த சோமப்பிரபையையால் தடுக்கப்பட்டும் காமவெறியின் இறுதி எல்லைக்கண் இவர்ந்து வற்சநாயகன்பால் யாண்டு முதிர்ந்த தூதன் ஒருவனை ஏவினாள். அத்தூதன் வாயில் காப்பவனால் விடப்பட்டு உட்புகுந்து வற்சதேயத்தரசனை வணங்கி, "தேவ! தக்கசிலை என்னும் நகரத்திலுள்ள கலிங்க தத்தன் என்னும் அரசற்குக் கலிங்கசேனை என்னும் புதல்வி ஒருத்தி யுள்ளாள். அவள் மங்கைப் பருவமுடையளாய் அரசர் பலரால் வேண்டப்பட்டும் நின்னையே தனக்கு ஒத்த மணமகனாகத் துணிந்துளாள். அன்னாள் இப்பொழுது சுற்றத்தார் எல்லோரையும் விட்டுத் தன் அன்புரிமைத் தோழியும் மாயாசுரன்

மகளும் நளகூபரன் மனைவியுமாகிய சோமப்பிரபை யோடு கூடி விமானத்திலேறி நின் உய்யான வனத் தில் வந்திருக்கின்றாள், இந் நிகழ்ச்சியை யறிவித்தற் பொருட்டுத் தேவரீர் பக்கல் அவள் என்னை விடுத் தாள். ஆதலின் அவளை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். திங்களும் நிலவும் போன்ற நுங்கள் இருவீரது சேர்க் கை மிகவும் சிறந்து விளங்கும்" என்றிவ்வாறு தெரி வித்தான். இங்ஙனங் கூறிய யாண்டு முதிர்ந்த தூத னுடைய சொற்களை வற்சதேயத்தரசன் கேட்டு மிக்க மகிழ்ச்சியுடையனும், "அங்ஙனமேயாக" என்று அத்தூதனுடைய மொழிகளை மகிழ்ந்தேற்று ஆடை அணிகலன் முதலிய பரிசில்களால் அவனை உவப்பித்தான். பின்னர் அப்பொழுதே அமைச் சருள் தலைவனுகிய யௌகந்தராயணனை யழைத்து எல்லாவற்றையும் அறிவித்தான். அவ் அமைச்சன் அரசற்கு நலத்தைை விருப்புமின்றவனுய பின் வருமாறு சிறிது நேரம் சிந்திக்கலாயினுன்.

"கலிங்கசேனையோ உருவச்சிறப்பாற் புகழ்வாய்ந் தவள். மூவுலகத்திலும் அவளுக்கு ஒப்பான அழகு வாய்ந்தவள் வேறொருத்தியு மிலள். அமரரும் அவளை யடைய விரும்புகின்றனர். நம் வற்சதேயத்தரசன் அவளை மணம் புரிந்து கொள்ளுவானுயின், பிற வெல்லா வற்றையும் துறந்து அவளிடத்திலேயே காதலு டையனுவன். அங்ஙனமாயின் வாசவதத்தை நெடு நாள் உயிர் தாங்கியிராள். புதல்வனுகிய நரவாகன தத்தற்கும் தீங்கு விளையும். பதுமாவதியின் வாழ்க்

மையும் ஐயப்பாட்டிற் குரியதாகும். சண்டமகாசேன னும் மகத தேயத்தரசனும் தம் புதல்வியர்க்கு நேருங் கேட்டினால் தம் உயிரை விடுவர். அன்றி வற்சராசன் மாட்டுப் பகைமை மேற்கொள்வர். ஆகவே கலிங்க சேனையின் மணத்தால் எல்லோர்க்கும் அழிவுண்டாம். அவள் மன்றலை அறவே விலக்குதலும் பொருத்த மன்று. அங்ஙனம் விலக்கப்படின் அரசற்குக் காம வேதனை மிகும். ஆதலின் காலந் தாழ்த்தலே இப் பொழுது செய்யத்தக்கதாகும். என்றிவை முதலிய வற்றைப் பல படியாக ஆராய்ந்து யௌகந்தராயணன் வற்சராசனை நோக்கி, "அரசே! கலிங்கசேனை நின்னை யடையத் தானே வேண்டுகின்றமையால் நீ பாக்கியவா னாகின்றாய். கலிங்கதத்தனும் நினக்கு நண்பனாவான். ஆதலின், நன் முகூர்த்தத்தில் கலிங்க சேனையின் மணம் நிறைவேற்றத்தக்கது. விவாகத்திற் குரிய சிறந்த இலக்கினத்தைச் சோதிடர்களைக் கேட்டுத் தீர்மானிப்பேன். அக்கலிங்க சேனையின் செல்வச் சிறப்பிற் கேற்றவாறு இருப்பிடத்தையும் மிகவுயர்ந்த ஆடை அணிகலன்களையும் அளித்தல் வேண்டும். அவட்குப் பணிசெய்தற் பொருட்டுப் பணிப்பெண் களையும் ஏவலாளரையும் நியமித்தல் வேண்டும்" என் றிவ்வாறு கூறினான். வற்சராசனும் யௌகந்தராய ணன் கூறியாங்குச் செய்தான். விரைவில் தன் விருப் பம் நிறைவேறிவிடுமென்று மகிழ்கூர்ந்தான்.

யௌகந்தராயணன் சோதிடர் எல்லோரையும் அழைத்து, "வற்சராசனது நலத்தின்பொருட்டு

நீவிர் துணைசெய்தல் வேண்டும். அவன் 'கலிங்க சேனையை மணஞ்செய்து கோடற்கேற்ற நல்ல இலக்கினத்தைத் துணிவீர்களாக' என்று நும்மை நோக்கிக் கூறுவான். அப்பொழுது நீவிர், 'மணத்திற்கியைந்த நன் முகூர்த்தம் ஆறு திங்களுக்கிடையில் இல்லை' என்று கூறல் வேண்டும். இன்னோன்ன பொய்யுரையால் தீங்குநேருமென் றெண்ணவேண்டா. "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்பது பொய்யில் புலவர் பொருளுரையாகும்" என்றிவ்வாறு கூறினன். அக் கணிகளுநம் அங்ஙனமேயாக வென்றுடன்பட்டனர். அதன்பின், பிற்றை நாளில் யௌகந்தராயணன் அரசவைக்கட் சென்று அரசனுடைய தூதர்களால் ஒளிநூல் வல்லார் எல்லோரையும் அழைப்பித்தான். அவரும் வந்தனர். யௌகந்தராயணன் அரசன் முன்னிலையில் அவர்களை நோக்கி, "விவாக நற்செயற்கு ஏற்ற முகூர்த்தத்தை விரைவிற் பாருங்கள்" என்றிங்ஙனங் கூறினன். அச் சோதிடர் முன்னரே செய்துகொள்ளப்பட்ட சங்கேதத்தை மனதில் வைத்துக்கொண்டு, "ஆறுதிங்கள் சென்றபின் ஏழாம் திங்களில் நல்ல இலக்கினங் காணப் படுகின்றது" என்றிங்ஙனங் கூறினர்.

அதுகேட்டு யௌகந்தராயணன் பொய்ம்மையாகச் சினந்து, "அறிவிலாத இவர்க்கு ஒன்றும் தெரியாது. மற்றொரு பெரிய பண்டிதன் இருக்கின்றான். எவன் தங்களால் அடிக்கடி பெருமைப் படுத்தப்

பட்டுளானே அவன் இப்பொழுது இங்கு வரவில்லை" என்றிங்ஙனஞ் சொல்லினன். அரசனும், "அங்ஙனமேயாக" வெனத் தூதர்களால் அப் பண்டிதனை அழைப்பித்தான். அப்பண்டிதனும் யௌகந்தராயணனால் முன்னமே சங்கேதஞ் செய்யப் பட்டவனாதலின் அங்ஙனமே கூறினன். அதன்பின் யௌகந்தராயணன் மனவருத்த முடையவன் போலாகி, "தேவ! இனி இதன்கட் செயற்பாலது யாது?" என்று கேட்டான். அரசன் கலிங்கசேனையின் கருத்தென்னை என்று அறிதல் வேண்டும் என்று சொல்லினன். யௌகந்தராயணன், "அங்ஙனமேயாக" வென்று கூறி இரண்டு சோதிடர்களை யழைத்துக்கொண்டு கலிங்கசேனையின் பக்கல் அடைந்தான். அடைந்து அவளை நோக்கி, "தேவி! வற்சராசன் நின்னை மணஞ் செய்து கோடற்குப் பரபரப்புடையனாக இருக்கின்றான். நல்ல இலக்கினத்தைத் துணிதற் பொருட்டு இரண்டு சோதிடர்களை யழைத்து வந்தேன். நின் பிறந்த நாளைக் கூறுவாயாக" என்றிவ்வாறு கூறினன். அவளுடைய ஏவன் மகளிர் பிறந்த நாளைக் கூறினர். அவ் இரு கணிகளும் பொய்ம்மையாகக் கணனஞ் செய்து முன்போலவே கூறினர். அது கேட்டுக் கலிங்கசேனை கவலைக்கடலுண் மூழ்கினள். அப்பொழுது அவளுடைய விசுவாசிக தூதன், "நல்ல இலக்கினங் காண்டல் இன்றியமையாததொன்றே. காலமே நன்மை தீமை எல்லாவற்றிற்குங் காரணமாகும். நன் முகூர்த்தமே மணமக்களுக்கு வருங்

காலத்தில் நலந்தருவதாகும். அஃது அணிமையிலாயினுமாக; சேய்மையிலாயினுமாக; எவ்வாற்றானும் எதிர்பார்க்கத் தக்கதே" என்றிங்ஙனங் கூறினான். யௌகந்தராயணனும், "தேவி! விலக்கப்பட்ட நாட்களில் நற்கன்மங்கள் செய்தலாகாது. அங்ஙனஞ் செய்யப்படின், அவை பின்னர்ப் பெருந் துன்பத்தை விளைவிப்பனவாம். ஆதலின் நல்லிலக்கினத்தை யாராய்ந்து காண்டலே நலம்" என்று கூறினான். அது கேட்டுக் கலிங்கசேனை, "காலம் விலக்கற் கரியது" என்று துணிந்து, "நீவிர் எல்லீரும் எங்ஙனம் அறிகின்றீர்களோ அங்ஙனமே செய்வீர்களாக" என்று சொல்லினாள். யௌகந்தராயணன் வற்சராசன் பக்கல் அணுகிக் காலத்தை எதிர்பார்த்தலே கலிங்கசேனையின் கருத்தென்பதை அவற்கு எடுத்துக் கூறிவிட்டுத் தன் இல்லத்தை யடைந்தான்.

இங்ஙனம் தன் அறிவுவன்மையால் கலிங்கசேனையின் மன்றற்கு இடையூறு விளைத்து எஞ்சிய காரியத்தை நிறைவேற்றுதற்பொருட்டுத் தன் நட்போனாகிய யோகேசுவரன் என்னும் பெயரினையுடைய பிரமராக்கதனை நினைந்தான். நினைத்த அளவில் நெருங்கி வந்த அவ் யோகேசுவரன் யௌகந்தராயணனது முன்னிலையில் நின்று, "என்னால் ஆகவேண்டியகாரியம் யாது?" என்று கேட்டான். யௌகந்தராயணன், வற்சராசற்குக் கேடு விளைவிக்கத்தக்க கலிங்கசேனையைப் பற்றிய நிகழ்ச்சிகளெல்லாவற்றையும் அவற்கு அறிவித்து மீண்டும், "நண்ப! கலிங்கசேனையின் விவாக நிகழ்ச்சி

யில் யான் காலந்தாழ்த்தலைச் செய்தேன். இனிக் கலிங்கசேனையின் பக்கலில் நீ மறைவாக இருத்தல் வேண்டும். அவளது ஒழுக்கத்தையும் திறமையுடன் ஆராய்தல் வேண்டும். அவள் மூவுலகத்திலும் எய்தற்கரிய எழில் நலத்தோடு விளங்குகின்றாள். அவளைச் சித்தர்களும் வித்தியாதரர்களும் நிச்சயமாக விரும்புவர். தாம் விரும்பியவாறு உருக்கொள்ளும் இயல்பினராகிய அவர்கள் வேற்றுருக் கொண்டு அவளோடு கூடுவர். அதனையும் நீ விழிப்புடையனாயிருந்து அறிதல் வேண்டும். வேற்றுருக்கொள்வோர் துயிலுங்கால் தமக்குரிய இயற்கை யுருவத்தையே எய்துவர். நீ அவளுடைய ஒழுக்கம் எல்லாவற்றையும் சோர்விலனாயிருந்து அறிதல் வேண்டும். அங்ஙனம் அறிந்தவற்றை அறிந்த வண்ணம் நமக்கு அறிவித்தல் வேண்டும். அதனால் வற்சராசற்கு அவள்பால் விருப்பமின்மையை விளைவித்தல் வேண்டும்" என்றிவ்வாறு கூறினான்.

அது கேட்டுப் பிரமராக்கதன், "இந்துணைச் சிரமம் எற்றிற்கு? ஒழுக்க நெறியின் வழுவிய அவளை உடனே கொன்று விடுவேன்" என்று கூறினான். யௌகந்தராயணன், "அங்ஙனஞ் செய்தலாகாது; பெரும் பாவம் விளையும்" என்று மறுத்துரைத்தான். யோகேசுவரன், "அங்ஙனமேயாக" வென்று அவன் சொல்லை யுடன்பட்டு மறைந்தொழுகுதற்குரிய விச்சையால் மறைந்து கலிங்கசேனையின் இல்லத்துட்

புகுந்தான். புகுந்து அவளையே இமைத்தலில்லாத கண்களாற் பார்த்துக்கொண்டிருந்தான். இதற்கிடையில் வாசவதத்தை கலிங்கசேனையின்மாட்டு அரசன் மேற்கொண்ட காதற்கிழமையை யறிந்து மிகவும் மனக்கலக்கமுற்றாள். யௌகந்தராயணன் அவ்வாசவதத்தைபின்பாற் சென்று, "அரசி! இந்நிகழ்ச்சியை முன்னிட்டுச் சிறிதும் மனக்கலக்க முறவேண்டா. என்னுயிருள்ளகாலம் வரையும் பதுமாவதியை யன்றி வேறொருத்தி நினக்குச் சபத்தினி யாகாள். இஃது உண்மை. ஆயினும் நின்னாற் செய்யத்தக்க ஒரு காரியத்தைப்பற்றிக் கூறுவேன். அதனை அங்கீகரிப்பாயாக. அரசன் கலிங்கசேனையின்பால் தனக்குள்ள அவாவை நின்பால் தெரிவிப்பான். அப்பொழுது அவன் விருப்பத்திற்கு இயைந்தவள் போலாகி அவன்பால், 'ஐய! இது தக்கதே. கலிங்கதத்தனது இராச்சியமும் நின் கைவயப்படும். ஆதலின், அவசியம் கலிங்கசேனையை மணஞ் செய்துகொள்ளல் வேண்டும்' என்றிங்ஙனங் கூறுவாயாக. இங்ஙனங் கூறின் அவன் நின்பால் முன்னையினும் மிகுதியான மதிப்பு வைத்தொழுகுவான். தன் விருப்பத்திற்கு இடையூறு இல்லையென்று கருதிக் கலிங்கசேனையின் மன்றலில் தளர்ந்த முயற்சி யுடையவனாவான். அன்றித் தன்விருப்பம் தடைப்படுமாயின் அடையவேண்டுமென்னும் அவா மிகுதி யுடையனாவான். பதுமாவதிக்கும் இச்செய்தியைத் தெரிவிப்பாயாக" என்றிவ்

வாறு கூறித் தேற்றினன். வாசவதத்தையும், "அங்ஙனமேயாக" வென்றுடன்பட்டாள்.

அதன்பின் ஓரமயம் சோமப்பிரபை கலிங்க சேனையின் பக்கல் அடைந்தாள். அப்பொழுது தன் சொல்லைக் கடந்து வற்சராசனைக் குறித்துத் தூது போக்கியதும், சோதிடர்களால் ஆறு திங்களின் பின் விவாக முகூர்த்தம் துணிந்ததும் அறிந்து மிகவும் துன்பமுறலாய்ப் பின் வருமாறு கூறுவாள். "தோழி! சபத்தினிகள் பொய்ம்மையான குற்றங்களை நின்பால் ஏற்றிடுவர். விவாக முகூர்த்தம் பலநாட்களின் பின் குறிக்கப்பட்டுளது. தேவர்களும் நின்னை மணஞ்செய்து கோடற்கு விரும்புகின்றனர். ஆதலின், எவ்வாற்றானும் தற்காப்புச் செய்துகொள்ளல் வேண்டும். இக்காரியத்தில் நீ விழிப்புடையளாக இருத்தல் வேண்டும். இனி யானும் கணவன் இல்லத்தில் வாழும் நின்னை அடிக்கடி வந்து காண்டற்கியலாது. இப்பொழுது என் பதியின் அநுமதியை மிக முயன்று பெற்று இங்கு வந்தேன். இங்கு என்னாலாக வேண்டியது ஒரு சிறிதும் இன்று. ஆதலின், என் காந்தன் பக்கல் எய்துவேன் காரியங்களை முன்னிட்டு நின்னைப் பின் எதிர்ப்படுவேன். எவ்வாற்றானும் நின்னைக் காத்துக் கொள்வாயாக" என்று கூறிப் போயினாள். அதன்பின் வற்சராசன் கலிங்கசேனையின்பாற் பதிந்த காதற் பெருக்கினையுடைய தன் மனத்திற்கு ஆறுதலாகிய மகிழ்ச்சியை யாண்டும் பெறாதவனாய் வாசவ

தத்தையின் இல்லத்தை யடைந்தான். முன்னமே யௌகந்தராயணனாற் கூறப்பட்ட செய்திகளை மனத்தில் தாங்கியிருக்கும் அவ்வாசவதத்தை அரசனை முன்னையினும் மிகுதியான அன்போடு உபசரித்தாள். அதனைக் கண்டு அரசன் இவள் கலிங்கசேனையைப் பற்றிய நிகழ்ச்சிகளை அறியாதவள்போற் காணப்படுகின்றாள் என்றெண்ணி அந்நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறினான்.

அதுகேட்ட வாசவதத்தை முன்னையினும் மிகுதியான முகமலர்ச்சியோடு விளங்குகின்றவளாய், "ஆ! ஆ! அரசர் பெருமானுக்கு எதிர்பாராமல் நேர்ந்த செல்வ வரிசைகள் என்னே! இக் கலிங்கசேனையின் மன்றலாற் கலிங்கதத்தனும் நினக்கு நண்பனாவான். ஆதலின், கலிங்கசேனையின் மணம் எவ்வாற்றானும் விலக்கத்தக்கதன்றாம்" என்றிங்ஙனங் கூறினாள். அதுகேட்ட உதயனன் மிகவும் வியப்புடையனாய் மனத்தின்கட் பின்வருமாறு சிந்திக்கலாயினான். "ஆ! இவ்வாசவதத்தை மிகப்பெரியவள்; பதுமாவதியை யொப்பக் கலிங்கசேனையையும் சபத்தினியாக எண்ணுகின்றாள்; இவளுக்கு வேண்டாததொன்று எவ்வாற்றானுஞ் செய்யத் தக்கதன்று. இவளது பெருந்தன்மையை நினையுங்கால் கலிங்கசேனையின் விவாகத்தில் என் மனம் செல்லவில்லை" என்று இவ்வாறு நினைந்து வாசவதத்தைக்கு அறிவித்துத் தன் இல்லத்தை யடைந்தான். அதன்பின்

மற்றை நாளில் பதுமாவதியின் இல்லம் எய்தினான். அவளும் வாசவதத்தையினால் முன்னரே இன்னது செயற்பாலது என்று அறிவிக்கப்பட்டவளாதலின் அங்ஙனமே அரசனை மிக்க சிறப்போடு உபசரித்தாள். இங்ஙனம் தேவிமார் இருவருடைய உள்ள நிகழ்ச்சிகளும் ஒன்றுபட்டிருத்தலை வற்சராசன் உணர்ந்து ஐய மேற்கொண்டு யௌகந்தராயணனை அழைத்து அவன் பால் எல்லாவற்றையும் அறிவித்தான். பேரறிவுடைய அவ் யௌகந்தராயணன் கலிங்கசேனையின் மணமாகிய தீச்செயலினின்றும் அரசனை மீட்டற்கு இதுதான் சமயமென்றெண்ணி, "தேவ! யான் தேவிமாரின் கருத்துக்களை அறிவேன். அவர்கள் கலிங்கசேனையின் மன்றல் நிகழுமாயின் நிச்சயமாக உயிரைத் துரும்பெனமதித்து ஒழித்து விடுவர். நேர்மையான நெஞ்சத்தையும் உயர்ந்த குணஞ் செயல்களையுமுடைய கற்புடை மகளிர் சபத்தினி களாலாம் துன்பத்தை நெடுங்காலம் அநுபவிப்பாரல்லர். ஆதலின் கலிங்கசேனையின் மணம் நிறைவேறுமாயின் தேவி வாசவதத்தை நிச்சயமாக உயிரைப் போக்குவாள். பதுமாவதியும் அக்கதியையே யடைவாள். அதன்பின் குமாரன் நரவாகனதத்தனும் எங்ஙனம் உயிர் வாழ்வான்? மாமன்மார் மைத்துனர் முதலிய எல்லா உறவினரும் சினமுடையராவார். ஆதலின் கலிங்கசேனையின் மன்றலால் மிகப்பெருங்கேடு உண்டாகும்" என்றிவ்வாறு கூறினான். யௌகந்தராயணன் கூறிய இச்சொற்களைக் கேட்டு வற்சராசன்

மனத்தில் விவேகம் தோன்றப்பெற்றவனாய், "அமைச்ச! நின்னாற் கூறப்பட்டன வெல்லாம் உண்மையே. கலிங்கசேனையின் மணத்தால் எனக்கு விளையும் பயன் யாதுளது? இந் நிகழ்ச்சியில் தெய்வபயத்தாற் சோதிடர்கள் காலத்தாழ்வு செய்தனர். ஆதலின் சுயம்வரத்தின் பொருட்டுக் கலிங்கசேனை வந்தவளாயினும் அவளை மணஞ்செய்து கொள்ளேன்" என்றிவ்வாறு கூறினான். அதன்பின் யௌகந்தராயணன் தன் நீதிப்பிரயோகம் பலித்ததுகண்டு மனத்தில் அளவுகடந்த உவகைமேற்கொண்டு அரசற்கு அறிவித்துத் தன் இல்லம் எய்தினான். பின்னர் அரசன் வாசவதத்தையின் மனைக்கட் சென்றான். அவள் இவ்வெல்லாம் யௌகந்தராயணனது சூழ்ச்சித் திறனென்று அரசற்குக் கூறினாள். அதனைக் கேட்ட அரசன் அவ்வமைச்சனது அறிவின் திறத்தைப் பலவாறு புகழ்ந்துரைத்தான்.

இஃதிங்ஙனமாகக் கலிங்கசேனையின் உருவம் அழகு முதலியவற்றைக்கண்டு அவள்பால் வித்தியாதரர் பலர் அவாவுடையராயினர். அவருள், மதனவேகன் என்னும் பெயரினையுடைய வித்தியாதரன் ஒருவன் கலிங்கசேனையைப் பெறுதற்பொருட்டுத் தவம்புரிந்து பகவானாகிய உமாகாந்தனை வழிபட்டான். அப் பெருமான் அங்ஙனமே வரங்கொடுத்தார். அங்ஙனம் வரம் பெற்றும் அக் கலிங்கசேனை வற்சராசன்பால் ஈடுபட்ட மனத்தினை யுடையளாய், அவனது நகர்ப்புறத்துப்

பூஞ்சோலைக் கண்ணே தங்கி இருத்தலைக்கண்டு மிகவும் வருத்தமுடையனாயினான்; எப்பொழுதும் அவளைப் பெறுதற்குரிய உபாயத்தையே சிந்தித்துக்கொண்டிருந் தான். ஒரு நாள் இரவில் மதனவேகன் கலிங்கசேனை யிருக்கும் இல்லத்தின் மேற்புறத்தே சுற்றித் திரிந் தான். அப்பொழுது பகவானாகிய உமாகாந்தன் அரு ளிய விச்சையினால் வற்சராசனைப்போல் உருக்கொண்டு அவ் உருவத்தோடு கலிங்கசேனையின் இல்லத்துட் புகுந்தான். அவனை வாயில் காப்போர் கண்டு இவன் வற்சராசன் என்றெண்ணி வணக்கஞ்செய்து கைகூப்பி நின்றனர். கலிங்கசேனை இவனைக்கண்ட அளவில் நடுக்க மும் நாணமும் உடையளாய் எழுந்தாள். அதன்பின் மதனவேகன் பலவகை இன்சொற்களால் அவளை நம்பிக் கையுறச் செய்து காந்தருவ முறைமையால் மணந்தான். யோகேசுவரனும் இவன் வற்சராசனே யாவன் என் றெண்ணி யௌகந்தராயணன்பாற் சென்று அறிவித் தான். யௌகந்தராயணன் அவ் யோகேசுவரனை நோக்கி, "வாசவதத்தையின் இல்லத்தில் உதயனன் இருக்கின் றான் என்றாதல், இல்லையென்றாதல் மறைந்து காணக் கடவை" என்று கட்டளையிட்டான். யோகேசுவரனும் அங்ஙனமே வாசவதத்தையின் இல்லத்தையடைந்து அங்குக் கட்டிலின்கட் படுத்திருக்கின்ற வற்சராசனைக் கண்டான். கண்டு யௌகந்தராயணற்குச் சொல்லினான். யௌகந்தராயணன் யோகேசுவரனை நோக்கி விரைந்து கலிங்கசேனையின் இல்லத்தையடைக. கலிங்கசேனையை

விரும்பி எய்திய அக்காமுகன் யாவனென்பதை அவன் துயிலுங்கால் அறிவாயாக என்று கட்டளையிட்டான். யோகேசுவரன் அங்ஙனமே கலிங்கசேனையின் இல்லத்தை யடைந்தான்.

அவ்வில்லத்தின்கண் நள்ளிரவில் நன்ருக உறங்கும் கலிங்கசேனையோடு துயில்கின்றவனும், தன் இயற்கையுருவம் பொருந்தப் பெற்றவனுமாகிய மதனவேகனைக் கண்டான். பின்னர் உடனே யௌகந்தராயணன்பாற் சென்று, "அமைச்சர் பெரும! ஆ! நின் நுண்ணறிவின் மாட்சி என்னே! எம்மனோராற் காண்டற்கரிய பொருளையும் நீ எளிதிற் காண்கின்ருய். நின்னை அமைச்சனுகப் பெற்றமையால் வற்சராசன் எவ்வாற்ருனும் பாக்கியவானுகின்ருன். நின்னுல் யாது எவ்வாறு எண்ணப் பட்டதோ அஃது அத்தகையதே. மதனவேகன் என்னும் பெயரினையுடைய வித்தியாதரன் வற்சராசனது உருவத்தைத் தாங்கிக் கலிங்கசேனையோடு கூடி இன்புறுகின்ருன்" என்றிவ்வாறு தெரிவித்தான். இங்ஙனங் கூறிய யோகேசுவரற்கு அவன் விரும்பிய இடத்தை எய்தும்படி யௌகந்தராயணன் கட்டளையிட்டான். அவனும் யௌகந்தராயணனை வணங்கிப் போயினுன்.

அதன்பின், காலைப்பொழுதில் யௌகந்தராயணன் வற்சராசனைக் காண்டற்குச் சென்ருன். அங்கு

உரையாடிக் கொண்டிருக்குங்கால், "அரசர்பெரும! இக்கலிங்கசேனை அன்னிய புருடனோடு சேர்க்கையை மேற்கொண்டமையால் நின் கையால் தீண்டுதற்குறியளா காள்" என்று கூறினான். அதுகேட்டு அரசன், "குல மகள் இங்ஙனந் தகாதசெயலை எவ்வாறு செய்வள்" என் றான். யௌகந்தராயணன், இன்றிரவிலேயே காட்சி யளவையில் வைத்து நினக்கு இதனைக் காட்டுவேன்" என்று மறுமொழி கூறினான். வியப்புமிக்க மனத்தினை யுடைய வற்சராசன் அன்றிரவிலேயே யௌகந்தராயண னோடு கலிங்கசேனையின் இல்லம் எய்தினான். அவ் வில் லத்தினுட் புகுந்து கலிங்கசேனையோடு இன்புற்றுத் துயிலும் மதனவேகனைக்கண்டான். பெரிதும் சின முற்று அவனைக் கொல்லுதற்கு முயலுங்கால் மதன வேகன் விரைந்து விழித்தெழுந்து விசும்பை நோக்கி எழுந்து சென்றான்.

அதன்பின், கலிங்கசேனையும் விழித்தெழுந்தாள். எழுந்து தன் படுக்கையில் யாரும் இல்லாதிருத்தலைக் கண்டு, "ஆ! துன்பம். முன்னரே விழித்தெழுந்த வற்ச ராசன் என்னைத் தனியளாக ஒழித்துவிட்டு எவ்விடத் தோ சென்றுவிட்டான்" என்று அழுதாள். அப் பொழுது யௌகந்தராயணன் அரசனோடு அவள் பக்கல் அணுகிக், "கலிங்கசேனை! எவனோ ஒரு வித்தியாதரன் எங்கள் அரசனது வேடந்தாங்கி நின்னை வஞ்சித்து மணந்தான். ஆதலின், நீ வற்சராசன் மனைவியாதற்குத் தகுதியுடையை அல்லை" என்று கூறினான்.

அதுகேட்ட கலிங்கசேனை கோடரியால் தாக்கப் பட்டவள் போலவும் பேய்கோட் பட்டாள் போலவும் மிகவும் துன்பத்தாற் கலக்குண்டு நீர் ஒழுகுங் கண்களை யுடையளாயினாள். அதன்பின் அரசனும் அமைச்சனும் தத்தம் இல்லம் எய்தினர். பின்னர்க் கலிங்க சேனை இனத்தினின்றும் பிரிந்த மான்பேடு போல மிகவும் கலக்குண்ட நெஞ்சமுடையளாய் இல்லத்தினின்றும் புறம்போந்து ஆகாயத்தை நோக்கி, "யாவன் வற்சராசன் வேடந்தாங்கி என்னை மணந்துளானோ அவன் என்மாட்டு அருள்கூர்ந்து தன் இயற்கை உருவத்தோடு வெளிப்படுக. அவனையே யான் மணவாளனாக வரிப்பேன்" என்றிங்ஙனங் கூறினாள். அதன்பின் மதனவேகன் ஆரகேயூர முதலிய சிறந்த அணிகலன்களை யணிந்துகொண்டு விண்ணினின்றும் இறங்கி அக்கலிங்க சேனையின் பக்கல்எய்திப் பின்வருமாறு கூறுவானாயினான். "காதலீ! கலிங்கசேனே! என்னை மதனவேகன் என்னும் பெயரினையுடைய வித்தியாதரனென்று அறிவாயாக. யானே வற்சராசவேடந்தாங்கி நின்னை மணந்துளேன். முன்னொருகாலத்தில் தந்தையின் இல்லத்திலிருந்த நின்னையான் கண்டு அவாமேற்கொண்டு நின்னைப் பெறுதற்பொருட்டுச் சிவபிரானைக் குறித்து வழிபாடு செய்தேன். நின்னைப் பெறுதலாகிய வரத்தையும் அப்பெருமான் எனக்கு அருளிச்செய்தார். அதன்பின் நீ உதயனன் மாட்டு மிக்க காதற்கிழமை மேற்கொண்டமையறிந்து இதுவே குற்றமற்ற உபாயம் என்றெண்ணி வேற்றுருக்கொண்டு நின்னை மணந்தேன்.

இனி நீ இவ்விடத்திலேயே இருத்தல்வேண்டும். மானுடப் பெண்ணாகிய நின்னோடு எம்மரபினர் கூடி வாழ்தல் தக்கதன்று" என்றிங்ஙனங் கூறி மிகுதியான பொன்களை அவட்குக் கொடுத்துவிட்டு விசும்பிற் சென்றான். இந்நிகழ்ச்சிகளையறிந்த வற்சராசனும் அவளை அவ்விடத்திலேயே இருக்கும்படி அநுமதி செய்தான். வித்தியாதரனை மணாளனாக எய்தப் பெற்று உளமகிழ்ந்த கலிங்கசேனை கணவன் கட்டளையிட்டவாறு அந்நகர்ப்புறப் பூஞ் சோலைக்கண்ணே இன்புற்றிருந்தாள்.

## வெண்பா.

கற்பு நலநிறைந்த காதலியர் தாங்கவல
அற்போ டியலறத்தி னூற்றோரீஇத்—தற்பயனு
மன்றல் கோளலிறைக்கு மாண்பன் றெனமறுத்தான்
துன்று மதியமைச்சன் சூழ்ந்து.

விச்சா தரன்மதன வேக னுதயணன்பால்
நச்சுங் கலிங்கநத்த னன்மகளை—யிச்சையினல்
நாடி நலநுகர்ந்தா னதன் சிவனருளைக்
கூடினார்க் குண்டோ குறை.

# பதினான்காம் வகுப்பு.

## (மதன மஞ்சுகை மன்றல்.)

நாள் பல சென்றபின் கலிங்கசேனை கருவுற்றாள். அதன்பின் மதனவேகன் அவளையடைந்து பின்வருமாறு கூறுவான். "கலிங்கசேனே! கருப்பமுண்டான பின் தேவர்கள் மாநுடப் பெண்களோடு சேர்க்கையை விரும்புவதில்லை. இது தேவர்களது கொள்கை. முன்னொருகாலத்தில் மேனகை சகுந்தலையைப் பெற்றபின் விசுவாமித்திர முனிவரை விலக்கிவிட்டுச் சென்றாள் என்பது புராண கதை. ஆதலின் யான் செல்கின்றேன். "அமயம் நேர்ந்துழி நினைப்பையாயின் எதிர்ப்படுவேன்" என்று சொல்லி மதனவேகன் போயினான்.

பகவானாகிய மகேசுவரரால் மன்மதன் உடல் நீறாக்கப்பட்டபொழுது இரதிதேவி உடலோடுங் கூடிய கணவனை யடைதற் பொருட்டுத் தவம்புரிந்தாள். அத் தவங்கண்டுமகிழ்ந்த சிவபெருமான் இரதியை நோக்கித், "தானே மேற்கொண்ட இறுமாப்புக் காரணமாக என்னால் நீறாக்கப்பட்டு அழிந்த உடலினையுடைய நின் கணவன் கௌசாம்பி நகரத்தில் உதயனன் என்னும் அரசற்கு நரவாகனதத்தனென்னும் பெயரினையுடைய மகனாகப் பிறந்திருக்கின்றான். நீயும் நிலவுலகத்தில்

தாய் வயிற்றினின்றுபிறவாமற் பெண்ணாகி அந்நரவாகன தத்தனோடு சேரக்கடவை" என்றிங்ஙனங் கட்டளையிட்டார். மேலும் பிரமனை நோக்கி, "நிலவுலகத்திலுள்ள கௌசாம்பி நகரத்தில் வற்சராசனது நகர்ப்புறத்துப் பூஞ்சோலைக்கண் இருக்கும் கலிங்கசேனை சிறந்த புதல்வனைப் பெறுவாள். அப் புதல்வனை மாயையினாற் கவர்ந்து இவ்விரதியைத் தாய் வயிற்றினின்று பிறவாத கன்னிகையாக நிருமித்து அப்புதல்வன் கிடந்த இடத்தில் வைப்பாயாக" என்றிவ்வாறு கட்டளையிட்டார். கலிங்கசேனை எப்பொழுது சிறந்த புதல்வனைப் பெற்றனளோ அப்பொழுதே பிரமன் பரமசிவனது கட்டளையை நிறைவேற்றினான். அதுகாலை யாவரும் மின்னற் கொடி போல் ஒளிவிளங்கும் பெண்மணியைப் பெற்றதாகக் கண்டனர். வியக்கத்தக்க எழில்வாய்ந்த அப் பெண்மகளைக்கண்டு கலிங்கசேனை புதல்வர்ப்பேற்றினும் மிகுதியாக மகிழ்ந்து விழாக்கொண்டாடினாள்.

வற்சராசன் கலிங்கசேனைக்குப் பெண்மகவு பிறந்த செய்தியைக் கேட்டு யௌகந்தராயணனோடு வாசவதத்தையின்பாற் சென்று "கலிங்கசேனை தேவர்களாலும் விரும்பத்தக்க உருவம் வாய்ந்த ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள். அப்பெண் நம் அருமை மகன் நரவாகனதத்தற்கு மனைவியாம் தகுதியுடையாள்" என்றிவ்வாறு கூறினான். அதுகேட்டு வாசவதத்தை அரசனை நோக்கி, "தேவ! ஈதென்னை இவ்வாறு கூறுகின்றனை? இரண்டு குலமும் தூய்மையாகப்பெற்ற நின்புதல்

வன் நரவாகனதத்தன் எங்கே! கற்புநிலைபிறழ்ந்த கலிங்க சேனையின் கருப்பத்திற்றோன்றிய அப்பெண் எங்கே! கலிங்கசேனையோ முதற்கட் பிரசேன சித்துவையும் அதன்பின் நின்னையும் அதன்பின் மதனவேகனையும் காதலித்துக் கற்பிழந்தவளாயினாள். ஆதலின் எங்ஙனம் நம்மோடு சம்பந்தத்திற்குரியளாவாள்" என்றிவ்வாறு மொழிந்தாள்.

அதுகேட்டு வற்சராசன், "இக்கலிங்கசேனை ஏதோ ஒரு சாபப் பிழையால் இந்நிலவுலகத்திற் போந்த தெய்வப்பெண்ணென்று கூறுவர். இவள்பாற் பிறந்த கன்னிகையும் கடவுட் கூறுடையளாகத் தோன்றினவள் என்றே எண்ணுகின்றேன். மேலும் "நலனிறைந்த கன்னியர்க்குச் சாதி நன்மை தீமை யில்லை" என்பதன்றே அறநூலின் கட்டளையாகும். இஃது என் ஒருவன் அபிப்பிராயமாத்திரமன்று. விட்புலச்சொல்லும் இங்ஙனமே எழுந்ததுண்டு" என்றிவ்வாறு மறுமொழி கூறினான். அதன்பின் யௌகந்தராயணன், "தேவி! அரசனாற் கூறப்பட்ட இஃதுண்மையே. என் நண்பனாகிய யோகேசுவரன் என்னும் பிரமராக்கதன் என்பால் வந்து கலிங்கசேனையின் புதல்வியைப்பற்றிக் கூறியதாவது:—"கலிங்கசேனை முற்பிறப்பில் தெய்வப் பெண்ணாகி ஒரு சாபப்பிழையால் இந்நிலவுலகத்திற் போந்து கற்புநிலை பிறழ்ந்தவள் என்னும் அபவாதத்தை யடைந்தாள். இவளுக்குப் பிரமன் தாய் வயிற்றினின்று பிறவாத கன்னிகையை இரதியின் கூறாக ஈந்தான். இப்

பெண்மணியே உதயனன் புதல்வனாகிய நரவாகனதத்தற்கு மனைவியாவாள்" என்பதாம் என்றிவ்வாறு கூறினான். அதுகேட்டு வாசவதத்தை 'அங்ஙனமேயாக' வென்றுடன் பட்டாள். அதன்பின் கலிங்கசேனை தன் மகட்கு மதனமஞ்சுகை என்று பெயரிட்டாள். அக்கன்னிகை நாடோறும் பூருவபக்கத்துத் திங்களஞ் செல்வன் கலைபோல மக்கள் எல்லோருடைய கண்களுக்கும் ஆனந்தம் விளைப்பவளாய் வளர்ச்சி யெய்தினாள். கலிங்கசேனையும் வற்சராசனோடு செய்துகொள்ள விரும்பிய சம்பந்தம் வாய்த்ததைக் கேட்டு மிகவும் மகிழ்பூத்தாள். பின்னர் முறையே யௌவன பருவம் வாய்க்கப் பெற்ற நரவாகனதத்தன் தன்தந்தையால் இளவரசாக நியமனம் பெற்றான். அந்நரவாகனதத்தற்கு யௌகந்தராயணன் புதல்வனாகிய மருபூதி என்பான் அமைச்சனாயினான். உருமண்வான் புதல்வனாகிய அரிசிகன் என்பான் படைத்தலைவனாயினான். வசந்தகன் புதல்வனாகிய தபந்தகன் என்பான் நன்மசசிவனாயினான். இத்தியகன் மகன் கோமுகன் என்பான் வாயில்காப்போனாயினான். பிங்கலிகை என்னும் பெயரினையுடைய பிராமணியின் குமாரர்களாகிய வைசுவானரன், சாந்திசோமன் என்னும் இருவரும் புரோகிதராயினர். நரவாகனதத்தன் இளவரசாம் நிலையை யெய்தியபின் வறுமையும் நோயும் களவும் இந்நிலப் பரப்பைவிட்டு ஒழிந்தன.

பின்னர் ஓர்மயம் கலிங்கசேனை தன் அன்புரிமைத் தோழியாகிய சோமப்பிரபையை நினைந்தாள். நினைந்த அப்பொழுதே அச் சோமப்பிரபை தன்றலை

வன் அநுமதிபெற்று இரவிற் கலிங்கசேனையின் பக்கல் அடைந்து இனி நிகழ விருப்பதாகிய உதயனனோடுள்ள சம்பந்தத்தைத் தன் கணவன் முகமாகக் கேட்டதாகத் தெரிவித்தாள். மேலும் மதனமஞ்சுகையின் பொருட்டுத் தெய்விகத் தன்மை வாய்ந்த ஓர் உய்யானத்தையும் இயற்றினாள். அதன்கண் பொன்மயமான வேதிகைகளும், அரதனம் இழைக்கப்பட்ட திண்ணைகளும், பொன்மயமான மதிற் சுவர்களும், பவழமயமான தூண்களும், முத்துக்களாகிய மணல்களுமாகிய இவ்வெல்லாம் மக்களாற் செய்தற்கரியனவாகவும் பெரிதும் வியக்கத்தக்கனவாகவும் விளங்கின. இத்தகைய உய்யானத்தை மதன மஞ்சுகைக்கு ஈந்து சோமப்பிரபை கலிங்கசேனையின்பால் தெரிவித்து விட்டுத் தன் இருப்பிடம் எய்தினாள்.

பிற்றைநாட் காலையில் கௌசாம்பி நகரத்துள்ளார் அனைவரும் தெய்விகத் தன்மை வாய்ந்த அவ் உய்யானத்தைக்கண்டு மிக்க வியப்பெய்தினர். உதயனன் யௌகந்தராயணன் முதலியோர், “இவ் உய்யானம் எவ்வாறு அடையப்பட்டது?” என்று கலிங்கசேனையைக் கேட்டனர். அவள் தனக்குச் சோமப்பிரபையோடுண்டாகிய நட்புரிமையும், அவளால் உய்யானம் இயற்றப்பட்டதும் ஆகிய இவை முதலிய எல்லாவற்றையும் விளங்க உரைத்தாள். பின்னர் ஓரமயம் உதயனன் தேவாலயத்தை யடைந்தான். அங்குத் தெய்வத்தன்மை வாய்ந்த கன்னியர் பலரைக்

கண்டு, "நீவிர் யார்?" என்று கேட்டான். அப்பெண்கள் "அரச யாம் அறுபத்து நான்கு கலைகள் ஆமேம்; பகவானாகிய உமாகாந்தன் கட்டளையால் நின் புதல்வனாகிய நரவாகனதத்தனை யடைந்து பணி செய்தற்கு வந்தேம்" என்றிவ்வாறு கூறினர்.

அது கேட்டு மிக்க மகிழ்ச்சி யெய்திய உதயணன் மதனமஞ்சுகையையும் எல்லாச் கலைகளிலும் பயிற்சி செய்வித்தான். அங்ஙனம் எல்லாக்கலைகளிலும் மிக்க திறமையைப் புலப்படுத்திவரும் மதனமஞ்சுகையைக் கண்டு நரவாகனதத்தன் அவள்பால் அளவிகந்த காதற்கிழமை யுடையனாயினான். அவளும் அவன்மாட்டுப் பேரன்புடையளாயினாள். இங்ஙனம் ஒவ்வொருகணமும் வளர்ச்சி யெய்துகின்ற காதற்பெருக்கினையுடைய அவ் இருவரும் கணப்பொழுதேனும் தம்முள் ஒருவரையொருவர் காணமலிருக்க ஆற்றாராயினர். இவ்விருவர்க்குமுள்ள மிக்க காதற் கிழமையைக் கண்டு உதயணன் காலந்தாழ்த்தலின்றி இவ்விருவர்க்கும் திருமணப் பெருவிழாவை நிறைவேற்றல் வேண்டுமென்று துணிவுற்றான். பின்னர், கற்புநிலை பிறழ்ந்தவள் என்னும் அபவாதத்தை யடைந்த கலிங்கசேனையின் சம்பந்தத்தைக்குறித்து உலகம் யாது கூறுமோவென்னும் ஐயப்பாட்டால் முயற்சியின்றி யிருந்தான்.

அப்பொழுது விசும்பினின்றும் அசரீரிச்சொல்:- "இந்நரவாகனதத்தன் காமன் கூறாகப் பிறந்தவன்.

காமன் காதலியாகிய இரதியே மதனமஞ்சுகை உருவத்தோடு அவதரித்தாள் ஆதலின் இவ்விருவரது மணமக்களாந் தன்மை மிகவும் பொருத்தமுடையதே. நரவாகனதத்தன் பகைவர் எல்லோரையும் வென்று வித்தியாதரர் எல்லோர்க்கும் வேந்தனுகவும் விளங்குவான்" என்றிவ்வாறு எழுந்தது. இவ் விட்புல மொழியைக் கேட்டு உதயனன் ஒரு சிறிதும் ஐயமின்றி மணத்திற்குரிய ஏற்பாடுகளைச் செய்தான்.

அதன்பின் சோதிடர்களைக்கொண்டு சிறந்த நன் முகூர்த்தத்தைத் துணிந்தான். வைசுவானரன் சாந்திசோமன் என்னும் புரோகிதர் இருவரும் நரவாகனதத்தற்குக் கௌதுக முதலிய மங்கல காரியங்களை யியற்றினர். விவாக முகூர்த்தம் வந்ததும் நரவாகனதத்தன் சிறந்த அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் மதனமஞ்சுகையைக் கைப்பிடித்தான். அத்திருமணப் பெருவிழாக்காலத்தில் இந்நிலவுலகத் தன்றி உம்பருலகத்தும் பெரிய மகிழ்ச்சிக் கொண்டாட்டம் நிகழ்ந்தது. மூன்றுலகமும் திருவிழாப் பொலிவுடையன போலாயின. இங்ஙனம் குணம் செயல பருவம் முதலியவற்றுல் தனக்கு ஒத்து விளங்கும் மதனமஞ்சுகையை மணந்து நரவாகனதத்தன் மிகவும் இன்புற்றுன். அவனைக்கண்டு வாசவதத்தை வற்சராசன் ஆகிய இருவரும் பெரிதும் உவகை பூத்தனர்.

அதன்பின் நரவாகனதத்தன் இரத்தினப்பிரபை, கருப்பூரவதி, அலங்காரவதி என்னும் இவர் முதலிய தெய்வ கன்னிகைகளையும் மணந்து அவர்களோடு கூடிக்கலந்து இன்புற்றான்.

பின்னர் ஓர் அமயம் நள்ளிரவில் மதனமஞ்சுகை சட்டெனக் காணப்படாத நிலையை யடைந்தாள். அவளைத் தேடுதற்பொருட்டு முயன்ற உவளகத்து ஏவன் மகளிர் மிகவும் ஆரவாரஞ்செய்தனர். நரவாகனதத்தன் மதனமஞ்சுகை சட்டென மறைந்தாள் என்பதை யறிந்து மனமொழிகளைக் கடந்த தாபத்தை யநுபவித்தான். கலிங்கசேனையும் தன் அருமை மகள் காணப்படாமையைக் கேட்டுப் பேய்கோட்பட்டால் போல அறிவிழந்தவளாயினாள். இந்நிகழ்ச்சிகளை யறிந்து கௌசாம்பி நகரத்துள்ளாரனைவரும் கலக்கம் எய்தினர். அப்பொழுது உவளகத்துள்ள ஒரு கிழவி வந்து "பலநாட்களின் முன்னர் மானசவேகன் எனப் பெயரிய வித்தியாதரன் ஒருவன் இங்கு வந்தான். அப்பொழுது மதனமஞ்சுகை மணஞ்செய்யப் படாதவளாக இருந்தாள். அவள்பாற் காமமிக்க நெஞ்சினனாகிய மானசவேகன் கலிங்கசேனையை யடைந்து அவளை வேண்டினான். கலிங்கசேனையோ, 'இக்கன்னிகை முன்னமே நரவாகனதத்தற்கு உரியளாக நிச்சயிக்கப்பட்டாள்' என்றுகூறி அவன் வேண்டுகோளை மறுத்துவிட்டாள். அதனால் மனம் வருந்திய மானசவேகன் வந்தவழியே திரும்

பினன். அவனுமேலேயே இப்பொழுது மதனமஞ்சுகை கவரப் பட்டிருத்தல் வேண்டும்" என்றிவ்வாறு கூறினள்.

அதுகேட்டு நரவாகனதத்தன் பித்தனைப்போலாகிப் பரிசனங்களுக்குக் காணப்படாமல் தனியனுய்ப் புறப்பட்டு மதனமஞ்சுகையைத் தேடிக் காட்டில் அங்குமிங்கும் அலைந்து திரிந்தான். அக்காட்டில் மானசவேகன் உடன் பிறந்தாளாகிய வேகவதியென்னும் பெயரினையுடையாள் மதனமஞ்சுகையின் உருக்கொண்டு நரவாகனதத்தன் பக்கல் எய்தினள். அவளைக் கண்டு நரவாகனதத்தன் விரைந்தோடி, "பிரியே! காரணமின்றி என்னை விட்டொழிந்த நீ என் செய்தனை" என்றுகூறி இறுகுறத்தழீஇக் கொண்டான்.

அதன்பின் அவள், எனக்கு மணம் நிகழ்ந்த அந்நாளில் இயக்கர்க்குப் பூசைசெய்வதாகப் பிரதிஞ்ஞை செய்து கொண்டேன். அவ்வண்ணம் அதனைச் செய்திலேன். அதுபற்றிச் சினமுற்ற இயக்கர்கள் என்னைக் கவர்ந்து சென்றனர். ஆதலின் இப்பொழுது அவ் இயக்கர்க்குப் பூசை செய்தற் பொருட்டு மீண்டும் மணவிழா நடத்தல் வேண்டும்" என்றிவ்வாறு கூறினள். நரவாகனதத்தன் அவள் கூறிய வண்ணம் எல்லாவற்றையும் அங்ஙனமே நிறைவேற்றினன். அதன்பின் நடுநிசியில் துயிலுங்கால் தன்

இயற்கை உருவத்தோடு படுத்திருக்கும் வேகவதி யைக்கண்டு ஐயமுற்ற நரவாகனதத்தன் விழிப்புற்ற அவளை நோக்கி, "நீ யார்? உண்மை கூறுக" என்று வினவினன். அவள் பின்வருமாறு கூறுவாளாயினள். "ஆசாடபுரம் எனப் பெயரிய வித்தியாதர பட்டினம் ஒன்றுளது. அதன்கண் மானசவேகன் எனப்பெய ரிய வித்தியாதரன் ஒருவன் உளன். யான் அவன் தங்கையாவேன். வேகவதி என்பது என் பெயர். என் தமையன் மானசவேகன் என்பான் நின் மனைவி யாகிய மதனமஞ்சுகையின்பாற் காதல்கொண்டு மாயை யால் அவளைக் கவர்ந்தான். கவர்ந்தும் இராவண னைப் போற் சாபம் எய்தப் பெற்றவனாதலின் அவளை வலிந்துசேர ஆற்றலில்லாதவனாயினன். மதனமஞ்சுகை அவனாற் பலவாறு வேண்டப்பட்டும் அவனைத் துரும்பென மதித்துத் தள்ளி நின்பாலே பிணிக்கப் பட்ட உள்ளமுடையளாய்த் துன்புறுகின்றாள். இஃதிங் ஙன மிருக்குங்கால் ஒருவரோடு ஒருவர் உரையாடுத லால் மதனமஞ்சுகையோடு எனக்கு நட்புண்டா யிற்று. அவள் முகமாக நின் உருவம் குணமுதலிய வற்றைக் கேட்டுக் காமுற்று நின்பக்கல் யானே வந்தடைந்தேன். மதனமஞ்சுகையின் பிரிவால் பாழ டைந்த நெஞ்சினனாகிய நின்னைக்கண்டு மணஞ் செய்து கொள்ளுதற் பொருட்டு இவ்வுபாயத்தை மேற்கொண்டேன்" என்றிங்ஙனங் கூறி அவ்வேகவதி விச்சையின் திறமையால் நரவாகனதத்தனை தூக்கிக் கொண்டு விசும்பின் வழியாக ஆசாடபுரத்தை யடைந்

தாள். இவ்வென்று நரவாகனதத்தன் காணப்படா மையால் வற்சராசன் முதலிய கௌசாம்பிநகரத்துள் ளார் அனைவரும் துன்ப நிலையின் பேரெல்லையை யடைந்தனர். அப்பொழுது நாரத மகாமுனிவர் விண்ணினின்றும் இறங்கி, "நரவாகனதத்தன் நல முடையனாக இருக்கின்றான்; நலமுடையாளாகிய மதன மஞ்சுகையோடு விரைவில் இங்குப் போதருவான். கவலுதல் வேண்டா" என்று கூறி ஆறுதல் அளித் தார். அதனால் அவர்கள் தைரியத்தைக் கடைப்பிடித் திருந்தனர்.

ஆசாடபுரத்தில் வேகவதியால் கொண்டுவரப்பட்ட நரவாகனதத்தனைக் கண்டு பொறாமை மேற்கொண்ட மானசவேகன் அவனைக் கொல்லுதற்கு முயன்றான். அம் மானசவேகன் தாய் தந்தையர் நரவாகனதத் தனை வேகவதியின் கணவனென் றறிந்து கோரன் முயற்சியினின்றும் அவனைத் தடைப் படுத்தினர். அதன்பின் வேகவதி நரவாகனதத்தனை மதனமஞ்சுகை யோடு இருசியமூகம் எனப்பெயரிய மலைக்கண் அடைவித்தாள். அங்கு தனவதி என்னும் பெய ரினையுடைய வித்தியாதரப்பெண் தன் மகள் அசிநாவதி எனப் பெயரிய நங்கையை நரவாகனதத்தற்குக் கொடுத்தாள். அவளையும் மணந்து நரவாகனதத்தன் தனவதியால் அடைவிக்கப்பட்டுக் கௌசாம்பிநகரத் தைக் குறித்துத் திரும்பி வந்தான். விம்மிதத்தான்

மலர்ந்த கண்களையுடைய உதயனன் முதலியோர் அவனைக் கண்டு பெரிதும் இன்ப மெய்தினர்.

## வெண்பா.

காணுங் குணம்பருவங் காதலுரு வொத்தமையான்
மாணுற் றேளிர்மதன மஞ்சுகையைக்—காணூஉ
நரவா கனதத்த னன்றுமணந் தின்பப்
பெருவா ரிதிதோய்ந்தான் பெட்டு.

---

# பதினைந்தாம் வகுப்பு.

## (திருமஞ்சனம் பெறுதல்.)

வித்தியாதரராகிய சுற்றத்தாரனைவரும் நரவாகனதத்தன் பக்கல் வந்து, "மானசவேகன் முதலிய வித்தியாதரர் பலர் நினக்குப் பகைவரா யுள்ளார். அவர்களை வென்று நீயே வித்தியாதர சக்கரவர்த்தியாதல் வேண்டும். அதன் பொருட்டுச் சிலவிச்சைகளையும் பயிலல் வேண்டும். விச்சைகள் சித்தியெய்தற் பொருட்டு நீ இங்கு நின்றும் புறப்பட்டுக் கைலாயத்தை யடைந்து தவமியற்றல் வேண்டும்" என்றிவ்வாறு கூறினர்.

"அங்ஙனமேயாக" வென்றுடன்பட்டு நரவாகனதத்தன் பகவானாகிய மலைமகண் மணாளன் வீற்றிருக்கப் பெற்றதும், எல்லா நலன்களும் சித்தியாதற்குரிய நல்லிடமுமாகிய கைலாயத்தை யெய்திச் செயற்கரிய தவத்தைச் செய்தான். அத்தவத்தால் வழிபடப்பெற்ற உமாநாதன் காட்சியளவையில் வெளிப்பட்டு, "எல்லாவிச்சைகளும் நினைத்த அளவில் நினக்கு விளங்கித் தோன்றும்" என்று அருளினார். தாமரைப் பூவை யொத்த வடிவமைந்த ஒரு விமானத்தையும் அருளினார். அவற்றைப் பெற்ற பின்னர் நரவாகனதத்தன் வித்தியாதரராகிய சுற்றக் குழுவினர்

துணைசெய்யப் படைகளோடு புறப்பட்டு இமையமலை யின் தென்பால் வாழ்கின்ற மானசவேகன் முதலிய வித்தியாதர வேந்தர்களைப் பொருது வென்றான்.

இமையமலையின் வடபால் வாழ்கின்ற மந்தரதேவன் எனப் பெயரிய வித்தியாதரசக்கரவர்த்தி தென்பாலுள்ள வித்தியாதரர் தோல்வியுற்றனர் எனக்கேட்டுச் சினமுடையனாய் நரவாகனதத்தனோடு போர் செய்யச் சித்தனாயினான். நரவாகனதத்தன் ஒற்றர் முகமாக அதனையறிந்து பகவானாகிய பார்வதி மணாளன் அநுக்கிரகத்தையே சிறந்த பலமாகக் கடைப்பிடித்து மந்தரதேவனைப் படைகளோடு வளைந்தான். அப்பொழுது வடபாலில் மந்தரதேவற்கும் நரவாகனதத்தற்கும் பெரும்போர் நிகழ்ந்தது. அப்போரில் விசும்பிடமுழுதும் கதை வாள் வளைதடி ஈட்டி சூலம் முதலிய ஆயுதங்கள் நிறைந்தன. நிலவுலக முழுதும் படைக்கலங்களால் அறுக்கப்பட்ட தலைகள் நிரம்பின. புண்ணீர் வெள்ளம் கார்காலத்தில் மலையினின்றும் வீழும் அருவி வெள்ளம்போற் பன்முகமாகப் பெருகிற்று. வெட்டு குத்து கொல் என்னும் இவை முதலிய கொடுஞ் சொற்கள் கேட்கப்பட்டன.

மிக்க அச்சத்தை விளைவிக்கும் இத்தகையபோரில் நரவாகனதத்தன் மந்தரதேவனை நிலத்தில் வீழ்த்திக் கால்களால் அவன் மார்பிடத்தை மிதித்து அதி விரைவில் எடுக்கப்பட்ட வாட்படையால் அவன்

தலையை வெட்டுதற்கு முயன்றான். அப்பொழுது மந்தரதேவன் தங்கையாகிய மந்தரதேவியென்பாள் விரைந்து ஓடிவந்து நரவாகனதத்தன் கால்களில் வீழ்ந்து, "ஐய! கேடெய்தினார்பால் இரக்கம் வைக்கும் நின்னைப் புகலடைந்தவளாயினேன். என் தமைய னுக்கு அபயம் அருள்வாயாக" என்று வேண்டினாள். அதனால் அருள்கூர்ந்த நெஞ்சினனாகிய நரவாகன தத்தன் அவனைக் கொல்லுதலினின்றும் ஒழிவடைந் தான். பின்னர் மந்தரதேவன் நரவாகனதத்தனை வணங்கி, "என் குற்றத்தைப் பொறுத்தருள்க. வித்தி யாதர இராச்சிய முழுதையும் நீயே ஆள்க" என்று கூறித் தவஞ்செய்தற் பொருட்டு வனத்தை யடைந் தான். இங்ஙனம் பகைவர் எல்லோரையும் வென்று பகையற விளங்கும் அரசியற்றிருவை யடைந்து திகழும் நரவாகனதத்தனைக் கண்டு மருபூதி முதலிய தலையாய அமைச்சர்கள் அளவிலாப் பெருமகிழ் வெய்தினர்.

நரவாகனதத்தன் மானசவேகன் முதலியோரை அவரவர் இராச்சியத்தில் நிலைப்படுத்தினான். இங்ங னம் சுற்றத்தார் நண்பர் பொதுமலர் ஆகிய இவ் எல்லோரிடத்தும் அன்புவைத்தொழுகும் நரவாகன தத்தன் அவ்வப்பொழுது ஆகாயவாணியால் வெளிப் படுத்தப்படும் பிரபாவ முண்மையாலும், பகவானா கிய சிவபெருமானிடத்தினின்றும் அடைந்த பெறற் கரிய செல்வங்களை யுடைமையாலும், பல வித்தியாதரப்

பெண்கள் தாமே வர மணஞ்செய்துகொண்டமை யாலும், "இவன் மனிதனல்லன்; வித்தியாதர குமாரனேயாவன்" என்று துணிந்து வித்தியாதரர் எல்லோரும் நட்பும் மதிப்பு முடையராய் மகிழ்ந்து கொண்டாட விளங்கினன்.

அதன்பின் நாரத முனிவர் வந்து நரவாகனதத் தனை நோக்கி, "அகம்பனன் என்னும் பெயரினை யுடைய வித்தியாதரராச இருடி ஒருவன் உள்ளான்; அவன் மந்தரதேவனுடைய தந்தையாவான்; இப் பொழுது காட்டில் தவஞ் செய்கின்றான்; அவனை யடைந்து வணங்குக. அவன் நினக்கு வித்தியாதர இராச்சியாபிடேகத்துக்குரிய ஏற்பாடுகளைச் செய் வான்" என்றிவ்வாறு கூறினர்.

அதுகேட்டு நரவாகனதத்தன், "அங்ஙனமே யாக" வென்றுடன்பட்டு அப்பொழுதே புறப்பட்டுத் தபோவனத்தில் தவஞ் செய்கின்ற அகம்பனன் என் னும் இராச இருடியின் பக்கல் எய்தித் தன் பெயரை எடுத்துக்கூறி வணங்கினன். அவ் இருடி ஞானக் கண்ணால் எல்லாவற்றையு முணர்ந்து தன் மகள் மந்தர தேவி எனப் பெயரிய கன்னிகையை நரவாகனதத் தற்குச் சமர்ப்பித்து அவ்விருவர்க்கும் மணவினையை விதிப்படி நிறைவேற்றினன். பின்னர், "இடப கிரியில் முடிசூட்டுக் கொண்டாட்டம் நிறைவேற்றற் பாலது" என்று வித்தியாதரர்களுக்குக் கட்டளையிட்

டான். வித்தியாதரர் எல்லோரும் தத்தம் செல்வ நிலைக்கியைந்த ஏற்பாடுகளைச் செய்தனர். நரவாகன தத்தன் சுற்றத்தார் நண்பர் முதலிய எல்லோரும் புடைசூழ மனைவிமார் அமைச்சர் வித்தியாதரக் குழுவினர் ஆகிய இவர்களோடு புறப்பட்டு இடபகிரியைச் சார்ந்தான். அவ்விடத்தில் வைசுவானரன் சாந்தி சோமன் என்னும் புரோகிதர் இருவரும் அணுத் துணைக் குற்றமுமில்லாத மிகச்சிறந்தநன்முகூர்த்தத்தை நிச்சயித்தனர்.

பின்னர் நரவாகனதத்தனுடைய மனைவிமார் பலருள், "யாவள் கோப்பெருந் தேவியாம் நிலைக்குத் தகுதியுடையளாவள்"? என்னும் ஆராய்ச்சியுண்டாயிற்று. அப்பொழுது, "இரதிதேவியின் கூறாக அவதரித்த மதனமஞ்சுகையே கோப்பெரும் தேவியாம் நிலையில் அபிடேகம் பெறுவதற்குரியளாவாள்" என்று அசரீரிச் சொல் வெளிப்பட்டது. அதுகேட்டு எல்லோரும் வியப்பெய்தினர். பின்னர் முடிசூட்டு விழாவிற்குரிய முகூர்த்தம் வந்ததும் வித்தியாதரர் மங்கல வாச்சியங்களை வாசித்தனர். தெய்வமகளிர் புகழ்ச்சிப் பாடலாகிய இனிய மங்கல கீதங்களைப் பாடினர். அந்தணர் "நலம் வளர்க" என்று வாழ்த்துரை கூறினர். கற்பக தருக்கள் மலர்மழை பெய்தன. வித்தியாதரப் பெரியார் மங்கல வாழ்த்துக் கூறினர். இன்னோரன்ன மங்கலகரமான ஆரவாரங்களுக்கிடையே சுருசுருப்பு மிக்க புரோகிதர் இருவரும் பெரிய இருடிகள் பலரோடுங் கூடி மதன

மஞ்சுகையோடு நரவாகனதத்தனை இரத்தினமயமான அரியணைக்கண் வீற்றிருக்கச் செய்தனர்.

அதன்பின் மாட்சிமிக்க முனிவரர் பலர் எல்லாத் தீர்த்தங்களினின்றும் கொணரப்பட்டுப் பொற்கலசங்களில் நிறைவிக்கப் பெற்றதும், தூய்மை மிக்கதும், நறுமணம் நிறைந்ததும் ஆகிய நன்னீரால் நரவாகனதத்தற்கு திருமஞ்சனம் செய்தனர். அவன் பக்கவில் வீற்றிருக்கும் மதனமஞ்சுகை தேவேந்திரன் அருகில் வீற்றிருக்கும் இந்திராணிபோல் விளங்கினாள். இங்ஙனம் பகவானாகிய மகேசுவரரது திருவருட் பாங்கால் எல்லா வித்தியாதரர்களுக்கும் அதிபதியாம் தன்மையைப் பொதுவற வடைந்து நிலவுலகத்திற் பெறுதற்கரிய போகங்களை யநுபவிக்கின்ற நரவாகனதத்தனைக்கண்டு வாசவதத்தையும் வற்சராசனும் மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

## வெண்பா.

அண்ணல் சிவனருளா லான்ற மதிகுலத்துப்
புண்ணியன் றேவ்வர் புரைகடந்து—நண்ணியசீர்
விண்ணவரும் போற்றவுயர் விச்சா தரவரசாய்
மண்ணின்மிசை வாழ்ந்தான் மகிழ்ந்து.

அன்ப ருளத்தி னகலாப் பரனருளால்
இன்ப மிருமையினு மெய்தலா—மென்பதே
வற்சநாட் டேந்தன் மகனிவர்தம் வாழ்க்கைதிகழ்
பொற்சரிதங் காட்டும் பொருள்

முற்றிற்று.

# அரும்பதவுரை.

அகாரணம்-காரணமில்லாமை.
அசரீரி-ஆகாயவாணி.
அச்சுறுத்தப்படாதவன்-பயப்படுத்தப்படாதவன்.
அடவி-காடு.
அணிகலம்-ஆபரணம்.
அணி-அழகு.
அணிமை-சமீபம்.
அதரம்-உதடு.
அத்தகிரி-சூரியன் மறைவதற்கு இடமாய்நிற்கும் மலை.
அத்தாணிமண்டபம்-அரசிருக்கை மண்டபம்.
அநாதை-பாதுகாப்போரில்லாதவன்.
அந்தோ-இரக்கத்தையுணர்த்தும் குறிப்புமொழி.
அபயம்-பயமில்லாமை.
அபலை-வன்மையில்லாதவள், எளியள்.
அமங்கலம்-கேடு.
அமயம்-சமயம்.
அமைச்சன்-மந்திரி.
அயக்காந்தம்-இரும்பையிழுப்பது.
அரசவை-அரசனுடைய சபை,
அரதனம்-இரத்தினம்.
அரமகளிர்-தேவமாதர்.
அரியணை-சிங்காதனம்.
அருக்கியம் - பெரியோர்க்கு நீரால் செய்யப்படும் வழிபாடு.
அவகாசம்-இயைந்த காலம்.
அவதரித்தல்-பிறத்தல்.
அவம்-வீண்.
அவலம்-துன்பம்.
அவா-விருப்பம்.
அறிவுறுத்தான்-அறிவித்தான்.
அற்பு-அன்பு.
ஆகாயவாணி-ஆகாயத்திலிருந்து உண்டாகும்சொல். (வாணி-சொல்.)
ஆங்காலம்-அநுகூலமான காலம்.
ஆசமித்தல் - (வலக்குடங்கையால் மந்திர பூர்வமாக நீரை மூன்று முறை) உட்கொள்ளல்.
ஆச்சிரமம் - முனிவர் இருப்பிடம்.
ஆணை-ஆஞ்ஞை, கட்டளை.
ஆரம்-மாலை.

ஆரவாரம்-ஒலி.
ஆராதனை-வழிபாடு.
ஆற்றல்-வலி.
ஆனந்த பரிதன்-மகிழ்ச்சி மிக்கவன்.
ஆன்ற-நிறைந்த.
இகத்தல்-கடத்தல்.
இடையூறு-துன்பம்.
இந்திரசாலம்-மாயவித்தை.
இனம்-கூட்டம்.
இம்பர்-இவ்வுலகம்.
இயக்கம்-அசைவு.
இயைபு-பொருத்தம், சேர்க்கை.
இரிதல்-கெடுதல்.
இருக்கை - இருப்பிடம், ஆஸனம்.
இருமை-இம்மை மறுமை.
இவர்தல்-ஏறுதல்.
இறுதிக்கடன்-அந்தியகருமம், மரணத்தின்பின் செய்யும் பிரேத கிரியை.
இறுதியெல்லை-முடிந்த அளவு.
இறைச்சிப்பிண்டம் - தசைத் தொகுதி.
இறைப்பொருள்-கப்பம்.
இன்னல்-துன்பம்.
ஈர்த்தல்-இழுத்தல்.
உஞற்றல்-செய்தல்.
உடுக்கை-ஆடை.
உடை-உஷை, அநிருத்தன் மனைவி, வாணாசுரன் மகள்.
உதயாசலம்-சூரியன் உதித்தற்கு இடமாய்நிற்கும் மலை.
உத்தியானவனம்-பூஞ்சோலை.
உபாயம்-தந்திரம்.
உம்பர்-தேவர்.
உயிர்நிலைத்தானம்-உயிர்நிலை நிற்குமிடம்.
உயிர்நிலை யுறுப்புக்கள் - உயிர் நிற்கும் விசேட அங்கங்கள்.
உய்த்தல்-செலுத்துதல்.
உய்யானம்-பூஞ்சோலை.
உரன்-அறிவு.
உரு-வடிவு.
உருவமாற்று-ஒருருவை வேறு உருவமாக மாற்றும் மந்திரம்.
உலக பாலர்கள்-திக்குப் பாலர்கள்.
உலைவு-கெடுதல்.
உவளகம் - அந்தப்புரம், அரச மகளிர் உறைவிடம்.
உவா மதி-பூரண சந்திரன்.
உறவு கோடல் - நட்புக் கொள்ளல்.
உறையுள்-வசிக்குமிடம்.

ஊர்தி-வாகனம்.

ஊழிக்காலம் - உலகம் அழிய வரும் யுகம் முடிவுக்காலம்.

எடுத்துக்காட்டு-உதாரணம்.

எழில்-அழகு.

எழூஉம்-எழுகின்ற.

ஏதம்-துன்பம்.

ஒரீஇ-நீங்கி.

ஒல்லாதது-முடியாதது.

ஒளிநூல்-சோதிட நூல்.

ஒற்றன் - பிறர்பால் நிகழ்வன வற்றை மறைந்துநின்று ஆராய்ந்தறிபவன்.

கடவாது-நீங்காது.

கட்டழகு-மிக்க அழகு.

கட்புலன்-கண்ணாகிய இந்திரியம்.

கணனம்செய்து - கணக்குச் செய்து.

கணிதநூல்-ஜோதிட நூல்.

கண்டம்-கழுத்து.

கதிரவன்-சூரியன்.

கதை-தண்டாயுதம்.

கபடம்-வஞ்சகம்.

கரத்தல்-மறைத்தல்.

கலுழன்-கருடன்.

கல்லுதல்-தோண்டுதல்.

கவலல்-வருந்தல்.

கவற்சி-வருத்தம்.

களிறு-ஆண்யானை.

கன்னியாமாடம்-மணஞ்செய்யப்பெறாத பெண்கள் தனித்து வசிக்குமிடம்.

காட்சியளவை - பிரத்தியக்ஷப் பிரமாணம்.

காணூஉ-கண்டு.

காதற்கிழமை-அன்புரிமை.

காந்தருவம்-ஒருவனும் ஒருத்தியும் கொடுப்போரின்றி அன்பினால் தாமே மணந்துகொள்ளும் மணம்.

காந்தன்-கணவன்.

காபாலிக வேடம் - கையில் ஓடு தாங்கிப் பிச்சையேற்றுண்ணும் சந்நியாச வேடம்.

காமவேள், காமன் - மன்மதன்.

காமுற்று-விரும்பி.

காமுகன்-மிக்ககாமமுள்ளவன்.

காலத்தாழ்வு-காலதாமதம்.

கிரகணம்-பற்றுதல், பிடித்தல்.

கிரியை-சடங்கு.

கிழமை-உரிமை.

கீழ்கடல் மலை - கீழ்கடலின் பாங்கருள்ள உதயகிரி.

குதூகலம்-பெருமகிழ்ச்சி.

குறுமை-குறுகியவடிவம்.

கூதிர்க்காலம் - குளிர்காலம், ஐப்பசி கார்த்திகை மாதங்கள்.

கூறு-அமிசம்.

கேயூரம்-தோளணி.

கையுறை - காணிக்கைப் பொருள்.

கோப்பெருந்தேவி - பட்டத் தேவி.

கோறல்-கொல்லுதல்.

கௌதுகம் - மங்கல காரியத்தின் தொடக்கத்தில் கையிற் கட்டப்படும் நூல். (ரக்ஷாபந்தனம்.)

சங்கேதம்-ஏற்பாடு.

சண்டகன்மம்-கடுந்தொழில்.

சண்டிகை - காளி, துர்க்கை.

சந்தி-பொருத்துதல்.

சபத்தினி-கணவனுடைய மற்றொரு மனைவி.

சமர்ப்பித்தல்-கொடுத்தல்.

சலதி-கடல்.

சாதகன்மம்-பிறந்த காலத்திற் குழந்தைகளுக்குச் செய்யும் சடங்கு. (சாதம்-பிறப்பு.)

சாதிக்கத்தக்கது - முடிக்கத் தக்கது.

சாமந்த அரசர்-சிற்றரசர்.

சாமம்-இன்சொற்சொல்லுதல்.

சாளரம்-சன்னல்.

சான்று-சாக்ஷி.

சிதை-சுடலைக்கண் அடுக்கும் விறகு.

சித்தம்செய்தல்-முன்னேற்பாடு செய்தல்.

சித்தியெய்தல்-பயனடைதல்.

சிறைவீடல்-சிறையினின்றும் விடுதலை செய்தல்.

சினந்து-கோபித்து.

சீலம்-ஒழுக்கம்.

சுடலை-சுடுகாடு.

சுயம்வரம்-தானே கணவனை நிச்சயித்தல்.

சுற்றக்குழுவினர்-உறவினராகிய கூட்டத்தார்.

சூலபாணி-சிவபிரான்.

சூழ்ச்சி-ஆராய்ந்து செய்யும் உபாயம்.

சூழ்வினைச் செயல்-ஆராய்ந்து செய்யப்படும் செய்கை.

செய்வல்-செய்வேன்.

சேய்-மகன்.

சேய்மை-தூரம்.

சேர்பு-அடைந்து.

சைனியம்-சேனைத்தொகுதி.

சொற்கிறைவி-சரசுவதி.

சோதித்தல்-ஆராய்ந்தறிதல்.

சோர்விலன்-செயலில் தளர் வில்லாதவன்.

சௌளம்-குடுமிவைக்கும் சடங்கு.

தமியள்-தனித்தவள்.

தலையாய-முதன்மை வாய்ந்த

தழீஇ-தழுவி.

தற்காப்பு-(கற்பின்வழுவாமல்) தன்னைப்பாதுகாத்துக்கொள்ளல்.

தாதை-தந்தை.

தாபதகுமாரன்-முனிபுத்திரன்.

தாபதன்-முனிவன்.

தாபம்-துக்கம்.

தானம்-கொடுத்தல்.

திக்குவிசயம்-திசையிலுள்ள அரசரை வெற்றி கொள்ளுதல்.

திண்மை-மனவுறுதி.

திருமஞ்சனம்-அரசர்க்கு முடிசூட்டு முன் செய்யப்படும் அபிடேகம்.

திவலை-துளி.

தீக்கடவுள்-அக்கினிதேவன்.

தீநிமித்தம்-தீயசகுனம்.

துற்றும்-நெருங்கிய.

தூதர்-தலை, இடை, கடையென மூவகைப் படுவர். இவருள் சந்தி விக்கிரகங்களுக்கு வேற்று வேந்தரிடைச் செல்லுங்கால் தானே வகுத்துக் கூறுபவன் தலையாவான்; கூறியதுகூறுவோன் இடையாவான்; ஓலைகொடுத்து நிற்போன் கடையாவான். இம்முறை வடநூலுட் கூறப்படுவதாகும். திருக்குறள் தூது என்னும் அதிகாரத்தில் "கடனறிந்து" என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையையும் நோக்குக. இந்நூலில் "தூதன்" என வருமிடங்கள் தோறும் இவ்வாறு பகுத் துணர்க. இவன் ஒற்றனின் வேறுபட்டவன்.

தூய்மை-பரிசுத்தம்.

தெய்வ ஊர்தி-தேவ விமானம்.

தெய்வ கன்னிகை-தேவ மாது.

தேசசு-ஒளி.

தேயம்-நாடு.

நச்சுப்பெண்கள்-தம்மைச் சார்ந்தாரை நஞ்சூட்டிக் கொல்லும் பெண்கள்.

நட்டோன்-நண்பன்.

நம்பல்-விருப்பம்.

நள்ளிரவு-இராப் பொழுதின் நடுக்கூறு.

நன்புலம்-நல்லிடம்.

நன்னிமித்தம்-நல்ல சகுனம்.

நன்று-நன்மை.

நாப்பண்-நடு.

நாள்-நக்ஷத்திரம்.

நிசி-இரவு.

நிபுணன்-திறமையுடையவன்.

நிமித்தம்-சகுனம், காரணம்.

நியமம்-நிச்சயம், முறை.

நியமனம்-ஏற்பாடு.

நிருமாணித்தல் } உண்டாக்குதல்.
நிருமித்தல் }

நிறைகுடம்-பூரணகும்பம்.

நிறைமதி-பூரணசந்திரன்.

நீதிப்பிரயோகம்-நியாய முறையில் மேற்கொண்ட முயற்சி.

நீறு-சாம்பல்.

நுகர்தல்-அநுபவித்தல்.

நுதல்-வெற்றி.

நேரம்-காலம்.

நேர்ந்துழி-வாய்த்தவிடத்து.

நொதுமலர்-பகையும் நட்புமில்லாதவர், அயலார்.

நோன்பு-விரதம்.

பகழி-அம்பு.

படைக்கலம்-ஆயுதம்.

பணி-ஏவல், வேலை.

பணிப்பெண்கள்-வேலைக்காரிகள்.

பண்டு-முன்.

பதி-தலைவன்.

பரபரப்பு-மிக்க விரைவு.

பரவசம்-தன்வசமில்லாமை.

பராக்கிரமம்-வீரம்.

பரிசனங்கள்-ஏவலாளர்.

பரிசில்-வெகுமதி.

பரிணயம்-கலியாணம்.

பருவம்-வயது, காலம்.

பலபடி-பலவிதம்.

பற்று-விருப்பம்.

பனுவலாட்டி-சரசுவதி.

பாசறை-பகைமேற் சென்றோர் தங்குமிடம்.

பாணி-கை.

பாணிக் கிரகணம்-கைப் பிடித்தல்.

பாத்தியம்-பெரியோருக்குப் பாதம் அலம்பக்கொடுக்கும் நீர்.

பானீயம்-குடித்தற் குரிய நீர் முதலியன.

பிடி-பெண் யானை.

பிணித்து-கட்டி.

பிதாமகன்-பாட்டன்.

பிரபாவம்-புகழ், பெருமை.

பிரபௌத்திரன் - பேரன்புதல்வன்.

பிரமதேஜசு-தவவலியால் முனிவர்க்கு உண்டாகும் ஒளி.

பிலம்-குகை.

பிழம்பு-திரட்சி.

பிறந்தநாள்-ஜன்மநட்சத்திரம்.

பிறழ்ச்சியுணர்வு - வேறுபட்ட அறிவு.

பிற்றைநாள்-மற்று நாள்.

புகலிடம்-அடைக்கலமாகப் புகுமிடம்.

புங்கவன்-உயர்ந்தவன்.

புடை-பக்கம்.

புண்ணீர்-இரத்தம்.

புதல்வற்பேற்றுத் திருவிழா - புதல்வன் பிறந்தமைக்காகச் செய்யும் உவகைக் கொண்டாட்டம்.

புத்திர காமேட்டி - புதல்வற் பேறு குறித்துச் செய்யும் யாகம்.

புரத்தல்-காத்தல்.

புரை-குற்றம்.

புரோகிதன் - வருங் காரியஞ் சொல்வோனும், சடங்கு செய்விப்போனும் ஆகிய பார்ப்பான்.

புலம்-இடம்.

புலனுதல்-வெளிப்படுதல்.

புழைக்கைமா-யானை. (புழை-துவாரம்)

புளகம்-மயிர் சிலிர்த்தல்.

புறக்கணித்தல்-அசட்டையாய் வேறொன்றைக் கருதியிருத்தல்.

பெட்டல்-விரும்புதல்.

பெயரிய-பெயரையுடைய.

பெருந்தேவி-பட்டத்தேவி.

பெறீஇ-பெற்று.

பேரவா-பெரு விருப்பம்.

பேருவகை-மிக்க மகிழ்ச்சி.

பேழை-பெட்டி.

பேறுகாலம்-பிரசவகாலம்.

பொருட்குழு-நிதித்திரள்.

பொருட்படுத்தல்-மதித்தல்.

பொருட்பெண்டிர் - வேசையர்.

பொருதல்-போர்செய்தல்.

பொருளுரை-பயன்நிறைந்த மொழி.

பொருளுறையில்லம் - பொக்கிஷ சாலை.

பொலிவு-அழகு.

பொறி-இயந்திரம்.

பொறிக்களிறு-இயந்திரத்தாற் செய்யப்பட்ட யானை.

பொற்கொடை - பொன்னை வழங்குதல்.

பொற்பு-அழகு.

பொன்றுத-கெடாத.

போக்குவரவு-போதல் வருதல்.

போதரல்-வருதல்.

போந்து-வந்து.
பௌத்திரன்-புதல்வன்மகன்.
மகப்பெறும் இல்லம் - பிரசவ வீடு.
மகவு-குழந்தை.
மகிமை-பெருமை.
மடவரல்-பெண்.
மணவறைவேதி-விவாகம்செய்யும் இடத்திலுள்ளமேடை.
மணவிழா-விவாகச் சிறப்பு.
மணவினை-விவாகச் செயல்.
மதி-சந்திரன்.
மந்திராலோசனை - அரசியற் சூழ்ச்சி.
மரபு-குலம்.
மருளன்-பித்தன்.
மலைமகள்மணாளன்-சிவபிரான்.
மழலைச்சொல்-குழந்தைகளின் பொருள் நிரம்பாத மென் சொல்.
மறவழி-பாவ மார்க்கம்.
மறை-இரகசியம்.
மனத்திட்பம்-மனவுறுதி.
மன்றல்-கலியாணம்.
மன்னிறைவன்-சக்கரவர்த்தி.
மாசு-குற்றம்.
மாந்தர்-மக்கள்.
மானம்-தன்னிலையில் தாழாமையாகிய பெருமை.
முகில்-மேகம்.
முதுமொழி-பழமொழி.
முற்பக்கம்-சுக்கிலபக்ஷம்.
முன்னுதல்-நினைத்தல்.
முன்னைப்பிதாமகன்-முதற்பாட்டன்.
மேதினி-பூமி.
மேம்பாடு-சிறப்பு.
மேனில இல்லம்-மேல்மாடம்.
யாண்டு-வருடம்.
யாண்டுமுதிர்வு-வயோதிகம்.
வசீகரித்தல்-வசமாக்குதல்.
வண்மை-கொடை.
வரித்தாள்-கணவனாக நிச்சயித்தாள்.
வலாரி-இந்திரன்.
வள்ளல் தன்மை-கொடைத் தன்மை.
வனப்பு-அழகு.
வாசவன்-இந்திரன்.
வாச்சியம்-வாத்தியம்.
வாட்படை-வாளாயுதம்.
வாரிதி-கடல்.
வாளா-சும்மா.
விசும்பு-ஆகாயம்.

விச்சை, விஞ்சை } வித்தை

விட்புலச்சொல்-ஆகாயவாணி.

விட்புலம்-ஆகாயம், தேவருலகம்.

விட்புலவேந்தன், விண்ணவர்இறை } இந்திரன்.

விது-சந்திரன்.

விம்மிதம்-ஆச்சரியம்.

விரதி-விரதமுடையான்.

விழிப்பு-கவனம்.

வினைஞர்-தொழிலாளர்.

வெல்லற்பாலன-வெற்றிகொள்ளத் தக்கன.

வென்றிச்செலவு-வெற்றிகொள்ளுதற்குச் செல்லும் பிரயாணம்.

வேட்கை-விருப்பம்.

வேட்டல்-மணம் செய்தல்.

வேதி-திண்ணை, மேடை.

வேதிகை-குறடு.

வேலை-கடல்.

வேள்வி-யாகம்.

வைப்பு-புதையல்.



# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | ஆராய்ச்சி மதிப்புரை. | |
| 4 | 15 | வணிக்குலம் | வணிககுலம் |
| | | பெயர் விளக்கம். | |
| 1 | 19 | இருசியமுகம் | இருசியமூகம் |
| 25 | 20 | மெரும! | பெரும! |
| 51 | 18 | பதுவாவதிக்கு | பதுமாவதிக்கு |
| 90 | 20 | கடக்கப்பெற்றான். | கடக்கப்பெற்றாள். |
| 107 | 4 | தெய்வபயத்தால் | தெய்வவயத்தால் |
| 123 | 15 | கோரன் | கோறன் |
| | | அரும்பத வுரை. | |
| | | பொன்னாத | பொன்றாத |

உ

மேலைச்சிவபுரிச்

# சன்மார்க்கசபை வெளியீடுகள்.

ஆசிரியர்:

பண்டிதமணி திரு. மு. கதிரேசச்செட்டியாரவர்கள்.

---

## 1. சுலோசனை (இரண்டாம் பதிப்பு)

இஃது, அரிய இனிய செந்தமிழ்நடையில் எழுதப் பட்டது; இலக்குவனால் அமரிடை மடிந்த தன் தலைவனாகிய இந்திரசித்துவின் பிரிவாற்றாது, யாவரும் வியக்குமாறு தன் கற்பின் திறத்தைப் புலப்படுத்தி இறுதியில் அருந்தழல்புகுந்த கற்பரசியாகிய சுலோசனையின் வரலாற்றைக் கூறுவது.

இதன்கண் அவலச்சுவையே சிறப்பாக நிலவுகின்றது; சுலோசனையின் அருங்கற்பும், பெருங்குணங்களும், அறிவுடைமையும் தலைவற் பிரிவால் துன்புறு நிகழ்ச்சிகளும், படிப்பார்க்கு வியப்பும் உருக்கமும் தோன்ற இன்புறுத்துவனவாம்; அறுபட்டனவாகிய கையும் தலையும் முறையே எழுதியதும் பேசியதும் கற்பின் ஆற்றலைப்புலப்படுத்துவனவாம். இப்பிறப்பிற் பயிலப் படாதாரைக் கண்டவிடத்து ஒரோவழியுண்டாம். அகநிகழ்ச்சிகளுக்கு முற்பிறப்பின் தொடர்பே காரணமென்பதும் இதன்கட் காணலாம்.

இஃது, ஆங்கில உயர்தரக்கல்லூரிகளிற் பாட புத்தகமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது; தமிழ்ப்பேராறிஞர் சிலர் எழுதிய சிறந்த மதிப்புரைகளுடன் அழகுற அச்சிடப் பட்டுள்ளது.

விலை ரூபா 0—4—0

## 2. உதயனசரிதம். (மூன்றும் பதிப்பு.)

இது, தெள்ளிய இனிய எளிய தமிழ்நடையா னமைந்தது; வற்சநாட்டின் தலைநகராகிய கௌசாம்பியி லிருந்து அரசுபுரிந்த சகச்சிராநீகன் புதல்வனாகிய உதயனனது வரலாற்றையும், அவன்மகன் நரவாகனதத் தன்வரலாற்றையும் சுருக்கி விளக்குவது. வடமொழியிற் பல நூல்களிலும் தமிழிற் பெருங்கதை என்னும் அரிய காப்பியத்திலும் சிற்சில வேறுபாட்டுடன் விரித்துக் கூறப்பட்டதும் இதுவேயாம்.

இதன்கண் அரசர்க்கு வேட்டையாடல் முதலிய வற்றால் வரும் தீங்கும், அறிவிற்சிறந்த அமைச்சர் சொல்வழி நிற்றலால் வரும் நலங்களும், சிறந்த அமைச் சனின் அரிய சூழ்ச்சி முதலிய செயல்களும், இடுக்கட் காலத்தும் மகளிர்கற்பு மாசுபடலாகாது என்பதும், ஒருவற்கு அமைந்த இரு மனைவியரின் அன்புகெழீஇய ஒற்றுமையும், அரசியல் விரிவதற்குச் செயற்பாலன இன்னவென்பதும், சிவவழிபாட்டின் பயனும், பிறவும் புலப்படுவனவாம். மாணவர்க்குப் பெரிதும் பயன்படும் வண்ணம் பெயர் விளக்கமும், அருஞ்பதக் குறிப்பும் இப்பொழுது சேர்க்கப்பட்டுள்ளன.

பற்பல கல்லூரிகளிற் பாடபுத்தகமாக ஏற்படுத் தப்பட்டுள்ளது. வனப்புமிக்க பதிப்பு.

விலை ரூபா 0—12—0

## 3. சுக்கிர நீதி.

இஃது, அறமுதலிய உறுதிப்பயன்கள் நான்கனுள் ஒன்றாகிய பொருளினையே விதந்து கூறுவது; தூய செந்தமிழ் நடையானமைந்தது; வடமொழியில் சுக்கிராசாரியர் விரித்துக்கூறிய ஔசநசம் என்னும் நூலின் சாரமாக இரண்டாயிரத்தறுநூறு சுலோக வடிவில் தொகுக்கப்பட்ட சிறந்த பொருள் நூலின் நேரான மொழிபெயர்ப்பாகும்.

அரசியல் அமைச்சியல் குடிகளியல்பு ஒழுக்க வகைகள் உழவு வாணிகம் போர்முறை முதலிய அரிய பல பொருள்களை விரித்து விளக்குவது; தமிழ் ஆங்கிலம் வடமொழிகளிற் சிறந்த பேரறிஞர்களால் எழுதப்பட்ட மதிப்புரைகளையும் விரிந்த ஆராய்ச்சியுரைகளையும் தன்னகத்தே யுடையது. தமிழில் இதுகாறும் வெளிப்படாத சில அரிய செய்திகளும் இதனால் அறியலாம். "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை" என்று கம்பநாடரால் முதற்சண்வைத்துப் பாராட்டப்பெற்ற வெள்ளிவிதிமுறை இதுவேயாகும்.

உயர்ந்த காகிதத்தில் சிறந்த முறையில் அச்சிடப்பெற்றது. காலிக்கோ கட்டிடம்.

விலை ரூபா 3—8—0

## 4. மண்ணியல் சிறுதேர்.

இது, வடமொழியில் புலமைமிக்க சூத்திரகன் என்னும் அரசனால் பல்வகைச் சுவைகளுக்கும் நிலைக்களமாக இயற்றப் பட்ட "மிருச்சகடிகம்" என்னும் பிரகரணநாடகத்தின் தமிழ்மொழிபெயர்ப்பாகும்; சொற்பொருளினிமைமிக்க பல திறப்பட்ட 371 செய்யுட்கள் இடையிடையே விரவப் பெற்ற பத்து அங்கங்களையுடைய உரைநடைநூலாகும்; ஆங்காங்கு அரும்பொருட்குறிப்புக்களையும் சிறந்த ஆராய்ச்சி மதிப்புரைகளையும் தன்னகத்தே யுடையது.

அந்தணர்குலத்துதித்து வாணிகத்தொழிலை மேற்கொண்ட வள்ளற்பெருமானாகிய சாருதத்தனும், அவன் பொருள் வறந்தநிலையில் அவன் அரிய குணங்களுக்கு ஈடுபட்டுக் காதல் மேற்கொண்ட கணிகை வசந்தசேனையும் இதன்கண் முக்கிய பாத்திரராவர்; அரசன் மைத்துனனாகிய கொடியவன் சகாரன் இழைத்த கொடுஞ்செய்கைகளால் இவ்விருவரும் பலவகை அல்லலுழந்து முடிவில் அறந்தலை காக்க உய்தி பெற்று இன்பவாழ்வெய்திய வரலாற்றை விரித்து விளக்கும் இதன்கண் வறுமைநிலையும், சூதினால் வரும் ஏதமும், நட்பின் பெருமையும், உண்மைக்காதலின் உயர்வும், கற்பறத்தின்பீடும், பிறர்க்குவிளைக்குந் தீங்கினால் வரும் துன்பமும், வள்ளன்மையின் மாண்பும், அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற்றாவதும், இடுக்கண்மிக்ககாலத்தும் இயலறம்பிழையாமையானுண்டாம் இன்பமும், பிறவும் அமைந்து கற்பார்க்குக் கழிபேருவகை அளிப்பனவாம்.

உயர்வகுப்பு மாணாக்கர்களுக்குப் பாடபுத்தகமாந் தகுதி வாய்ந்தது. உயர்ந்த காகிதத்தில் சிறந்தமுறையில் அச்சிடப் பெற்றுள்ளது.

விலை: காலிக்கோ பைண்டு ரூ. 2-4-0.

கிடைக்குமிடம்: ராப்பர் பைண்டு ரூ. 2.

**தலைவர், சன்மார்க்கசபை, மேலைச்சிவபுரி.**

Melasivapuri, P. O., Pudukkottah State.

